

# மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)



## தொலைநிலைக் கல்வி

## பி.லிட். (தமிழ்)

## மூன்றாமாண்டு

## தாள் - 4

## இலக்கணம் - 6

# தொல்காப்பியம் சொல்லதிகாரம்

DEC அங்கீகாரம் பெற்றது

wwwmkudde.org

**S 2815**

அன்புள்ள மாணவச் செல்வங்களே!

வணக்கம்!

பி.லிட் முதலிரண்டு ஆண்டுகள் செம்மையாகப் பயின்று மூன்றாமாண்டு அடியெடுத்து வைக்கும் உங்களை, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் தொலைநிலைக்கல்வித் தமிழ்த்துறை அன்போடு வரவேற்கிறது. மூன்றாமாண்டில் 'சுற்றுச்சூழலியல்' என்னும் பாடம் அனைத்துப்பட்ட வகுப்பு மாணவர்களுக்கும் பொதுவான பாடமாகும்.

முதலாமாண்டில் ஆறு தாள்களும், இரண்டாமாண்டில் ஏழு தாள்களும் பயின்ற நீங்கள் இந்த ஆண்டில் கற்க உள்ள பாடங்கள் மொத்தம் ஏழு. அவை பின்வருமாறு :

தாள் : 1 பண்டை இலக்கியம்

தாள் : 2 நீதி இலக்கியம்

தாள் : 3 இலக்கணம் 5 தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்

தாள் : 4 இலக்கணம் 6 தொல்காப்பியம் - சொல்லதிகாரம்

தாள் : 5 இலக்கணம் 7 தொல்காப்பியம் - பொருளதிகாரம்

தாள் : 6 மொழி பெயர்ப்பியல்

தாள் : 7 சுற்றுச் சூழலியல்

உங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பாடங்களை நன்கு படியுங்கள். நீங்கள் தானாகவே படித்துப் புரிந்து கொள்ளும் வகையிலேயே பாடங்கள் எளிமையாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. பாடங்களில் உள்ள தன் மதிப்பீட்டு வினாக்களுக்கும், பயிற்சி வினாக்களுக்கும் விடை எழுதிப் பயிலுங்கள். படிக்கும் போது ஐயங்கள் தோன்றின் ஐயத்தைத் தொடர்பு வகுப்புகளில் உங்களுக்குப் பாடம் நடத்த வரும் ஆசிரியர்களிடம் கேட்டுத் தெளிவு பெறலாம். நன்கு படித்துத் தேர்வில் வெற்றி பெற வாழ்த்துகிறோம். தொடர்பு வகுப்புகளுக்குத் தவறாது வந்து படித்துப் பயன் பெறுக.

பி,லிட்.,மூன்றாமாண்டு

தாள் 4 : இலக்கணம் 6

தொல்காப்பியம் - சொல்லதிகாரம்

(சேனாவரையர் உரை)

## பாடத்திட்டம்

கூறு - 1 கிளவியாக்கம்

கூறு - 2 வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு

கூறு - 3 பெயரியல், வினையியல்

கூறு - 4 இடையியல், உரியியல்

கூறு - 5 எச்சவியல்

# பாடங்களின் அமைப்பு


| பாட எண் | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|
| 1. | கிளவியாக்கத்தில் திணையும், பாலும் | 4 |
| 2. | கிளவியாக்கத்தில் இடமும், எண்ணும் | 14 |
| 3. | வேற்றுமையியலும், வேற்றுமை மயங்கியலும் | 25 |
| 4. | விளி மரபு | 46 |
| 5. | பெயரியல் | 57 |
| 6. | வினையியல் | 70 |
| 7. | இடையியல் | 88 |
| 8. | உரியியல் | 104 |
| 9. | செய்யுள் ஈட்டச் சொற்களும் பொருள்கோளும் | 125 |
| 10. | எச்சச்சொற்களும் மரபுச் சொற்களும் | 139 |

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## அறிமுகம்

(முன்னுரை-தொல்காப்பிய அறிமுகம்-நூலாசிரியர்-நூலின் சிறப்பு-பாடப்பகுதி-கிளவியாக்கம்-வேற்றுமையியல்-வேற்றுமை மயங்கியல்-விளிமரபு-பெயரியல்-வினையியல்-இடையியல்-உரியியல்-முடிவுரை)

## முன்னுரை

நூல் என்பது அனைத்து வகையான புத்தகங்களையும் உணர்த்தும். இருப்பினும் சிறப்பாக இலக்கணத்தினையே உணர்த்தும். எள்ளிலிருந்து எண்ணை எடுக்கப்படுவது போல, இலக்கிய வழக்கு, மொழி வழக்கு என இரண்டிலிருந்து எடுக்கப்படுவது, அவற்றின் இயல்புகளை திரட்டித் தருவது இலக்கணம் ஆகும்.

தமிழ் மொழியில் இலக்கண மரபு என்பது தனக்கெனத் தனி இடம் பெற்றுத் திகழ்வது ஆகும். அவ்வாறு தோன்றிய நூல்களுள் குறிப்பிடத்தக்கது தொல்காப்பியம். இது எழுத்து, சொல், பொருள் என்ற பாகுபாட்டினைக் கொண்டது. தொல்காப்பியத்தின் சொல்லதிகாரத்தைப் பற்றி விளக்குவது இதன் நோக்கமாகும்.

## தொல்காப்பிய அறிமுகம்

தமிழ் இலக்கண நூல்களுள் பழமையானது தொல்காப்பியம். தொல்காப்பியச் சொல்லதிகாரம் கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு, பெயரியல், வினையியல், இடையியல், எச்சவியல் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது. மொத்தம் - 463 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

தொல்காப்பியத்துக்கு, இளம்பூரணர், சேனாவரையர், தெய்வச்சிலையார், நச்சினார்க்கினியர் தொடங்கி இன்றுவரை பல உரைகள் வந்துள்ளன, அவற்றுள் சொல்லுக்கு சேனாவரையர் உரையே சிறப்பானது.

## நூலாசிரியர்

தொல்காப்பியத்தின் ஆசிரியர் தொல்காப்பியர், இவர் பழந்தமிழ்ப் பெருங்குடிகளுள் ஒன்றாகிய காப்பியக் குடியிலே தோன்றியவர் எனவும், தொல்காப்பியரென்ற இயற் பெயரினை உடையவர் எனவும் சிலர் உரைப்பர். தொல்காப்பியர் 'திரண தூமாக்கினி என்னும் இயற்பெயரினை உடையவர் எனவும், சமதக்கினியாரின் புதல்வராவர்' எனவும் சிலர் உரைப்பர்.

வடதிசை தாழத் தென்திசை யுயரக் கண்ட தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கித் தென்திசை போந்து, பொதியத்தில் தங்கி, முருகன் பால் தமிழ்க் கறறுத் தெளிந்த குறுமுனியாய் திகழ்ந்தவர் அகத்தியனார். அந்த அகத்தியனாரின் பன்னிரு மாணக்கர்களுள் ஒருவர் தொல்காப்பியர். "இடைச்சங்கத்தாருக்கும், கடைச்சங்கத்தாருக்கும் நூலாயிற்று தொல்காப்பியம்" என நுவல்வார் நக்கீரனார்.

## நூலின் சிறப்பு

இலக்கியம் கண்டதற்கே இலக்கணம் என்பது மொழி நூல் கொள்கை. எனவே இப்படியொரு இலக்கண நூல் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே

தன் மதிப்பீட்டு வினாக்கள்

தமிழில் தோன்றியிருக்கிறது என்றால், தமிழ் இலக்கிய வளம், இன்னும் எத்தனையாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய பழமைச் சிறப்புடையதாகச், செழிப்புடையதாகத் திகழ்ந்திருக்க வேண்டும் என்பதை எண்ணிப் பார்க்கிற எவருக்கும் செம்மொழி - செந்தமிழின், தொன்மை - மேன்மை புரியும். மன்பதையின் மூத்த குடி மொழி - தமிழே என்பது தெரியவரும்.

எழுத்துக்கும், சொல்லுக்கும், பொருளுக்கும் மட்டுமல்ல, காதலுக்கும், களவுக்கும், கற்புக்கும், போருக்கும், வீரத்திற்கும், மனிதர், விலங்கு, பறவைகள் என்று திணையும், பாலும், பெயரும் கூறும் இலக்கண அமைப்பை தமிழுக்குத் தொல்காப்பியம் என தொல்காப்பியர் தந்திருப்பது போல, வேறு யாரும் எந்த மொழிக்கும் தந்ததாகத் தெரியவில்லை. வேறு எந்த மொழியும் இந்த வளம் பெற்றிருப்பதான விவரமும் கிடைக்கவில்லை.

தொல்காப்பியனாரின் ஒரு சாலை மாணவராயிருந்தோரும் செந்நாப்புலவருமான பனம்பாரனார் இந்த அரிய நூலிற்குப் பாயிரம் ஒன்றினைச் செய்துள்ளார் அப்பாயிரம் வழியாக நூலின் அமைதியையும், நூலாசிரியரான தொல்காப்பியனாரின் சிறப்பினையும், 'நிலந்தரு திருவிற் பாண்டியன்' என்பானின் அவையகத்தே. அதங்கோட்டாசிரியரின் முன்பாக அரங்கேற்றப்பட்டதெனவும் அறியலாம்.

இத்தொல்காப்பியப் பெருநூலிற்கு உரைகண்ட பண்டைய உரையாசிரியர் பெருமக்கள் இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், கல்லாடர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் முதலியோராவர்.

## பாடப்பகுதி

தொல்காப்பியம் மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டது. அவையாவன 1. எழுத்ததிகாரம் 2. சொல்லதிகாரம் 3. பொருளதிகாரம். எழுத்ததிகாரம் - 483, சொல்லதிகாரம் - 463 பொருளதிகாரம் - 656 என மொத்தம் 1602 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

இங்குப் பாடப்பகுதியாக இருப்பது சொல்லதிகாரம் மட்டுமே. சொல் + அதிகாரம் = சொல்லதிகாரம். அதாவது சொல்லினது அதிகாரத்தை உடையது என்று பொருள்படும். 9 இயல்களை உடையது.

## கிளவியாக்கம்

பொருள் தரும் முறையிலே எழுத்துக்கள், சொற்கள் ஆகும் முறைமை கிளவியாக்கம் எனப்படும். கிளவியாக்கத்தில் திணை, பால், இடம், எண் பெறுகின்ற இம்முறைகளை விளக்குகின்ற இப்பகுதி மொத்தம் - 61 நூற்பாக்களைக் கொண்டதாகும்.

## வேற்றுமையியல்

பெயர் உருபேற்றுப் பொருள் வேற்றுமைப்படுகின்ற இயல்பு பற்றி விளக்கும் இயல் வேற்றுமையியல் ஆகும். வேற்றுமை உருபு, வேற்றுமை வகைகள் மற்றும் அதன் பொருட் பாகுபாடுகள் ஆகியவற்றை விளக்குகின்ற இப்பகுதி - 22 நூற்பாக்களைக் கொண்டதாகும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**வேற்றுமை மயங்கியல்**

வேற்றுமை யுருபுகள் தம்முள் மயங்கிப் பொருள் - வேறுபாடு கொள்ளுதலை விளக்கும் இயல் வேற்றுமை மயங்கியல் எனப்படும். இதன் கண் மொத்ததம் - 34 நூற்பாக்கள் உள்ளன.

**விளிமரபு**

பெயர்ச்சொற்கள் விளியினை ஏற்கும் முறையினைக் கூறும் இயல் விளிமரபு ஆகும். உயர்திணை, அஃறிணை மற்றும் விரவுப் பெயர்கள் விளியேற்கும் முறைகளை விளக்குகின்ற இப்பகுதியில் 37 நூற்பாக்கள் உள்ளன.

**பெயரியல்**

பெயர்ச்சொல்லின் இலக்கணம் பற்றி விளக்கும் இயல் பெயரியல் ஆகும். பெயர்ச்சொற்கள் உயர்திணைக் கண் வருவனவும், அஃறிணைக் கண் வருவனவும், விரவுத் திணைக் கண் வருவனவும் என மூன்று வகைப்படுவனவற்றை 43 நூற்பாக்கள் விளக்குகின்றன.

**வினையியல்**

வினைச் சொல்லின் இலக்கணத்தைக் கூறும் இவவ்வியலில் வினைமுற்று, வினையெச்சம், பெயரெச்சம் மற்றும் அதன் எச்ச வாய்ப்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன. இதன் கண் மொத்தம் 51 நூற்பாக்கள் உள்ளன.

**இடையியல்**

தனியாக வரும் தன்மையின்றி, பெயரோடும், வினையோடும் சேர்ந்து வரும் இடைச்சொல் மற்றும் அதன் வகைகளைப் பற்றி விளக்கும் இயல் இடையியல் எனப்படும். இதன்கண் மொத்தம் 48 நூற்பாக்கள் உள்ளன.

**உரியியல்**

ஒரு பொருட்கு உரிமை உடையதாயிருக்கும் பண்பை உணர்த்தும் சொல்லாம் உரிச்சொல் மற்றும் அதன் வகைகளை விளக்குகின்ற இப்பகுதியில் 100 நூற்பாக்கள் உள்ளன

**எச்சவியல்**

கிளவியாக்கம் முதல் உரியியல் வரை கூறாப்படாத சொல் பற்றிய விளக்கங்கங்களை எடுத்துரைப்பதால் இவ்வியல் எச்சவியல் ஆனது. இவ்வியலின் கண் மொத்தம் 67 நூற்பாக்கள் இடம்பெற்றுள்ளன.

**முடிவுரை**

மேற்குறிப்பிட்ட செய்திகளிலிருந்து தமிழ் பயிலும் ஒவ்வொருவரும் சிறப்பாக அறிந்து கற்று பேணிப் பாதுகாக்க வேண்டிய நூல் தொல்காப்பியம் எனில் சாலப் பொருத்தமுடைத்தாகும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

# அலகு - 1

## கிளவியாக்கம் - திணையும், பாலும்

### அறிமுகம்

பொருள் தரும் முறையில் எழுத்துக்கள், சொற்கள் ஆகும் முறைமை மற்றும் அதற்குத் திணையும், பாலும் அமைய வேண்டிய நெறிகள், அவ்வாறு திணை, பாலைக் குறிக்கும் சொற்கள் மொழியில் இடம் பெறும் பொழுது ஏற்கும் வழுவமைதி (கூறப்பட்ட விதிமுறையிலிருந்து பிறழ்ந்து (மாறி) வருதல்) வழா நிலை போன்றவைகளும் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

### நோக்கம்

சொல்லாக்கத்தில் திணையும் பாலும் அமைய வேண்டிய முறைகளை எடுத்துரைப்பதன் வழி மாணவர்களுக்கு பொருள்தரும் முறையில் எழுத்துக்கள் இணைய வேண்டிய முறைமையை அறியச் செய்வது இவ்வலகின் நோக்கமாகும்.

### பாட அமைப்பு

1. திணை

1.2 உயர்திணைக்குரிய பால்கள்

1.3 அஃறிணைக்குரிய பால்கள்

1.4 பால் வேறுபாடு (வழுவமைதி)

1.5 உயர்திணைக்குரிய பால் ஈறுகள்

1.5.1 ஆண்பாலுக்குரிய ஈறு

1.5.2 பெண்பாலுக்குரிய ஈறு

1.5.3 பலர்பாலுக்குரிய ஈறுகள்

1.6 அஃறிணைக்குரிய பால் ஈறுகள்

1.6.1 ஒன்றன் பாலுக்குரிய ஈறுகள்

1.6.2 பலவின் பாலுக்குரிய ஈறுகள்

1.7 இருதிணைக்குரிய ஈறுகள்

1.8 பெயரும் வினையும் (வழாநிலை)

1.9 பேடி என்னும் சொல்

1.10 வினா-விடை வழங்கும் முறை

1.11 இயல்பும், தகுதியும்

1.11.1 செய்யுள் வழக்கு

1.12 இயற்கை மற்றும் செயற்கைப் பொருள் வழங்கும் முறை

1.12.1 இயற்கைப் பொருள்

1.12.2 செயற்கைப் பொருள்

1.13 பால் ஐயமுள்ளன பொருந்தும் வகை

1.13.1 ஐயப்புலம் பொதுச் சொல் ஆதல்

1.13.2 பால் துணிந்த பின் அமையும் வகை

1.13.3 பால் வழு அமைதி

1.14 வண்ணச்சினைச்சொல்

பொருள் தரும் முறையில் எழுத்துக்கள், சொற்கள் ஆகும் முறைமை கிளவியாக்கம் ஆகும். அதில் திணையும், பாலும் அமையும் முறைகளைப் பின்வருமாறு காணலாம்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 1.1 திணை

மக்களை உயர்திணை என்றும் மக்கள் அல்லாத மற்றவற்றை எல்லாம் அஃறிணை என்றும் கூறுவர் அறிஞர் பெருமக்கள். மனிதர் தேவர், நரகர் உயர்திணை என்றும் உயிரில்லா நிலம், நீர் முதலியவையும் பறவை, விலங்குகளும் அஃறிணை என்றும் கூறப்படும்

*"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே*
*அஃறிணை என்மனார்அவர் அல பிறவே*
*ஆஇரு திணையின் இசைக்குமன் சொல்லே"* 1

இவ்விரு (ஆஇரு) திணைகள் பற்றியும் சொல்லப்படுபவை உயர்திணைச் சொல், அஃறிணைச் சொல் என இரண்டாம்.

1. திணை எத்தனை வகைப்படும்?

2. உயர்திணை என்றால் என்ன?

3, அஃறிணை என்றால் என்ன?

### 1.2 உயர்திணைக்குரிய பால்

*"ஆடுஉ அறிசொல் மகடூஉ அறிசொல்*
*பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி*
*அம்முப் பால்சொல் உயர்திணை அவ்வே"* 2

ஆண்மகனைக் குறிக்கும் சொல்லும், பெண்களைக் குறிக்கும் சொல்லும், ஒன்றுக்கு மேற்பட்ட பலரைக் குறிக்க வரும் சொல்லோடு பொருந்திய - இம்மூன்றும் உயர்திணைக்கான மூன்று பால்களாகும். (ஆண்பால், பெண்பால், பலர்பால்)

4. உயர் திணைக்குரிய பால்கள் எத்தனை வகைப்படும்?

### 1.3 அஃறிணைக்குரிய பால்கள்

ஒன்றை அறியச் சொல்வதும், பலவற்றைச் சுட்டச் சொல்வதும் என

5. அஃறிணைக்குரிய பால்கள் யாவை?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

இரண்டு பால்கள் (ஒன்றன் பால், பலவின் பால்) அஃறிணைக்கு உரியனவாகும்.

*"ஒன்று அறி சொல்லே பல அறிசொல் என்று*
*ஆஇரு பால் சொல் அஃறிணை அவ்வே"* 3

### 1.4 பால் வேறுபாடு (வழுவமைதி)

6. ஆண்மை திரிந்த பெயர்ச் சொல் எத்தகைய திணையைக் கொண்டு முடியும்?

உயர்திணையில் பெண்மைப் பண்பைக் குறிக்கும். ஆண்மை திரிந்த பெயர்ச்சொல்லும், தெய்வக் கடவுளர்களைக் குறிக்கும் பெயர்ச்சொல்லும், இவை என்று, தம்பொருள் உணர்த்தும் முடிவு பெறாது, உயர்திணையில் அதற்கான பாலாய் மாறுபட்டு வழங்கும் தன்மை உடையதாம்.

சான்று :

| | | |
|---|---|---|
| பேடி வந்தாள் | தேவன் வந்தான் | பேடியர் வந்தார் |
| தேவி வந்தாள் | தேவர் வந்தார். | |

### 1.5 உயர்திணைக்குரிய பால் ஈறுகள்

உயர்திணைக்குரிய பால்கள் ஆண்பால், பெண்பால், பலர்பால் என்று முன்பே விளக்கப்பட்டுள்ளன. அவற்றுக்குரிய பால் ஈறுகள் பின்வருமாறு

#### 1.5.1 ஆண்பாலுக்குரிய ஈறு

7. 'சாத்தன்' 'முருகன்' - இச்சொற்கள் எப்பாலைக் குறிக்கின்றன?

*"னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்"* 5

னகரப்புள்ளி எழுத்தை முடிவிலே உடைய சொல்லே ஆண்பால் பெயரைக் குறிக்கும் சொல்லாம்.

சான்று : கரியன் உண்பன் உண்டனன்

#### 1.5.2 பெண்பாலுக்குரிய ஈறு

*"ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்"* 6

'ள' கரப்புள்ளி எழுத்தை முடிவிலே உடைய சொல்லே பெண்பால் பெயரைக் குறிக்கும் சொல்லாம்.

8. பெண் பாலுக்கான ஈறு எது?

சான்று : உரியள் உண்பள் உண்பாள்

#### 1.5.3. பலர்பாலுக்குரிய ஈறுகள்

ரகரப்புள்ளியை முடிவிலே உடைய சொல்லும், பகரம் முடிவாகக் கொண்டு வரும் சொல்லும், 'மார்' என முடியும் இடைச்சொல் ஆகிய இம்மூன்றுமே பலரைக் குறிக்கும் சொல்லாகும்.

9. பலர் பாலுக்குரிய ஈறுகள் எவை?

*"ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்*
*மாரைக் கிளவி உளப்பட மூன்றும்*
*நேரத் தோன்றும் பலரறி சொல்லே"* 7

சான்று : கரியர் உண்பர் கேண்மார்

### 1.6 அஃறிணைக்குரிய பால் ஈறுகள்

அஃறிணைக்குரிய பால்கள் ஒன்றன் பால், பலவின் பால் என்று முன்பே விளக்கப்பட்டுள்ளன. அவற்றுக்குரிய பால் ஈறுகள் பின்வருமாறு

#### 1.6.1 ஒன்றன்பாலுக்குரிய ஈறுகள்

அஃறிணை ஒன்றன் பாலைக் குறிக்கும் சொல்லாவது, த்,ற்,ட் என்னும் மெய்யெழுத்துக் கூடிய குற்றியலுகரம் முடிவில் வரும் சொல் ஆகும்.

*"ஒன்று அறி கிளவி தறட ஊர்ந்த*
*குற்றியல் உகரத்து இறுதி ஆகும்"* 8

சான்று : வந்தது கூயிற்று உண்டு

#### 1.6.2 பலவின்பாலுக்குரிய ஈறுகள்

*"அ,ஆ,வ என வரூஉம் இறுதி*
*அப்பால் மூன்றே பல அறிசொல்லே"* 9

அ,ஆ,வ என்னும் சொற்களை முடிவாகக் கொண்டு வரும் சொற்கள் மூன்றும், 'பல' என்பதைக் குறிக்கும் பலவின்பால் சொற்கள் ஆகும்.

சான்று: உண்பன உண்ணா உண்குவ

### 1.7 இருதிணைக்குமுரிய ஈறுகள்

உயர்திணை, அஃறிணை என்னும் இரண்டு திணைகளிலும், ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்னும் ஐந்து பால்களும் வெளிப்பட, அந்தந்தச் சொல்லின் முடிவில் நின்றொலிக்கும் பதினோரு எழுத்தும், வினைச்சொல் உறுப்பாய்த் தோன்றும்.

*"இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய*
*ஈற்றில் நின்று இசைக்கும் பதினோரு எழுத்தும்*
*தோற்றம் தாமே வினையொடு வருமே"* 10

வினைச்சொல் உறுப்பாய்த் தோன்றும், பதினோரு எழுத்துக்களாவன; உயர்திணையில் ஆண்பால் குறிக்கும் 'ன்', பெண்பால் குறிக்கும் 'ள்' பலர்பால் சுட்டும் ர், ப, மார். அஃறிணையில் ஒன்றன்பால் குறிக்க வரும் து,று,டு பலவின்பால் குறிக்கும் அ,ஆ,வ என்பனவாகும்.

### 1.8 பெயரும், வினையும் (வழா நிலை)

வினையில், பால் உணர்த்தும் சொல்லும், பெயரில் பால் உணர்த்தும் சொல்லும் ஒரு பால் சொல் மற்றொரு பால் சொல்லோடு கலந்து விடாமல் அவை, அவை அவ்வவற்றிற்குரிய பால் உடன் பொருந்தி வழங்கி வர வேண்டும்.

*"வினையில் தோன்றும் பால் அறி கிளவியும்*
*பெயரில் தோன்றும் பால் அறி கிளவியும்*

தன் மதிப்பீட்டு வினாக்கள்

10. ஒன்றன் பாலுக்கான மூன்று குற்றியலுகர ஈறுகள் எவை?

11. பலவின் பாலுக்குரிய ஈறுகள் எத்தனை?

12. இரு திணைக்குமுரிய ஈறுகளின் எண்ணிக்கை எத்தனை?

13. பெயரும், வினையும் எதனோடு பொருந்தி வர வேண்டும்?

| தன் மதிப்பீட்டு வினாக்கள் | |
|---|---|
| | *மயங்கல் கூடா தம மரபினவே"* 11 |
| | சான்று : அவன் வந்தான் அவள் வந்தாள் |
| | அது வந்தது அவை வந்தன |
| 14. வழாஅல் ஓம்பல் என்றால் என்ன? | இவை பெயரும், வினையும் பாலொடு பொருந்தி வரும் சரியான முறையாகும். |

### 1.9 பேடி என்னும் சொல்

ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி என்பது, ஆண்மை கெட்ட பேடியைக் குறிக்கும். எனவே இச்சொல் ஆண்மைத் தன்மை அறியும் சொல்லுடன் சேர்ந்து வருவதற்கு இடம் இல்லை. பெண்பால் சொல்லுடனேயே சேர்த்துச் சொல்லப்படும்.

சான்று : பேடி வந்தான் என்று வழங்குதல் இல்லை. பேடி வந்தாள் என்றே சொல்லப்படும்

15. 'வினாவும் செப்பே வினா எதிர்வரினே - விளக்குக.

### 1.10 வினா - விடை வழங்கும் முறை

வினாவும், விடையும் பிழையின்றிப் பேணுதல் நல்லதாகும். அப்பொழுதுதான் பொருள் மயக்கம் ஏற்படாது.

*"செப்பும், வினாவும் வழாஅல் ஓம்பல்"* 13

கேள்விக்குப் பதிலும் ஒரு கேள்வியாக வருவதும் உண்டு.

*"வினாவும் செப்பே வினா எதிர்வரினே"*

சான்று : 'உணவு உண்டனையோ' எனும் வினாவுக்கு விடையாக 'உண்ணாதிருப்பேனோ' என வரும்.

*"செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே*
*அப்பொருள் புணர்ந்த கிளவியான"* 14

16. விடையில் முதல் சொல்லை அடுத்து சினைச்சொல் வர இயலுமா?

ஒரு வினாவுக்க விடையாகச் சொல்லப்படும் பதிலுரையாக இல்லாமல் சற்றே மாறுபட்டு வரினும் அது ஒரு குற்றமாகக் கருதி நீக்கத் தேவை இல்லை.

சான்று :

'உணவு உண்டனையா?' என்ற கேள்விக்கு 'உண்டேன்' என்பதே நேரடியான விடை என்றாலும், பசிக்கவில்லை என்று வருவது விலக்கத்தக்கதல்ல எனக் கொள்ள வேண்டும்.

பதிலாகச் சொல்லுமிடத்தும் (செப்பினும்) கேள்வியிலும் (வினாவினும்) சினைச் சொல்லும், முதல் சொல்லுக்கும் ஒப்புவமை, அந்த அந்த பொருளுக்கு, அந்த அந்தப் பொருளே ஆகும்.

*"செப்பினும் வினாவினும் சினைமுதல் கிளவிக்கு*
*அப்பொருள் ஆகும் உறழ் துணைப் பொருளே"* 16

சான்று :

'இவள் கண்ணின் அவள் கண் பெரிது'. 'எம் மன்னன் ஒப்பன் நும் மன்னன்' என்றும், இவள் கண்ணின் அவள் கண் பெரிதோ? எம் மன்னனை நும் மன்னன் ஒப்பனோ எனவும் வரும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## 1.11 இயல்பும், தகுதியும்

ஒன்றின் தகுதி பற்றியும், வழக்கில் பழக்கத்தில் பயன்படுவதுமான சொற்கள் நீக்கத்தக்கவை அல்ல.

*"தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்*
*பகுதிக் கிளவி வரைநிலை இலவே"* 17

சான்று : இடுகாட்டை 'நன்காடு' என்பது தகுதி பற்றி வந்த வழக்கு

அடுப்பின் அடிபாகத்தை 'மீ அடுப்பு' எனல் வழக்கில் வந்த சொல்

### 1.11.1 செய்யுள் வழக்கு

இனம் இல்லாதபோது பண்பு குறித்து வழங்கப்படும் அடைப்பெயர்கள் செய்யுளில் மட்டுமே பயிலப்படுவதே அன்றி, உலக வழக்கில் வருவன அல்ல.

17. செய்யுள் வழக்கு என்றால் என்ன?

*"இனச் சுட்டு இல்லா பண்புகொள் பெயர்க்கொடை*
*வழக்காறு அல்ல செய்யுள் ஆறே"* 18

சான்று : செஞ்ஞாயிற்று நிலவு வெண்திங்களுள் வெயில்

## 1.12 இயற்கை மற்றும் செயற்கைப் பொருள் வழங்கும் முறை

இயற்கை பொருளை இயல்பாகவும், செயற்கைப் பொருளை செயற்கைக்குக் காரணமான சொல்லைச் சொல்லி விளக்க வேண்டும்.

18. இயற்கைப் பொருளை எவ்வாறு கூற வேண்டும்?

### 1.12.1 இயற்கைப் பொருள்

இயல்பான தன்மை மாறாதிருக்கும் பொருட்களைப் பற்றிச் சொல்லுமிடத்து, அதன் இயல்பான தன்மை இது என்று சொல்லுதல் வேண்டும்.

19.செயற்கைப் பொருள் என்றால் என்ன?

*"இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்"* 19

சான்று :

இயற்கைப் பொருட்களாவன நிலம், நீர், நெருப்பு, காற்று என உள்ளவை. இவற்றின் இயல்பான தன்மை, நெருப்பு சுடும், நீர் குளிர்ச்சியானது என்பதே, இதற்குக் காரண, காரிய விளக்கம் வேண்டுவதில்லை.

20.செயற்கைப் பொருளை ஆக்கமின்றி கூறலாமா?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 1.12.2 செயற்கைப் பொருள்

இயல்பாக இல்லாமல் ஒரு பொருள் இயற்கைக்கு மாறாக இருப்பின், அந்த மாற்றத்திற்குக் காரணமான சொல்லைச் சொல்லி விளக்க வேண்டும்.

*"செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்"* 20

இயல்பானது மாறி செயற்கை ஆனதற்குக் காரணமான ஆக்கச் சொல்லை முதலில் கூற வேண்டும்.

சான்று :

தீச்சார்தலால் நீர் வெய்யதாயிற்று

*"ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்*
*போக்கு இன்று என்ப - வழக்கினுள்ளே"* 22

செயற்கையான காரியம் நிகழக் காரணமான ஆக்கச் சொல் முதலில் கூறப்பட வேண்டும் என்று கூறப்பட்டாலும், உலக வழக்கில் காரணமின்றி வந்தாலும் அது குற்றமாகக் கொள்ளத்தக்கதல்ல என்று சொல்வர்

சான்று : மயிர் நல்ல வாயின பயிர் நல்ல வாயின

### 1.13 பால் ஐயமுள்ளன பொருந்தும் வகை

பால் மயக்கம் உள்ள இடத்து, அதன் திணைப் பன்மைச் சொல்லாகச் சொல்லுவதே முறையாகும்.

*"பால் மயக்கு உற்ற ஐயக்கிளவி*
*தான் அறிபொருள் வயின் பன்மை கூறல்"* 23

சான்று :

'ஆண் மகன் கொல்லோ பெண் மகள் கொல்லோ இங்குத் தோன்றுவார்' எனவும் 'ஒன்றோ பலவோ வயலில் இறங்கின எனவும் வரும் 'திணைவயின்' என்னாது 'தான் அறி பொருள் வயின்' எனப் பொதுப் படக் கூறியவதனால், 'ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ கறவையுய்த்த கள்வர்' எனவும் 'ஒருத்தி கொல்லோ பலர் கொல்லோ இக் குறுக்கத்தி நிழல் வண்டல் அயர்ந்தார்' எனவும் திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மையொருமைப்பால் ஐயமும் கொள்ளப்படும்.

### 1.13.1 ஐயப்புலம் பொதுச் சொல்லாதல்

உருபு எனச் சொல்லுமிடத்தும் ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப்படும். அஃறிணைப் பொதுச் சொல்லிடத்தும், இவ்விரண்டு பகுதியினும் ஐயப்புலம் பொதுச் சொல்லாதல் உரித்து ஆகும்.

21. பொதுச் சொல் என்றால் என்ன?

சான்று :

'ஆண் மகன் கொல்லோ பெண்மகள் கொல்லோ தோன்றி நின்ற உருவு' எனவும் ஒன்று கொல்லோ பல கொல்லோ செய்புக்க பெற்றம், எனவும் வரும்.

### 1.13.2 பால் துணிந்த பின் அமையும் வகை

*"தன்மை சுட்டலும் உரித்து என மொழிப*
*அன்மைக் கிளவி வேறிடத்தான"* 25

ஐயப்பட்டுத் துணியுமிடத்து, அண்மைச் சொல் துணியாப் பொருளிடத்து அண்மைத் தன்மையைச் சுட்டி நிற்றலும் வண்டு என்று சொல்லுவர் புலவர். எனவே துணிந்த பொருளின் மீது அண்மைச் சொல் சுட்டி வருதலும் உண்டு.

சான்று :

'குற்றி கொல்லோ மகன் கொல்லோ'

மகனென்று துணிந்தவழிக் குற்றியல்லன் மகன் எனவும் குற்றியென்று துணிந்த வழி மகனன்று குற்றி எனவும் அன்மைத் தன்மையைச் சுட்டி நின்றன.

### 1.13.3 பால் வழு அமைதி

ஒருவனையும், ஒருத்தியையும் சொல்லும் பன்மைச் சொல்லும் ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும் உலக வழக்கின் கண் உயர்த்திச் சொல்லும் சொல்லாகும். இவை இலக்கண முறைமையாற் சொல்லும் வழக்கல்ல.

*"ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்*
*ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்*
*வழக்கின் ஆகிய உயர் சொற் கிளவி*
*இலக்கண மருங்கிற் சொல்லாறு அல்ல.* 27

### 1.14 வண்ணச் சினைச் சொல் அமையும் வகை

வண்ணச் சினைச்சொல் என்பது, பண்புச் சொல், சினைச் சொல், முதல் சொல் என்ற மூன்றும் முறை மாறாமல் வழக்கொடு பொருந்தி வரும்.

*"அடை சினை முதல்என முறைமூன்று மயங்காமை*
*நடைபெற்று இயலும் வண்ணச் சினைச் சொல்"* 28

சான்று : செங்கால் நாரை செம்மை - பண்புச் சொல்

கால் - சினைச் சொல் நாரை - முதல் சொல்

எனவே 'செங்கால் நாரை' என முறை மாறாமல் கூறுதலே வழக்கொடு பொருந்திய முறையாகும்.

## தொகுப்புரை

பொருள் தரும் முறையில் எழுத்துக்கள், சொற்கள் ஆகும். முறைமை மற்றும் அதற்குத் திணையும் பாலும் அமைய வேண்டிய நெறிகள், அவ்வாறு திணை, பாலைக் குறிக்கும் சொற்கள் மொழியில் இடம் பெறும் பொழுது

தன் மதிப்பீட்டு வினாக்கள்

22.வழுவமைதி என்றால் என்ன?

23. வண்ணச் சினைச் சொல் என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

ஏற்கும் வழுவமைதி, வழாநிலை போன்றவை இப்பகுதியில விளக்கப்பட்டுள்ளன.

இவை மட்டுமின்றி இயல்பு, தகுதி மற்றும் செய்யுள் வழக்கு, கிளவியாக்கத்தில் இயற்கை மற்றும் செயற்கைப் பொருள் அமையும் முறை, வினா - விடை அமையும் முறை ஆகிய அனைத்தும் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

## தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| 1,2,3 | - | 1.1 ஐப் பார்க்க |
| 4 | - | 1.2 ஐப் பார்க்க |
| 5 | - | 1.3 ஐப் பார்க்க |
| 6 | - | 1.4 " |
| 7 | - | 1.5.1 " |
| 8 | - | 1.5.2 " |
| 9 | - | 1.5.3 " |
| 10 | - | 1.6.1 " |
| 11 | - | 1.6.2 " |
| 12 | - | 1.7 " |
| 13 | - | 1.8 " |
| 14,15,16 | - | 1.10 " |
| 17 | - | 1.11.1 " |
| 18 | - | 1.12.1 " |
| 19,20 | - | 1.12.2 " |
| 21 | - | 1.13.1 " |
| 22 | - | 1.13.3 " |
| 23 | - | 1.14 " |

## பயிற்சி வினாக்கள்

### ஒரு பக்க வினாக்கள்

1. திணை எத்தனை வகைப்படும்? விளக்குக.
2. உயர்திணைக்குரிய பால்கள் எத்தனை? சான்றுடன் விளக்குக.
3. செயற்கைப் பொருளை எவ்வாறு கூற வேண்டும்?

4. வினாவும், விடையும் அமையும் முறைகளைத் தொகுத்துரைக்க.

5. வண்ணச் சினைச் சொல் என்றால் என்ன? சான்றுடன் விளக்குக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**கட்டுரை வினாக்கள்**

1. பால் எத்தனை வகைப்படும்?

2. இயல்பு, தகுதி மற்றும் செய்யுள் வழக்குகளைச் சான்றுடன் விளக்குக.

3. இயற்கை மற்றும் செயற்கைப் பொருள் மொழியில் இடம் பெறும் விதத்தினைக் கட்டுரையாக்கு.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

# அலகு - 2

## கிளவியாக்கம் - இடமும், எண்ணும்

### அறிமுகம்

கிளவியாக்கத்தில் தன்மை, முன்னிலை, படர்க்கை இடத்தில் வரும் நான்கு வகை வினைச் சொற்கள், எண் பெறும் இடம், மற்றும் வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல் போன்ற பகுதிகள் விளக்கப்பட்டுள்ளன.

### நோக்கம் :

கிளவியாக்கத்தில் இடமும், எண்ணும் பெறுமிடத்தை விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

### பாட அமைப்பு

2.1 இடம்

2.1.1 தன்மை, முன்னிலைக்குரியவை

2.1.2 படர்க்கைக்குரியவை

2.2 யாது? எவன்? என்னும் வினா

2.2.1 யாது என்னும் சொல்

2.3 சினை முதற் சொல்

2.3.1 நிலையாமைக்குரிய சொல்

2.4 இல்லாமைக்குரிய சொல்

2.5 இயற்பெயரும், சுட்டுப் பெயரும்

2.6 இயற்பெயரும், சிறப்புப் பெயரும் அமையும் முறை

2.7 இடவழுவமைதி

2.8 எண்

2.9 வியங்கோள் வினையும் எண்ணுப் பெயரும்

2.10 பன்மைக்குரிய சொற்கள்

2.11 இரட்டைக் கிளவி

2.12 பன்மை பற்றியன (உயர்திணை அஃறிணை)

2.13 செய்யுளில் - உயர்திணையும் அஃறிணையும்

2.14 பலபொருள் ஒரு சொல் அமையும் முறை

2.14.1 வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல்

2.14.2 வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல்

2.14.3 வழுவமைதி

2.15 திணைப்புறனடை

தொகுப்புரை

கிளவியாக்கத்தில் மூவகை இடங்களுக்குரிய வினைச் சொற்கள், எண் பெறும் இடம் மற்றும் வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல் போன்றவைகள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன

## 2.1 இடம்

பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்ற நான்கும் தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடங்களுக்கு உரியனவாகும். செல்லுதல், வருதல், தருதல், ஈதல் என்னும் நான்கு செயல்கள் மூன்றிடத்திற்கும் உரியனவாகும்.

*"செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்*
*நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்*
*தன்மை முன்னிலை படர்க்கை என்னும்*
*அம் மூஇடத்தும் உரிய என்ப"* 28

### 2.1.1. தன்மை, முன்னிலைக்குரியவை

நான்கு சொற்களின் தருசொல், வருசொல் என்னும் இரண்டும் தன்மை, முன்னிலை ஆகிய இரு இடங்களுக்கே உரியன.

சான்று : எனக்குத் தந்தான் நினக்குத் தந்தான்
என்னிடம் வந்தான் நின்னுழை வந்தான்

### 2.1.2 படர்க்கைக்குரியவை

நான்கு சொற்களுள் கொடைச் சொல்லும், செலவுச் சொல்லும் மற்ற இடமான படர்க்கை இடத்துக்கு உரியன.

*"ஏனை இரண்டும் ஏனை இடத்த"* 30

சான்று : அவன்கட் சென்றான் ஆங்குச் சென்றான்
அவர்க்குக் கொடுத்தான் என வரும்

## 2.2 யாது? எவன்? என்னும் வினா

யாது? எவன்? என்னும் இந்த இரண்டு சொற்களும் அறியாப் பொருள் பற்றி அறிந்து கொள்ள வினாவாகத் தோன்றி வரும்.

சான்று : இதற்குப் பொருள் யாது? இதற்குப் பொருள் எவன்?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

1. சொல் எத்தனை வகைப்படும்?

2. இடம் எத்தனை வகைப்படும்?

3. தருதல், வருதல் என்னும் செயல்கள் எவ்விடத் திற்குரியன?

4. படர்க்கை இடத்திற்குரிய ஏனை இரண்டு சொற்கள் எவை?

5. அறியாப் பொருளை அறியச் செய்யும் வினா எது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

6. சினைமுதல் சொல் என்றால் என்ன?

7. மன் என்பதன் பொருள் யாது?

8. 'அப் பொருள் கூறின் சுட்டிக் கூறல்' - விளக்குக.

**2.2.1 யாது என்னும் சொல்**

*"அவற்றுள்*
*யாது என வரூஉம் வினவின் கிளவி*
*அறிந்த பொருள் வயின் ஐயம் தீர்தற்குத்*
*தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே* 32

யாது? எவன் என்னும் இந்த இரண்டில் யாது என்னும் கேள்விப் பொருள் தரும் வினாச் சொல், தெரியாத ஒரு பொருள் பற்றித் தெரிந்து கொள்ள கேட்கப்படுவதல்லாமல், தெரிந்த ஒரு பொருள் பற்றிய ஐயப்பாட்டைப் போக்கிக் கொள்ள உதவும் சொல்லாகும்.

**2.3 சினை முதற் சொல்**

இத்துணை எண்ணிக்கை என அறிந்த சினைப் பெயருக்கும், முதற் பொருளுக்கும் வினைத்தொகுதிப் பெயருடன் பொருந்த உம்மை சேர்த்துச் சொல்ல வேண்டும்.

*"இனைத்து என அறிந்த சினை முதல் கிளவிக்கு*
*வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்"* 33

சான்று : 'பன்னிரு கையும் பாற்பட இயற்றி'
'முரசு முழங்குதானை மூவரும் கூடி'

**2.3.1. நிலையாமைக்குரிய சொல்**

இல்லாத பொருளுக்கு இடம், காலம் இவற்றோடு இல்லாமை கூறும் பொருளுக்கு உம்மை வர வேண்டும்.

*"மன்னாப் பொருளும் அன்ன இயற்றே"* 34

சான்று : குருடு காண்டல் பகலும் இல்லை

**2.4 இல்லாமைக்குரிய சொல்**

ஒருவன் ஏதாவது ஒரு பொருளை 'அது அல்லது இல்' என்னும் வாய்பப்பாட்டால் கூறுவானானால், அப்பொருளைக் கூறாது வேறு ஒரு பொருளைக் கூற வேண்டும்.

*"எப்பொருள் ஆயினும் அல்லது இல் எனின்*
*அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல்"* 35

சான்று : பயறு உளவோ வணிகீர் என்று வினாவிய வழி 'உழுந்தல்லது இல்லை' கொள்ளல்ல தில்லை' என்று பிறிது பொருள் மேலிடக் கூறியதாகும்.

*"அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்"* 36

இல் எனும் வாய்ப்பாட்டிற்கேற்ப வேறு பொருள் சொல்ல, கேட்ட அப்பொருளையே சொல்லுகிறபோது, கேட்ட பொருளையே சுட்டி அதாவது பயறு அல்லது வேறு இல்லை எனக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும் என்பது பொருள்.

சான்று : பசும் பயறல்லதில்லை பெரும் பயறல்லதில்லை

## 2.5 இயற் பெயரும் சுட்டுப் பெயரும்

பொருளோடு சேர்ந்து வரும் சுட்டுப் பெயரானாலும், பொருளோடு சேராத சுட்டுப் பெயரானாலும், பொருள் வேறாவது இல்லை. பெயர் சுட்டிச் சொன்ன பொருளையே அது குறிக்கும்.

*"பொருளோடு புணராச் சுட்டுப் பெயர் ஆயினும்*
*பொருள் வேறுபடாஅது ஒன்று ஆகும்மே"* 37

இயற்பெயர் ஒரு பொருளுக்கு இயல்பாக ஏற்பட்ட அல்லது முதலில் இடப்பட்ட பெயர் சுட்டுப் பெயர் ஒன்றைச் சுட்டிக் காட்டிச் சொல்லும் பெயர், இந்த இரண்டு பெயருமே ஒரு வினை பற்றி முடியும் நிலை உண்டாகும் போது சுட்டுப் பெயரை முன்னதாகக் கூறாமல் இயற்பெயரை முன்னே சொல்லிப், பின்னரே சுட்டுப் பெயரைச் சொல்ல வேண்டும் என்று கூறுவர் புலவர் பெருமக்கள்

*"இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப் பெயர்க் கிளவியும்*
*வினைக்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின்*
*சுட்டுப் பெயர்க் கிளவி முற்படக் கிளவார்*
*இயற்பெயர் வழிய என்மனார் புலவர்"* 38

இயற்பெயர், சுட்டுப் பெயர்களில் வினை பற்றி வரும் போது, இயற்பெயரையே முதலில் சொல்ல வேண்டும் என்று முன் சூத்திரத்தில் கூறப்பட்டிருந்தாலும், சுட்டுப் பெயரை முன்னதாகச் சொல்லுதல் செய்யுள் வழக்கில் உள்ள முறையாகும்.

*"சுட்டு முதல் ஆகிய காரணக் கிளவியும்*
*சுட்டுப் பெயர் இயற்கையில் செறியத் தோன்றும்"* 40

சுட்டெழுத்தை முதலாகக் கொண்ட காரணப் பொருள் உணர்த்தும் சொல்லும், சுட்டுப்பெயர் போலத் தன்னால் ஒரு பொருளை உணர்த்தச் சுட்டப்படும் சொல்லும், அப்படி உணர்த்தும் சொல்லுக்குப் பின்னரே வரும்.

சான்று : கந்தன் நன்கு எழுத வல்லவன். அதனால் தந்தை மகிழ்வார்

## 2.6 இயற்பெயரும், சிறப்புப் பெயரும் அமையும் முறை

ஒருவரின் தகுதி, சிறப்பு பற்றிச் சொல்லப்படும் சிறப்புப் பெயர்களைச் சொல்லும்போது, இயற்பெயர் முன்னதாகச் சொல்லமாட்டார்கள். சிறப்புப் பெயரை முதலில் சொல்லிப் பிறகே இயற்பெயரைக் கூறுவர்.

*" சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்*
*இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்"* 41

சான்று : தெய்வப்புலவர் திருவள்ளுவர், நாவலர் சோமசுந்தர பாரதி

ஒரு பொருளைப் பற்றிய பல பெயர்கள் ஒரு தொழிலோடு முடியாது, பல வினைகளோடு முடியுமானால் இது ஒரு பொருளைப் பற்றியதாகாமல்,

தன் மதிப்பீட்டு வினாக்கள்

9. சுட்டுப் பெயர் என்றால் என்ன?

10. இயற்பெயர் என்றால் என்ன?

11. சிறப்புப் பெயர் என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

வேறு வேறு பெயர்களைப் பற்றியதாகவே முடியும்.

*"ஒரு பொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி*
*தொழில்வேறு கிளப்பின் ஒன்று இடன் இலவே"* 42

சான்று :

ஆசிரியன் இளங்கண்ணன் வந்தான் என்பது ஒரு பொருள் குறித்தது. ஆசிரியன் வந்தான், இளங்கண்ணன் சென்றான் என்று வேறு வேறான வருதல், செல்லுதல் எனும் தொழில் பற்றி வரும்போது ஒருவரைக் குறிக்காது வேறு வேறான இருவரைக் குறித்தது.

## 2.7 இடவழுவமைதி

தன்மை, அஃறிணைச் சொற்கள் இரண்டும் ஒன்றாய்க் கலந்து வருதல் விலக்கத்தக்கதல்ல. அவை கலந்து வருதல் இயல்பே ஆகும்.

*"தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவி என்று*
*எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்"* 43

12. இட வழுவமைதிக்குச் சான்று தருக.

சான்று :

யானும், என் குதிரையும் வந்தோம். இதில் யான் என்னும் உயர்திணைத் தன்மைச் சொல்லும், குதிரை என்னும் அஃறிணைப் பெயரும் கலந்து வந்துள்ளன.

## 2.8 எண்

ஒன்றைக் குறித்துச் சொல்லப்படும், பொதுப்பால் பிரிசொல்லாகிய ஒருவன், ஒருத்தி என்னும் சொற்கள் ஒருமைக்கே உரியனவே அல்லாது. ஒன்றுக்கு மேலான இருமை எண்ணு முறையில் நிலைபெறா.

13. ஒருவன், ஒருத்தி ஒருமையா? பன்மையா?

*"ஒருமை எண்ணின் பொதுப் பிரி பாற்சொல்*
*ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது"* 44

பொதுப்பிரி பாற்சொல் ஒருவர் என்பது இருவர், மூவர் என்று வரும் ஆனால் ஒருமையில் வரும் ஒருவன், ஒருத்தி என்பன இருவன், இருத்தி என வாரா.

## 2.9 வியங்கோள் வினையும், எண்ணுப் பெயரும்

வியங்கோள் வினையோடு வரும் எண்ணுப்பெயர் திணை கலந்து வருதலை நூலறிவுடையோர் நீக்கார்.

14. வியங்கோள் வினைமுற்றுக்குச் சான்று தருக.

சான்று :

'ஆவும், ஆயனும் செல்க' - என்பது திணை கலந்து வந்தது.

## 2.10 பன்மைக்கு உரிய சொற்கள்

வேறு வேறு செயல்களைக் குறிக்கும் வினைச் சொற்களைப் பெற்று

முடியும் பொதுச்சொல்லை, ஒரு பொருளுக்குரிய வினையால் சொல்லமாட்டார்கள்.

*"வேறு வினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்"* 46

அடிசில் என்பது உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன என்னும் நான்கு வகையான செயல்பாட்டிற்கும் பொதுவான ஒரு சொல் ஆதலின் அடிசில் அயின்றார் அல்லது அடிசில் மிசைந்தார் என்றும் சொல்ல வேண்டுமே அல்லாது, அடிசின் தின்றார் என்று கூறுதல் இலக்கண வழு ஆகும்.

*"எண்ணும் காலும் அது அதன் மரபே"* 47

வேறு வேறான வினைக்கு உரியவற்றைப் பொதுச் சொல்லால் கூறாமல், பிரித்துக் கூறினாலும் எண்ணிப் பார்க்குமிடத்து அதன் இலக்கணம் ஒரு வினையால் கூறாது, பொது வினையால் கூறுதலே ஆகும்.

சான்று : யாழும் குழலும் இயம்பினர்

யாழ் இசைப்பது, குழல் ஊதுவது. (குழல் ஊதுவது, கொட்டுதல், ஊதுதல், எழுப்புதல் என்பதற்குப் பொதுவான சொல் இயம்புதல்) எனவே யாழும், குழலும் ஊதினர் எனின் அது இலக்கண வழுவாகும்.

### 2.11 இரட்டைக் கிளவி

இரட்டித்து நின்று பொருள் உணர்த்துவது இரட்டைக்கிளவி ஆகும். இவை தனித்தோ, பிரிந்து நின்றோ பொருள் தராது.

*"இரட்டைக் கிளவி இரட்டின் பிரிந்து இசையா"* 48

சான்று : கறு கறுத்தது குறு குறுத்தது

### 2.12 பன்மைக்கு உரியன

*"ஒரு பெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்*
*தெரிபு வேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்*
*உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்* 49

ஓர் இடத்தில் உள்ள பல பொருள்களுக்கும் பொதுவான ஒரு பெயராக வரும் சொல்லை, அங்குள்ள மற்ற பொருள்களின் தன்மை அறிந்து, அப்பொருளின் தலைமைப் பண்பு பற்றித் தெரிந்து கூறுதல் உயர்திணை, அஃறிணை என்னும் இரண்டிற்கும் ஏற்புடையதாகும்.

சான்று :

தமிழர் இருப்பு - என்பது மற்றவரும் குடியிருக்கும் இடம் என்றாலும், தமிழர் தலைமை பற்றி வந்தது (உயர்திணை)

மாந்தோப்பு - பிற மரங்களும், செடிகளும் உள்ளதென்றாலும் மாமர மிகுதியால் பன்மை பற்றி வந்தது (அஃறிணை)

தன் மதிப்பீட்டு வினாக்கள்

15. பன்மைக் குரிய சொற்களை வரிசைப்படுத்துக.

16. இரட்டைக் கிளவி என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

17. உயர் திணையும், அஃறிணையும் கலந்து எண்ணப்பட்ட பெயர் எத்திணையைக் கொண்டு முடியும்?

18. குடிப் பெயர்கள் என்றால் என்ன?

19.பலபொருள் ஒருசொல் எத்தனை வகைப்படும்?

### 2.13 உயர்திணையும் அஃறிணையும்

உயர்திணை, அஃறிணை என்னும் இரண்டிலும் பெயராலும், வினையாலும் பொதுவாக இல்லாமல் பிரிந்து ஆண்பாலாவும், பெண்பாலாகவும் வழக்கில் வருவன எல்லாம் ஏற்கத்தக்கனவே அன்றிக் குற்றம் எனக் கூறி விலக்கத் தக்கன அல்ல.

*"பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்*
*மயங்கல் கூடா வழக்கு வழிப்பட்டன"* 50

சான்று :

"தொடியோர் கொய்குழை அரும்பிய குமரி ஞாழல் நம்பி நூறு எருமை உடையான்" இதில் தொடி என்பதற்கு வளையல், காப்பு, கடகம் என்று பொருள் உண்டாயினும் தொடி உயர்திணைப் பெண்டிரைக் குறித்தது. நம்பி நூறு எருமை உடையான் என்பது அஃறிணைப் பெயரில் பிறந்தது. (பொருட்டு பொதுவாய் நிற்கும் இவை ஒரு பாற்கு உரியவையாய் வந்தது.)

பெரும்பாலும் திணைகலந்து எண்ணப்பட்ட பெயர், செய்யுளால் அஃறிணைச் சொல் கொண்டே முடியும். உயர்திணைச் சொல் கொண்டு முடிதலும் குற்றமாகாது.

சான்று :

"பாணன் பறையன் துடியன் கடம்பனென்று
இந் நான்கல்லது குடியும் இல்லை"

என்ற புறநானூற்றுப் பாடலில் வரும் பாணன், பறையன், துடியன், கடம்பன் என்று வரும் பெயர்கள் ஆண்பால் பெயர்களல்ல. இவை குடிப்பெயர்கள். எனவே அஃறிணைச் சொல் முடிவில் வந்தது.

### 2.14 பலபொருள் ஒரு சொல் அமையும் முறை

1) வினை வேறுபடும் பலபொருள் ஒரு சொல்

2) வினை வேறுபடாப் பலபொருள் ஒரு சொல்

என்று பலபொருள் ஒரு சொல் இருவகையாகும்.

*"வினைவேறு படூஉம் பல பொருள் ஒருசொல்*
*வினை வேறுபடா அப்பலபொருள் ஒருசொல் என்று*
*ஆஇரு வகைய பலபொருள் ஒரு சொல்"* 52

#### 2.14.1 வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல்

ஒரு பொருளுக்கே சிறந்த வினையாலும், இனத்தாலும், சார்பாலும் பொருள் அறியுமிடத்து பொதுத்தன்மை நீங்கித் தெளிவுபெறத் தோன்றும்.

*"அவற்றுள்*
*வினை வேறு படூஉம் பலபொருள் ஒருசொல்*
*வேறுபட்டு வினையினும் இனத்தினும் சார்வினும்*

*தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே* 53

சான்று :

மா என்பது ஒரு விலங்கிற்கும் ஒரு மரத்திற்கும் பொதுவானது.

1) மாப்பூத்தது
2) மாவும் மருதும் ஓங்கின } என்பதில் வேறுபாடு வினையாலும், இனத்தாலும் மரம் என்று விளங்கியது.

1. 'கவசம் புக்கு நின்ற மா' - என்னும்போது குதிரை என்பது சார்பினால் விளங்கிற்று.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

20. மா என்பதன் பொருள் யாது?

### 2.14.2 வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல்

ஒத்த வினையைக் கொண்டவிடத்து, வேறுபடாது தோன்றுகின்ற வினை வேறுபடாத பல்பொருள் ஒருசொல் ஆராய்ந்து, பார்க்குமிடத்து, விதந்து தெளிந்தாகச் சொல்லப்படும்.

"*ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்*
*வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்*
*நினையும் காலைக் கிளந்தாங்கு இயலும்*" 54

21. வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல் சான்று தருக.

சான்று :

1. மாமரம் வீழ்ந்தது
2. விலங்குமா வீழ்ந்தது

### 2.14.3 வழுவமைதி

"குறித்தோன் கூற்றம் தெரித்து மொழி கிளவி" 55

ஒரு பொருள் குறித்து அறிந்து சொல்ல இதுவரை கூறப்பட்ட முறைகளில் விளக்கம் பெற இயலாது போனால், கருத்தைத் தெளிவாகப் பிரித்தறிந்து உணர வேண்டும்.

22. 'குறித்தோன் கூற்றம் தெரித்து மொழி கிளவி' விளக்குக.

சான்று :

நாறு மருவி நளிமலை நன்னாட

### 2.15 திணைப் புறனடை

"*குடிமை ஆண்மை இளமை மூப்பே*
*அடிமை வன்மை விருந்தே குழுவே*
*பெண்மை அரசே மகவே குழவி*
*தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி*
*காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல் என்று*
*ஆஅறு மூன்றும் உளப்படத் தொகைஇ*
*அன்ன பிறவும் அவற்றொடு சிவணி*

தன் மதிப்பீட்டு வினாக்கள்

*முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்*
*உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்*
*அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்"* 56

குடிமை தொடங்கி ஆண்மை, இளமை, மூப்பு அடிமை, விறற்சொல் என்று சொல்லப்பட்ட பதினெட்டும் அதுபோன்று குறிப்பினால் உணர்த்திச் சொல்லப்பட்ட வேறுபல சொற்கள் எல்லாம் உயர்திணைப் பொருள் உணர்த்துவனவாக இருந்தாலும், அஃறிணைப் பொருள் உணர்த்தி நிற்கும்போது அஃறிணைச் சொல் கொண்டே முடியும்.

சான்று :

குடிமை நன்று      குடிமை தீது

அடிமை நன்று      அடிமை நல்ல

## 2.16 பாலுக்குப் புறனடை

காலம் முதலாகச் சொல்லப்பட்ட பத்தும், அத்தன்மை உடைய வேறு பிற பாகுபாட்டுடன் வரும் சொற்கள் எல்லாம், உயர்திணைச் சொற்களாக இருந்தாலும், அஃறிணையின் பால் வேறுபட்டு ஒலிக்காமல் அஃறிணைப் பாலாகவே ஒலிக்கும்.

*"காலம் உலகம் உயிரே உடம்பே*
*பால் வகை தெற்வம் வினையே பூதம்*
*ஞாயிறு திங்கள் சொல் என வரூஉம்*
*ஆயீர் ஐந்தொடு பிறவும் அன்ன*
*ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்*
*பால் பிரிந்து இசையா உயர்திணை மேன"* 57

சான்று :

உலகம் பசித்தது      திங்கள் எழுந்தது
உயிர் போயிற்று      வினை விளைந்தது
தெய்வம் தந்தது

## 2.17 இடப் புறனடை

காலம் முதலான சொற்கள் ஈற்றில் மாற்றமின்றி உயர்திணையாகவே நின்று ஒலித்தல் இங்கு வழக்கமில்லை.

சான்று :

*காலம் கொண்டான். உலகோர் பழித்தனர்*

*"எடுத்தமொழி இனம் செப்பலும் உரித்தே"* 60

ஒத்த பல பொருட்களில் ஒன்றிற்கு இனமான ஒரு பொருளை சிறப்பித்துக் கூறும்போது, அச்சொல், தனக்கு இனமான பிற பொருட்களைக் குறிப்பால் உணர்த்துதற்கும் உரியது.

சான்று :

'நல்லது செய்தார் நலமே பெறுவார்' இதில் நல்லது செய்யாது அல்லது செய்பவர் நலம் பெறார் என்பதை உணர்த்திற்று.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 2.18 எண்ணுக்குப் புறனடை

*"கண்ணும் தோளும் முலையும் பிறவும்*
*பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி*
*பன்மை கூறும் கடப்பாடு இலவே*
*தம் வினைக்கு இயலும் எழுத்து அலங்கடையே"* 61

கண் முதலாகிய சொற்களும், பிற சொற்களும் பன்மையானவாக இருப்பினும் பன்மையிலேயே சுட்டப்பட வேண்டும் என்ற கட்டாயமில்லை. முதல் ஒருமையானால் ஒருமையிலும், முதல் பன்மையாக இருப்பின் பன்மையிலும் சுட்டப்படலாம்.

சான்று : கண்ணல்லள் கண்ணல்லர்

### தொகுப்புரை :

கிளவியாக்கத்தில் தன்மை, முன்னிலை, படர்க்கை இடத்தில் வரும் நான்கு வகை வினைச் சொற்கள், எண் பெறும் இடம் மற்றும் வினை வேறுபடும் பலபொருள் ஒரு சொல் போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

### தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| 1,2 | - | 2.1 | ஐப் பார்க்க |
| 3 | - | 2.1.1 | " |
| 4 | - | 2.1.2 | " |
| 5 | - | 2.2 | " |
| 6 | - | 2.3 | " |
| 7 | - | 2.3.1 | " |
| 8 | - | 2.4 | " |
| 9 | - | 2.5 | " |
| 10,11 | - | 2.6 | " |
| 12 | - | 2.7 | " |
| 13 | - | 2.8 | " |
| 14 | - | 2.9 | " |
| 15 | - | 2.10 | " |
| 16 | - | 2.11 | " |
| 17,18 | - | 2.13 | " |

| | | | |
|---|---|---|---|
| தன் மதிப்பீட்டு வினாக்கள் | 19 - | 2.14 | ஐப் பார்க்க |
| | 20 - | 2.14.1 | " |
| | 21 - | 2.14.2 | " |
| | 22 - | 2.14.3 | " |

**பக்க வினாக்கள்**

1. தருசொல், வருசொல், செலவு, கொடை ஆகிய நான்கு சொற்கள் மூன்றிடத்திற்கு வரும் முறையை விளக்குக.
2. இல்லாமைக்குரிய சொல் குறித்து எழுதுக.
3. மொழியில் இயற்பெயரும், சுட்டுப்பெயரும் அமையும் முறையை விளக்குக.
4. செய்யுளில் உயர்திணையும், அஃறிணையும் அமைந்துள்ள முறைகளை விளக்குக.
5. வியங்கோள் வினையும், எண்ணும்பெயரும் அமைந்துள்ள விதத்தினை விளக்குக.

**கட்டுரை வினாக்கள்**

1. கிளவியாக்கத்தில் எண்பெறும் இடம் பற்றிக் கட்டுரைக்க
2. பலபொருள் ஒரு சொல் என்றால் என்ன? அதன் வகைகளை விளக்கி வரைக.

# அலகு - 3

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## வேற்றுமையியலும், வேற்றுமை மயங்கியலும்

### அறிமுகம்

வேற்றுமையியலும், வேற்றுமை மயங்கிலும் என்னும் பகுதியில் வேற்றுமை மற்றும் அதன் வகைகள் விளக்கப்பட்டுள்ளன. வேற்றுமை உருபுகள் தம்முள் மயங்கிப் பொருள் வேறுபட நிற்கும் பகுதிகளும் விளக்கப்பட்டுள்ளன.

### நோக்கம்

பெயர் வேற்றுமை உருபேற்று பொருள் வேற்றுமைப்படுவதை வேற்றுமையியலிலும், வேற்றுமை உருபுகள் தம்முள் மயங்கிப் பொருள் வேறுபட நிற்கும் பகுதிகளை வேற்றுமை மயங்கிலும் தெளிவுப்படுத்துவதே இப்பகுதியின் நோக்கமாகும்.

### பாட அமைப்பு

3.1 வேற்றுமை, வகை மற்றும் உருபுகள்

3.2 முதல் வேற்றுமை

3.2.1 எழுவாய் ஏற்கும் பயனிலைகள்

3.2.2 தொகைப் பெயரும் பயனிலை கொள்ளல்

3.2.3 தோன்றா எழுவாய்

3.2.4 பெயரில் உருபு

3.2.5 பெயரின் இயல்பு

3.3 இரண்டாம் வேற்றுமை

3.3.1 இரண்டாம் வேற்றுமைப் பொருள் பாகுபாடு

3.4 மூன்றாம் வேற்றுமை

3.4.1 மூன்றாம் வேற்றுமைப் பொருட் பாகுபாடு

3.5 நான்காம் வேற்றுமை

3.5.1 நான்காம் வேற்றுமை பொருட் பாகுபாடு

3.6 ஐந்தாம் வேற்றுமை

3.6.1 ஐந்தாம் வேற்றுமை பொருட் பாகுபாடு

3.7 ஆறாம் வேற்றுமை

| | |
|---|---|
| தன் மதிப்பீட்டு வினாக்கள் | 3.7.1 ஆறாம் வேற்றுமை பொருட் பாகுபாடு<br>3.8 ஏழாம் வேற்றுமை<br>3.8.1 ஏழாம் வேற்றுமை உருபுகள்<br>3.9 வேற்றுமைத் தொகை, விரிவு<br>3.10 வேற்றுமை மயக்கம்<br>3.10.1 வேற்றுமை மயக்கம் - சினைப் பெயரில்<br>3.10.2 கன்றல், செலவுப் பொருளில் வேற்றுமை மயக்கம்<br>3.10.3 முதல் மற்றும் சினைப்பெயரில் வேற்றுமை மயக்கம்<br>3.10.4 பிண்டப் பெயரில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.5 உயர்வுப் பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.6 ஏதுப் பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.7 நோக்கப் பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.8 உடைமைப் பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.9 தடுமாறு பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.10 பாதுகாத்தல் பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.11 வாழ்தல் பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.12 கொடைப் பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.13 அச்சப் பொருளில் - வேற்றுமை மயக்கம்<br>3.10.14 புறனடை<br>3.11 உருபுகளின் இயல்பு<br>3.12 உருபு விரிவு<br>3.13 வேறு உருபேற்றல் மற்றும் தொக்கி வருதல்<br>3.13.1 தொக்கி நில்லா இடங்கள்<br>3.13.2 வேற்றுமை உருபு பற்றியது<br>3.14 உருபுகளின் திரிபு<br>3.15 உருபு மயக்கம்<br>3.15.1 உருபு மயக்கம் - சிறப்பு விதி<br>3.16 வேற்றுமைக்கு ஏது தொழில் முதல் நிலை எட்டு<br>3.16.1 எட்டில் குறைதல்<br>3.17 ஆகுபெயர்<br>3.17.1 ஆகுபெயர் - வேறுபாடு<br>3.17.2 அளவு - நிறைப்பெயர் |

3.18 புறனடை

வேற்றுமை அதன் வகைகள் மட்டுமின்றி வேற்றுமை உருபுகள் தம்முள் மயங்கிப் பொருள் வேறுபடும் வேற்றுமை மயக்கங்களும் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளன.

### 3.1 வேற்றுமை, வகை மற்றும் உருபுகள்

பெயர் உருபேற்று பொருள் வேற்றுமைப்படுதலை விளக்கும் இயல் வேற்றுமை இயல் ஆகும்.

*"வேற்றுமை தாமே ஏழென மொழிப"* 62

வேற்றுமை ஏழு என்று கூறுவர் புலவர் பெருமக்கள்

*"விளி கொள்வதன்கண் விளியொடு எட்டே"* 63

விளித்தல் - அழைத்தல் தொழில் உடையதையும் சேர்த்து எண்ண வேற்றுமை எட்டாகும்.

*"அவைதாம்*
*பெயர் ஐ ஒடு கு*
*இன் அது கண் விளி என்ன ஈற்ற"* 64

அந்த எட்டென்று சொல்லப்பட்டவையாவன (அவைதாம்) பெயர் ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி வேற்றுமையை முடிவாகக கொண்டனவாகும்.

### 3.2 முதல் வேற்றுமை

*"அவற்றுள்*
*எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே* 65

பெயர் தோன்றி நிற்கும் நிலை உடையது. எழுவாய் வேற்றுமை முதல் வேற்றுமையாகும். தனி உருபு இல்லாதது.

சான்று : அவன் ஆ

#### 3.2.1 எழுவாய் ஏற்கும் பயனிலைகள்

*"பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்*
*வினைநிலை உரைத்தல் வினாவிற்கு ஏற்றல்*
*பண்புகொள வருதல் பெயர்கொள வருதல் என்று*
*அன்றி அனைத்தும் பெயர்ப் பயனிலையே"* 66

பொருளின் உண்மைத் தன்மை கூறுதல், ஏவல் பொருள் தருதல், வினை உரைத்தல், வினாப் பொருளுடன் தொடர்தல், பண்புடைச்சொல் கொள்ள வருதல், பெயர்கொண்டு முடிதல் என்ற அனைத்து முடிவுகளும் எழுவாய் வேற்றுமையின் பயனிலைகளாம்

சான்று : ஆவுண்டு ஆ செல்க

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

1. வேற்றுமை என்றால் என்ன?
2. வேற்றுமை உருபுகளை வரிசைப்படுத்துக.
3. எழுவாய் வேற்றுமை என்றழைக்கப்படுவது எது.
4. எழுவாய் ஏற்கும் பயனிலைகள் எவை?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

ஆ கிடந்தது அஃதி யாது
ஆ நல்லது அவன் கண்ணன்

### 3.2.2 தொகைப் பெயரும் பயனிலை கொள்ளல்

*“பெயரின் ஆகிய தொகையுமார் உளவே*
*அவ்வும் உரிய அப்பாலான”* 67

பெயரும், பெயர் சேர்ந்த தொகையும் கூட எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளத் தக்கன.

சான்று :

மதிமுகம் வியர்த்தது

### 3.2.3 தோன்றா எழுவாய்

*“எவ்வயின் பெயரும் வெளிப்படத் தோன்றி*
*அவ்இயல் நிலையல் செவ்விது என்ப”* 68

தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடத்துப் பெயர்களும் வெளிப்படப் பொருள்தர நின்று பயனிலை கொள்ளுதலே சிறப்புடையதாகும்.

5. பெயரில் உருபு எவ்வாறு இடம் பெறும்?

### 3.2.4 பெயரில் உருபு

*“கூறிய முறையின் உருபுநிலை திரியாது*
*ஈறு பெயர்க்கு ஆகும் இயற்கைய என்ப”* 69

ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்று முன்பு வரிசையாகக் கூறிய உருபுகள் தம் தன்மை மாறாது, பெயர்க்கு இறுதியாக நிற்கும் தன்மையனவாகும்.

6.வினையால - ணையும் பெயர் காலம் காட்டுமா?

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சான்று : | முருகன் | - | ஐ | - | முருகனை |
| | முருகன் | - | ஒடு | - | முருகனொடு |
| | முருகன் | - | கு | - | முருகற்கு |
| | முருகன் | - | இன் | - | முருகனின் |
| | முருகன் | - | அது | - | முருகனது |
| | முருகன் | - | கண் | - | முருகன்கண் |

### 3.2.5 பெயரின் இயல்பு

*“பெயர்நிலைக் கிளவி காலம் தோன்றா*
*தொழில்நிலை ஒட்டும் ஒன்று அலங்கடையே”* 70

பெயர்ச்சொல் காலம் காட்டாது. வினைச்சொல்லோடு பொருந்தி வினையாலணையும் பெயராக இல்லாத இடத்து. வினையாலணையும் பெயரே காலம் காட்டும்.

சான்று :

கந்தன். இது காலம் காட்டுவதில்லை. உண்டான், வந்தான் என்கிறபோது (இறந்த) காலம் காட்டி நின்றது.

### 3.3 இரண்டாம் வேறுமை உருபு (ஐ)

*"இரண்டாகு வதே*
*ஐ எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி*
*எவ்வழிவரினும் வினையே வினைக்குறிப்பு*
*அவ்விரு முதலில் தோன்றும் அதுவே"* 71

இரண்டாம் வேற்றுமையின் உருபு என்பது, 'ஐ'. இது எவ்விடத்து வருமாயினும் வினையும், வினைக் குறிப்பும் என்று இரண்டிடத்தும் தோன்று பொருளாகும்.

சான்று :

குடத்தை வனைந்தான்

### 3.3.1 இரண்டாம் வேற்றுமைப் பொருள் பாகுபாடு

*"காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்*
*ஒப்பின் புகழின் பழியின் என்றா*
*பெறலின் இழவின் காதலின் வெகுளியின்*
*செறலின் உறுத்தலின் கற்பின் என்றா*
*அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்*
*நிறுத்தலின் அளவின் எண்ணின் என்றா*
*ஆக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்றா*
*அன்னபிறவும் அம்முதற் பொருள*
*என்னகிளவியும் அதன்பால் என்மனார்"* 72

காப்பு தொடங்கிச் சிதைப்பு வரையிலான இருபத்தெட்டு பொருள்களும், அவை போன்ற பிறவுமான அம்முதல் பொருள் மேல்வரும் எல்லாச் சொல்லும், இரண்டாம் வேற்றுமையின் பாற்பட்டவை என்பர் புலவர்

சான்று :

1. ஊரைப் புரக்கும்
2. தந்தையை ஒக்கும்
3. எயிலை இழைக்கும்
4. கிளியை ஓப்பும்
5. பொருளை இழக்கும்
6. நாணை அறுக்கும்
7. மரத்தைக் குறைக்கும்
8. நெல்லைத் தொக்கும்
9. வேலியைப் பிரிக்கும்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

7. வினை, வினைக்குறிப்பு என இரண்டிற்கும் தோன்றும் வேற்றுமை எது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

10. அறத்தை ஆக்கும்
11. காட்டைச் சிதைக்கும்
12. தேரை ஊரும்
13. நாட்டைப் புகழும்
14. தீதைப் பழிக்கும்
15. புதல்வரைப் பெறும்
16. மனைவியைக் காதலிக்கும்
17. பகைவரை வெகுளும்
18. செற்றாரைச் செறும்
19. நட்டாரை உவக்கும்
20. நூலைக் கற்கும்
21. பொன்னை நிறுக்கும்
22. அரியை அளக்கும்
23. அடைகாயை எண்ணும்
24. ஊரைச் சாரும்
25. வழியைச் செல்லும் சூதைக் கன்றும்
26. சிலையை நோக்கும்
27. கள்வரை அஞ்சும்
28. புதரைச் சிதைக்கும்     என வரும்.

8. மூன்றாம் வேற்றுமை உருபு எது?

## 8.4 மூன்றாம் வேற்றுமை உருபு (ஒடு)

*"மூன்றாகுவதே*
*ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி*
*வினை முதல் கருவி அனைமுதற்று அதுவே"*  73

மூன்றாம் வேற்றுமை உருபு 'ஒடு' ஆகும். இது வினை முதல், கருவி என்னும் இரண்டையும் பொருளாகக கொண்டது.

சான்று :   வேலொடு வந்தான்

## 3.4.1 மூன்றாம் வேற்றுமை, பொருட் பாகுபாடு

*"அதனின் இயறல் அதற்றகு கிளவி*
*அதன் வினைப்படுதல் அதனின் ஆதல்*
*அதனின் கோடல் அதனொடு மயங்கல்*
*அதனொடு இயைந்த ஒருவினைக் கிளவி*
*அதனொடு இயைந்தவேறு வினைக்கிளவி*
*அதனொடு இயைந்த ஒப்பல் ஒப்புரை*
*இன்ஆன் ஏது ஈங்கென வரூஉம்*
*அன்ன பிறவும் அதன்பால் என்மனார்"*  74

அதனின் இயறல் தொடங்கி இன், ஆன், ஏது என்பது முடிய இவ்விடங்களில் வருவனவும், இவை போன்ற பிறவும் மூன்றாம் வேற்றுமையின் பாகுபாடுகள் என்பர் புலவர் பெருமக்கள்

சான்று :

1. மண்ணால் இயன்ற குடம்
2. வாயாற்றக்கது வாய்ச்சி
3. சாத்தான் முடிக்குமிக் கருமம்
4. வாணிகத்தானாயினான்
5. பொன்னால் கொண்ட பொருள்
6. எண்ணொடு விராய அரிசி
7. ஆசிரியனொடு வந்த மாணவன்
8. மலையொடு பொருதமால் யானை
9. பொன்னோடு இரும்பனையர் நின்னொடு பிறரே

### 3.5 நான்காம் வேற்றுமை உருபு (கு)

"*நான்காகுவதே*
*'கு' எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி*
*எப்பொருள் ஆயினும் கொள்ளும் அதுவே"* 75

நான்காம் வேற்றுமை உருபு 'கு' ஆகும். அது எப்பொருளையும் ஏற்கும்.

சான்று : கந்தனுக்கு மகன்

### 3.5.1 நான்காம் வேற்றுமை - பொருட் பாகுபாடு

"*அதற்கு வினை உடைமையின் அதற்கு உடம்படுதலின்*
*அதற்குப் படுபொருளின் அது ஆகு கிளவியின்*
*அதற்கு யாப்புடைமையின் அதன்பொருட்டு ஆதலின்*
*நட்பின் பகையின் காதலின் சிறப்பின் என்று*
*அப்பொருட் கிளவியும் அதன்பால் என்மனார்"* 76

நான்காம் வேற்றுமைக்கு வினை உடைமை தொடங்கிச் சிறப்பு உள்ளனவும், அவை போன்ற பிறவும் நான்காம் வேற்றுமையின் பாற்படும் என்பர் புலவர் பெருமக்கள்.

சான்று :

1. கரும்புக்கு வேலி வினை உடைமை
2. இரப்பவர்க்கு ஈதல்
3. கந்தனுக்கு ஒரு கூறு
4. வளையலுக்குப் பொன்
5. கைக்குக் கடகம்
6. கூழுக்கு வேலை
7. முருகனுக்குத் தோழன் கந்தன்
8. பாம்புக்குப் பகை கருடன்
9. மனைவிக்கு அன்பன்
10. பாண்டியர்க்குச் சோழர்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

9. மண்ணால் இயன்ற குடம் - எந்தப் பொருளைக் குறிக்கும்?

10. நான்காம் வேற்றுமை நட்பு, பகை, காதல் என்னும் பொருட்பாகு பாட்டிற்குச் சான்று தருக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

11. ஐந்தாம் வேற்றுமை பெயர்ப் பொருளை எவ்வாறு வேறுபடுத்தும்?

### 3.6 ஐந்தாம் வேற்றுமை உருபு (இன்)

*"ஐந்தாகுவதே*
*'இன்' எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி*
*அதனின் இற்று இது என்னும் இதுவே"* 77

ஐந்தாம் வேற்றுமை உருபு 'இன்' ஆகும். இது இப்பொருளினும் இப்பொருள் இன்ன தன்மையது என்பதை உணர்த்த வருவதாம்.

சான்று : கபிலனின் கரியன் கண்ணன்

ஐந்தாம் வேற்றுமை, பெயர்ப்பொருளை நீக்கம், ஒப்பு, எல்லை, ஏது என நான்காகக் கூறுபடுத்தும்.

சான்று : மலையின் வீழ் அருவி
பாலின் வெளிது கொக்கு
சென்னையின் கிழக்கு வங்கக்கடல்
கல்வியிற் பெரியன் கம்பன்

### 3.6.1 ஐந்தாம் வேற்றுமை - பொருட் பாகுபாடு

*"வண்ணம் வடிவே அளவே சுவையே*
*தண்மை வெம்மை அச்சம் என்றா*
*நன்மை தீமை சிறுமை பெருமை*
*வன்மை மென்மை கடுமை என்றா*
*முதுமை இளமை சிறத்தல் இழித்தல்*
*புதுமை பழமை ஆக்கம் என்றா*
*இன்மை உடைமை நாற்றம் தீர்தல்*
*பன்மை சின்மை பற்றுவிடுதல் என்று*
*அன்னபிறவும் அதன்பால் என்மனார்"* 78

வண்ணம், வடிவு, அளவு, தண்மை, வெம்மை, அச்சம், நன்மை, தீமை, சிறுமை, பெருமை, வன்மை, மென்மை, கடுமை, முதுமை, இளமை, சிறப்பு, இழப்பு, புதுமை, பழமை, பெருக்கம், இல்லாமை, வைத்திருப்பது, நறுமணம் தீர்ந்து போதல், பலவாதல், சிலவாதல், பிடிப்பை விடுதல் என்ற பண்புகளும் இவைபோன்ற பண்புகளும் பிறவும் ஐந்தாம் வேற்றுமையின் பாற்படும் என்பர் புலவர்.

சான்று :

1. காக்கையின் கரியது களாம்பழம்
2. இதனின் சதுரமானது இது
3. இதனின் பெரியது இது
4. இதனின் இனிப்பது இது

### 3.7 ஆறாம் வேற்றுமை உருபு (அது)

*"ஆறாகுவதே*
*அது எனப் பெயரிய வேற்றுமைக்கிளவி*
*தன்னினும் பிறதினும் இதனது இது எனும்*
*அன்ன கிளவிக் கிழமைத்து அதுவே" 79*

*ஆறாம் வேற்றுமையின் உருபு அது. தானாகவும், பிற ஒன்றாலும் இதனது இது என்பதை உணர்த்தும் தன்மையது. இது தற்கிழமை, பிறிதின் கிழமை எனவும் கூறப்பெறும்.*

*சான்று : கண்ணனது கை - தற்கிழமை*
*முருகனது வேல் - பிறிதின் கிழமை*

### 3.7.1 ஆறாம் வேற்றுமை - பொருட்பாகுபாடு

*"இயற்கையின் உடைமையின் முறைமையின் கிழமையின்*
*செயற்கையின் முதுமையின் வினையின் என்றா*
*கருவியின் துணையின் கலத்தின் முதலின்*
*ஒருவழி உறுப்பின் குழுவின் என்றா*
*தெரிந்து மொழிச் செய்தியின் நிலையின் வாழ்ச்சியின்*
*திரிந்து வேறுபடூஉம் பிறவும் அன்ன*
*கூறிய மருங்கில் தோன்றும் கிளவி*
*ஆறன் பால என்மனார் புலவர்" 80*

இயற்கை தொடங்கி வாழ்ச்சி வரை கூறியவையும் திரிந்து வேறுபடுவன மற்றும் அவை போன்ற பிறவும் ஆகிய மேலே சொல்லப்பட்ட கிழமைப் பொருளில் தோன்றும். சொற்கள் எல்லாம் ஆறாம் வேற்றுமையினவாம்.

சான்று : கந்தனது வீடு கந்தனது தோட்டம்

### 3.8 ஏழாம் வேற்றுமை உருபு (கண்)

*"ஏழாகுவதே*
*'கண்' எனப் பெயரிய வேற்றுமைக்கிளவி*
*வினை செய் இடத்தின் நிலத்தின் காலத்தின்*
*அன்ன வகைக் குறிப்பின் தோன்றும் அதுவே" 81*

ஏழாம் வேற்றுமை உருபு 'கண்'. இது வினை நிகழும் இடத்தும், இடமாகிய நிலத்தும், காலத்தும் என மூன்று வகையிலும் தோன்றும்.

சான்று : ஆடற்கண் பாடல் மாடத்தின்கண் இருந்தான்
வேனிலின்கண் முல்லை பூக்கும்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

12. தற்கிழமை, பிறிதின் கிழமை என்றால் என்ன?

13. ஏழாம் வேற்றுமைஉருபு யாது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

14. ஏழாம் வேற்றுமை உருபுகளை வரிசைப்படுத்துக

15. உருபும், பயனும் உடன் தொக்க தொகை என்றால் என்ன?

16. வேற்றுமை மயக்கம் என்றால் என்ன?

### 3.8.1 ஏழாம் வேற்றுமை உருபுகள்

*"கண் கால் புறம் அகம் உள்உழை கீழ்மேல்*
*பின் சார் அயல்புடை தேவகை எனாஅ*
*முன்இடை கடை தலை வலம் இடம் எனாஅ*
*அன்ன பிறவும் அதன்பால என்மனார்* 82

கண் தொடங்கி இடம் வரை சொல்லப்பட்டவையும் அவை போன்ற பிறவும் ஏழாம் வேற்றுமயின் பாற்பட்டவை என்பர்.

சான்று : மணியின் கண் ஒளி ஊரின் கண் குளம்

### 3.9 வேற்றுமைத் தொகை விரிவு

*"வேற்றுமைப் பொருளை விரிக்கும் காலை*
*ஈற்று நின்று இயலும் தொகைவயின் பிரிந்து*
*பல் ஆறாகப் பொருள் புணர்ந்து இசைக்கும்*
*எல்லாச் சொல்லும் உரிய என்ப"* 83

வேற்றுமை தொகைக்கு விரிவாகப் பொருள் காணுவோமானால், அன்மொழித்தொகை விரிக்கும் போது, பொருள் விளங்கிக் கொள்ளச் சேர்க்கப்படும் சொற்கள் எல்லாம், இங்கும் விரித்தோதப்படும் என்று கூறுவர் புலவர் பெருமக்கள். உருபுகள் மட்டுமல்லாது, பிற சொற்களும் விரித்துரைக்கப்படும் என்பது குறிப்பு. இது உருபும், பயனும் உடன் தொக்க தொகை.

சான்று :

தாழ்குழல், பொற்றொடி, மட்காரணம் என்னும் அன்மொழித் தொகைகளை விரித்தோதின்,

1. தாழ்ந்த குழலை உடையவன்
2. பொற்றொடியை அணிந்தவள்
3. மண்ணாகிய காரணத்தாலானது என வரும்

கருங்குழல் பேதை, பொற்றொடி அரிவை, மட்குடம் என்னும் வேற்றுமைத் தொகை விரிப்பின் கருங்குழலை உடைய பெண், பொற்றொடி அணிந்த மங்கை மண்ணாலியன்ற குடம் எனவரும்.

### 3.10 வேற்றுமை மயக்கம்

வேற்றுமை உருபுகள் தம்முள் மயங்கிப் பொருள் வேறுபட நிற்பது வேற்றுமை மயக்கம் ஆகும்.

*"கருமம் அல்லாச் சார்பு என் கிளவிக்கு*
*உரிமையும் உடைத்தே கண் என் வேற்றுமை"* 84

கருமச் சார்பு, கருமம் அல்லாச் சார்பு என்று இரண்டு உண்டு. கருமம்

அல்லாச் சார்புப் பொருளுக்கு எழாம் வேற்றுமை வரும் உரிமையதாகும்.

சான்று :

1. தூணைச் சார்ந்தான் என்பது ஒன்றையொன்று மெய்யுறுதலால் கருமச் சார்பு

2. அரசனைச் சார்ந்தான் - இது கருமம் அல்லாச் சார்பு

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 3.10.1 வேற்றுமைமயக்கம் - சினைப்பெயரில்

"*சினைநிலை கிளவிக்கு ஐயும் கண்ணும்*
*வினைநிலை ஒக்கும் என்மனார் புலவர்*" 85

சினைச் சொல்லுக்கு வினை நிகழும் இடத்து, இரண்டாம் வேற்றுமை உருபு ஐயும் ஏழாம் வேற்றுமை உருபு 'கண்'ணும் ஒத்தியங்கும் என்று கூறுவர் புலவர் பெருமக்கள்.

சான்று :

கிளையை வெட்டினான்

கிளையின்கண் வெட்டினான்

### 3.10.2 கன்றல் செலவுப் பொருளில் வேற்றுமை மயக்கம்

"*கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே*" 86

கன்றல் பொருளிடத்தும், செல்லுதலாகிய செலவுப் பொருளிலும் இரண்டாம் வேற்றுமையும், ஏழாம் வேற்றுமையும் மயங்கும்.

17. கன்றல் செலவுப் பொருளில் மயங்கும் வேற்றுமைகள் எவை?

சான்று :

1. சூதினைக் கன்றினான் / சூதின் கண் கன்றினான் } கன்றல்

2. நெறியைச் சென்றான் / நெறியின்கண் சென்றான் } செலவு

### 3.10.3 முதல் பெயர் மற்றும் சினைப்பெயரில் வேற்றுமை மயக்கம்

"*முதல்சினைக் கிளவிக்கு அது என்வேற்றுமை*
*முதற்கண் வரினே சினைக்கு ஐ வருமே*" 87

முதல் சொல்லோடு சேர்ந்து வரும் சினைச்சொல்லிற்கு ஆறாம் வேற்றுமை உருபு முதலில் வந்தால், சினைச் சொல்லுக்கு இரண்டாம் வேற்றுமை உருபே வரும்.

18. முதல் மற்றும் சினைப்பெயரில் மயங்கும் வேற்றுமைகள் எவை?

சான்று : யானையது கோட்டைக் குறைத்தான்

"*முதன் முன் ஐவரின் கண் என் வேற்றுமை*
*சினை முதல் வருதல் தெள்ளிது என்ப*" 88

| தன் மதிப்பீட்டு வினாக்கள் | |
|---|---|

முதல் சினைச் சொல்லின் முன வேற்றுமை உருபு 'ஐ' வந்தால் சினைச்சொல் முன்னால் வேற்றுமை உருபு 'கண்' வருதல் நல்லது என்று சொல்லுவர்.

சான்று : யானையைக் கோட்டின் கண் குறைத்தான்

*"முதலும் சினையும் பொருள் வேறுபடாஅ*
*நுவலுங் காலை சொற் குறிப்பினவே" 89*

முதற்பொருள், சினைப்பொருள் ஆகிய இரண்டும் பொருளில் மாறுபடாது என்றாலும், சொல்லுகின்றவன் சொற்குறிப்பால் முதல் என்றும் சினை என்றும் உணரும் வண்ணம் விளங்கும்.

சான்று :

கிளையது நுனியைக் குறைத்தான் என்பதைக் கிளையை நுனிக்கண் குறைத்தான் என்று கூறுகிறபோது சினை முதலாக நின்றது.

### 3.10.4 பிண்டப் பெயரில் - வேற்றுமை மயக்கம்

19. பிண்டப் பெயரில் மயங்கும் வேற்றுமையை வரிசைப்படுத்துக.

*"பிண்டப் பெயரும் ஆஇயல் திரியா*
*பண்டு இயல் மருங்கின் மரீஇய மரபே" 90*

பலபொருள் தொகுப்பு ஆகும். பலபொருட் தொகுதியான பிண்டப் பெயரும் தன்மை மாறாது முதல் சினைப் பெயர் போலவே வழங்கிவரும். இது பழங்காலம் தொட்டு நடைமுறையில் பயிலப்பட்டு வருவதாகும்.

சான்று :

குப்பையது தலையைச் சிதறினான்

குப்பையைத் தலைக்கண் சிதறினான்

### 3.10.5 உயர்புப் பொருளில் - வேற்றுமை மயக்கம்

20. உயர்பு பொருளில் மயங்கும் வேற்றுமைகளை வரிசைப்படுத்துக.

*"ஒரு வினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே" 91*

ஒரு வினை ஒடுச்சொல் உயர்பொருளை உணர்த்தும் பெயரை அடுத்துத் தோன்றும்.

சான்று : அரசனோடிளையர் வந்தார்

ஆசிரியனொடு மாணவர் வந்தனர்

### 3.10.6 ஏதுப் பொருளில் - வேற்றுமை மயக்கம்

21. ஏதுப் பொருளில் மயங்கும் வேற்றுமைகளை விளக்குக.

*"மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய*
*ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி*
*நோக்கு ஓரனைய என்மனார் புலவர்" 92*

மூன்று மற்றும் ஐந்தாம் வேற்றுமைப் பொருள் விளங்க ஆக்கம் குறித்துச் சொல்லப்பட்ட காரணச் சொல். அக்காரணப் பொருளைச் சுட்டும் நோக்கு ஒரு தன்மையது, என்பர் புலவர் பெருமக்கள்.

சான்று : வாணிகத்தானாயினான் - வாணிகத்தானாய பொருள்

வாணிகத்தினாயினான் - வாணிகத்தினாய பொருள்

### 3.10.7 நோக்கப் பொருளில் - வேற்றுமை மயக்கம்

*"இரண்டன் மருங்கில் நோக்குஅல் நோக்கம்அவ்*
*இரண்டன் மருங்கில் ஏதுவும் ஆகும்" 93*

நோக்கல் என்பதற்குக் கண்ணால் பார்த்தல் என்று இங்கு பொருள் கொள்ள வேண்டும். இந்த வகையில் இரண்டாம் வேற்றுமை அதற்குரிய பொருளை மட்டும் உணர்த்தாது, மூன்றாம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமைப் பொருளையும் உணர்த்தும் காரணியுமாகும்.

சான்று :

"வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னன்
கோல்நோக்கி வாழும் குடி"

என்னும் குறள் வான் மழையை எதிர்பார்த்து என்னும் பொருளோடு வானால் வரும் மழையை நோக்கி என்றும் வானின்று வரும் மழையை நோக்கி என்றும் மூன்றாம் ஐந்தாம் வேற்றுமை உணர்த்தியது.

### 3.10.8 உடைமைப் பொருளில் வேற்றுமை மயக்கம்

*" 'அது' என் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்*
*'அது' என் உருபுகெடக் 'கு' கரம் வருமே" 94*

உயர்திணை ஆறாம் வேற்றுமை உருபு அது என்பதன் தன்மை கூற வேண்டுமானால் அது என்னும் அவ்வுருபு கெட அங்கே நான்காம் வேற்றுமை உருபாகிய 'கு' வரும்.

சான்று :

நங்கை கணவன். இது நங்கைக்கு கணவன் என்றே வரும். நங்கையது கணவன் என வருதல் பிழையாகும்.

### 3.10.9 தடுமாறு பொருளில் வேற்றுமை மயக்கம்

*"தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும்*
*கடிநிலை இலவே பொருள்வயின் ஆன" 95*

பொருள் கொள்ளத் தடுமாற வேண்டிவரும் நிலைக்குக் காரணமாக வரும் வினைச்சொல், இரண்டாம் - மூன்றாம் வேற்றுமை ஏற்பது. விலக்கப்பட வேண்டியதாகா.

சான்று :

புலி கொன்ற யானை இது புலிகொல் யானை என்று வரும் போது புலியைக் கொன்ற யானை, புலியால் கொல்லப்பட்ட யானை என இரண்டாம், மூன்றாம் வேற்றுமை உருபுகள் ஐ, ஆல் மயங்க வந்தன.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

22. நோக்கல் என்பதன் பொருள் யாது?

23. உடைமைப் பொருளில் அது என்னும் உருபு கெட வரும் வேற்றுமை உருபு எது?

24. புலிகொன்ற யானை இதில் மயங்கும் வேற்றுமைகள் யாவை?

தன மதிப்பீட்டு வினாக்கள்

*ஈற்றுப் பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்*
*வேற்றுமை தெரிய உணருமோரே"* 96

சரியான பொருள் உணரத் தடுமாற்றம் உண்டாகும். வண்ணம் தொடரும் பெயர்கள் முடிவின் முன்பாகப் பொருள் வேற்றுமை உணர்த்தும் சொல் வருமானால், அச்சொல் கொண்டே பொருள் வேற்றுமையைப் புரிந்து கொள்வர். பலநூல் கற்றறிந்த புலவர் பெருமக்கள்.

சான்று : புலிகொல் யானை ஓடியது
புலிகொல் யானைக்கோடு வந்தன

### 3.10.10 பாதுகாத்தல் பொருளில் - வேற்றுமை மயக்கம்

*"ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்*
*தாம் பிரிவு இலவே தொகைவரு காலை"* 97

25. 'ஐ', 'ஆன்' என்னும் இரு உருபுகளும் வரும் பொருள் எது?

காப்புப் பொருள் குறித்து வரும் வேற்றுமை தொக்கு நிற்கும் இடங்களில் 'ஐ' 'ஆன்' என்னும் இரு உருபுகளும் வருவதற்குரியன.

சான்று :

புலி போற்றி வா - புலியைப் போற்றி வா என ஐ உருபும் புலியால் போற்றி வா என 'ஆன்' உருபும் ஏற்றது.

### 3.10.11 வாழ்தல் பொருளில் - வேற்றுமை மயக்கம்

*"ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு*
*ஏழும் ஆகும் உறை நிலத்தான"* 98

26. வாழ்தல் பொருளில் வரும் வேற்றுமை மயக்கத்தை விளக்குக.

சான்று :

காட்டு யானை இது காட்டது யானை என விரிவதோடு காட்டின் கண் யானை எனவும் வரும்.

### 3.10.12 கொடைப்பொருளில் - வேற்றுமை மயக்கம்

*"குத்தொக வரூஉம் கொடை எதிர் கிளவி*
*அப்பொருள் ஆறற்கு உரித்தும் ஆகும்"* 99

27. கொடைப் பொருளில் வரும் வேற்றுமை உருபுகள் எவை?

கு என்னும் நான்காம் வேற்றுமை உருபு தொகவரும் கொடைப்பொருள் உணர்த்தும் சொல், ஆறாம் வேற்றுமை உருபாகிய 'அது' ஏற்கவும் உரியதாகும்.

சான்று :

நாகர் பலி. இது நாகர்க்குத் தர நேர்ந்த பலி என்று விரிவதோடு நாகரது பலி எனவும் வரும்.

### 3.10.13 அச்சப்பொருளில் வேற்றுமை மயக்கம்

*"அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும்*
*எச்சம் இலவே பொருள் வயினானே"* 100

அச்சப் பொருளுணர்த்த வரும் சொல்லுக்கு ஐந்தாம் இரண்டாம் வேற்றுமை உருபுகள் வரத் தக்கன.

சான்று :

பழி அஞ்சும் - இது பழியை அஞ்சும்
பழியின் அஞ்சும் என
இரு வேற்றுமை உருபும் ஏற்க நின்றது.

### 3.10.14 புறனடை

*"அன்ன பிறவும் தொல்நெறி பிழையாது*
*உருபினும் பொருளினும் மெய் தடுமாறி*
*இருவியன் நிலையும் வேற்றுமை எல்லாம்*
*திரிபு இடன் இலவே தெரியு மோர்க்கே"* 101

இதுவரை சொல்லப்பட்ட வேற்றுமை மயக்கங்களல்லாமல் இவை போன்ற பிறவும் பண்டு தொட்டே உருபாலும், பொருளாலும் மாறுபடாது, ஒத்து நிற்கும் இடங்களில் ஒன்றினிடத்து வேறொன்று நின்று வேறுபடு நிலையில் தன்பொருள், பிறிதின் பொருள் இரண்டையும் ஆய்ந்தறிவோர்க்கு உண்மைப் பொருளுணர்வதில் தடுமாற்றம் ஏற்படாததாகும்.

### 3.11 உருபுகள் இயல்பு

*"உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைக் கிளவி*
*ஒருசொல் நடைய பொருள் செல் மருங்கே* 102

ஒன்றுக்கு மேலான உருபுகள் தொடர்ந்து வரும் வேற்றுமைச் சொற்களெல்லாம் முடியும் இடத்தில் நின்று முற்றுப் பெறும். அச்சொல்லாலேயே பொருள் விளங்கிக் கொள்ளப்படும்.

சான்று :

என்னொடும் நின்னொடும் சூழாது.

### 3.12 உருபு விரிவு

*"இறுதியும் இடையும் எல்லா உருபும்*
*நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்"* 103

ஒரு வேற்றுமைத் தொடரின் முடிவிலும், நடுவிலும் ஆறு வேற்றுமை உருபுகளும், அவ்வவற்றிற்கு உரிய பொருள் தர நிற்பதைப் புலவர் பெருமக்கள் தவிர்க்க மாட்டார்கள்.

### 3.13 வேறு உருபேற்றல் மற்றும் தொக்கி வருதல்

*"பிறிது பிறிது ஏற்றலும் உருபு தொக வருதலும்*
*நெறிபட வழங்கிய வழி மருங்கு என்ப"* 104

ஓர் உருபு வேறோர் உருபேற்று வருவதும், உருபுகள் தொக்கி

தன் மதிப்பீட்டு வினாக்கள்

28. அச்சப் பொருளில் வரும் வேற்றுமை உருபுகள் எவை?

29. உருபுகளின் இயல்பு யாது?

30. ஒரு உருபு மற்றோர் உருபு ஏற்குமா?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

வருவதும், பழங்காலம் முதற்கொண்டே வழங்கி வரும் மரபாகவே உள்ளது என்பர்.

சான்று :

31. உருபு தொக்கி நிற்கா இடங்கள் எவை?

சாத்தனதனை (சாத்தன் + அது + ஐ)

சாத்தனதனொடு (சாத்தன் + அதன் + ஒடு)

### 3.13.1 தொக்கி நிற்கா இடங்கள்

*“ஐயும் கண்ணும் அல்லாப் பொருள் வயின்*
*மெய் உருபு தொகாஅ இறுதியான”* 105

இரண்டாம் வேற்றுமை உருபு ஐயும், ஏழாம் வேற்றுமை உருபு 'கண்'ணும் அல்லாத பிற பொருளை உணர்த்தி நிற்கும் உருபு தொடர்மொழி முடிவில் தொக்கி நிற்காது.

32. பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும் - விளக்குக.

### 3.13.2 வேற்றுமை உருபு பற்றியது

*“யாதன் உருபில் கூறிற்று ஆயினும்*
*பொருள் செல்மருங்கின் வேற்றுமை சாரும்”* 106

ஒரு தொடர் ஏதாவதொரு வேற்றுமை உருபு கொடுத்துக் கூறப்பட்டிருந்தாலும், அவ்வுருபின் பொருளால் அத்தொடர் பொருள் அமையாதபோது, பொருள் செல்லும் பக்கமே வேற்றுமை சாரும்.

33. எதிர் மறையில் வேற்றுமை உருபுகள் பொருள் மாறுபடுமா?

சான்று :

கிள்ளையரி நாணல் கிழங்கு மணல்கறை

முளையோர் அன்ன முள்ளயிற்றுத் துவர்வாய்

இதில் நான்காவதன் பொருளால் உருபேற்ற சொல்லும், உருபு நோக்கி சொல்லும் இயையாமையின் அவற்றை இயைக்கும் ஏழாவதன் பொருட்டாயினவாறு காண்க என்பார் சேனாவரையார்.

### 3.13.3 எதிர்மறையில் வேற்றுமை

*“எதிர் மறுத்து மொழியினும் தம்தம் மரபின்*
*பொருள் நிலை திரியா வேற்றுமைச் சொல்லே”* 107

### 3.14 உருபுகளின் திரிபு

*“கு ஐ ஆன் என வரூஉம் அறுதி*
*அவ்வொடு சிவணும் செய்யுள் உள்ளே”* 108

கு, ஐ, ஆன் என்னும் மூன்று வேற்றுமை உருபுகளும், செய்யுள் தொடரின் முடிவில் வருகிறபோது 'அ' கரத்தோடு பொருந்தி நிற்கும்.

சான்று : 'புரைதீர் கேள்விப் புலவர் ஆன'

*“அ எனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்*

*'கு'வ்வும் 'ஐ'யும் இல் என மொழிப''* 109

அஃறிணைப் பெயர்களில், அகரத்தோடு பொருந்திக் 'கு' 'ஐ' என்னும் இரண்டு வேற்றுமை உருபுகளும் வழங்கி வருதல் இல்லை என்பர். 'ஆன்' உருபு அஃறிணைப் பெயரிடத்து 'அ' கரத்தோடு பொருந்துதல் உண்டு என்பது குறிப்பு.

**3.15 உருபு மயக்கம் பல பொருள்களில்**

*''இதனது இது இற்று என்னும் கிளவியும்*
*அதனைக் கொள்ளும் பொருள் வயினானும்*
*அதனால் செயற்படற்கு ஒத்த கிளவியும்*
*முறைக்கொண்டு எழுந்த பெயர்ச்சொல் கிளவியும்*
*பால்வரை கிளவியும் பண்பின் ஆக்கமும்*
*காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்*
*பற்றுவிடு கிளவியும் தீர்ந்து மொழிக் கிளவியும்*
*அன்ன பிறவும் நான்கன் உருபின்*
*தொல்நெறி மரபின தோன்றல் ஆறே''* 110

இப்பொருளின் இப்பகுதி இத்தன்மையது என்பதை விளக்கும் ஆறாம் வேற்றுமைப் பொருளும் ஒன்றை ஒன்று கொள்ளும் என்னும் இரண்டாம் வேற்றுமையும் ஒன்றால் ஒன்று தொழிபட ஒப்புடையது என்னும் மூன்றாம் வேற்றுமைப் பொருளும் முறைப்பொருள் உணர்த்தும் பெயர்ச் சொல்லினது ஆறாம் வேற்றுமை பொருளும், நிலத்தை வரையறுத்துக் கூறும் பொருளும், பண்பின் பொருளான ஐந்தாம் வேற்றுமையும், காலம் காட்டும் ஏழாம் வேற்றுமை உருபும், பற்றுவிடு பொருளும், தீர்ந்தொழிப் பொருளும் ஆகிய ஐந்தாம் வேற்றுமைப் பொருளும் இவை போன்ற இன்னுமற்ற பொருள்களும் நான்காம் வேற்றுமை உருபில் தோன்றுதல் பழைய வழக்கு ஆகும்.

சான்று :

யானைக்குக் கொம்பு
ஆவுக்குக் கன்று
ஊருக்குக் கிழக்கு
கந்தனுக்குப் பெரியன்
மனைவாழ்க்கைக்குப் பற்றுவிட்டான்
ஊர்க்குத் தீர்ந்தான்

**3.15.1 சிறப்பு விதி**

*''ஏனை உருபும் அன்ன மரபின*
*மானம் இலவே சொல் முறையானே''* 111

நான்காம் வேற்றுமை உருபல்லாத வேறு உருபுகளும் தொகையல்லாத தொடர்மொழி, ஒன்றின் பொருள் கெடாதிருக்க வந்து மயங்குதல் உண்டு.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

34. கு. ஐ. ஆன் என்னும் வேற்றுமை உருபுகள் செய்யுளில் எதனோடு பொருந்தும்?

35. உருபு மயக்கம் என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

சான்று : அவட்குக் குற்றேவல்

அவளது குற்றேவல்

### 3.16 வேற்றுமைக்கு ஏது தொழில் முதல்நிலை எட்டு

*“வினையே செய்வது செய்யப்படு பொருளே*
*நிலனே காலம் கருவி என்றா*
*இன்னதற்கு இது பயன் ஆக என்னும்*
*அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ*
*ஆ எட்டும் என்ப தொழில் முதல் நிலையே”* 112

வினை, வினைமுதல், செயப்படுபொருள், இடம், காலம் கருவி என்னும் ஆறுடன் இதற்கு இது பயன் என்னும் இரண்டும் சேர்த்து, ஒரு செயலுக்கு முன்னிற்கும் காரணங்கள் எட்டு என்று கூறப்படும்.

36. காரண காரியத்திற்கு முன்னான காரணங்கள் எத்தனை?

சான்று :

குடம் வனைந்தான் (குடத்தைச் செய்தான்) என்கிற போது, குடம் செய்தல் தொழிலும், செய்யும் தொழிலாளி - கருத்தாவும், செய்யப்பட்ட பொருளான குடமும், குடம் செய்த இடமும், குடம் செய்ய எடுத்துக் கொண்ட கால அளவும் குடம் செய்யப் பயன்பட்ட கருவியாகிய சக்கரமும், செய்த குடத்தை வாங்குபவனும் அதனால் குடம் செய்தவன் விலையாகப் பெறுகிற பயனும் என்ற எட்டும் காரியத்திற்கு முன்னான காரணங்கள் எட்டுமாம்.

### 3.16 எட்டில் குறைதல்

*“அவைதாம்*
*வழக்கியல் மருங்கில் குன்றுவ குன்றும்”* 113

ஒரு தொழிலுக்கான காரண காரியங்கள் எட்டு என்று சொல்லப்பட்டாலும், இது கட்டாயம் இல்லை. நடைமுறையில் இந்தக் காரணங்கள் குறையவும் கூடும். எடுத்துக்காட்டாக கொடி ஆடிற்று என்பதில் கொடி ஆடுவது, ஆடற காரணமான காற்றோ கருத்தாவே கருவியாகவும், கொடியாடும் இடம் - காலமுமே காரணமுமாயின. செய்யப்படு பொருளும், ஏற்பதும், பயனும் இல்லையாயின.

### 3.17 ஆகுபெயர்

முதல் சொல்லைக் கொண்டு, சினை அறியும் சொல்லும் சினை அறியும் சொல் கொண்டு முதல் சொல் அறிய உதவும் சொல்லும், ஒரு பொருளின் பெயரை அது தோன்றிய நிலத்தின் மேல் கூறும் சொல்லும், பண்புப் பெயர் பண்புடைய பொருளை உணர்த்தும் சொல்லும் காரணப் பெயரால், காரியம் உணர்த்தும் சொல்லும் அன்மொழிப் பெயரும், இரு பெயரொட்டும் செயப்பட்ட பொருளால் செய்தானைச் சுட்டும் சொல்லும் ஆகியன ஆகுபெயர்க்கு இலக்கணங்களாகும்.

### 3.17.1 ஆகுபெயர் வேறுபாடு

*"அவைதாம்*
*தம் தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்*
*ஒப்புஇல் வழியால் பிறிது பொருள் சுட்டலும்*
*அப் பண்பினவே நுவலும் காலை" 115*

அவைதாம் இந்த ஆகுபெயர்கள் எல்லாம் தம்தம் பொருளை விட்டு நீங்காதும், தம் தம் பொருளோடு ஒத்த பொருளைச் சேர்தலும், தம் பொருளுக்குச் சம்பந்தமில்லாத வேறு ஒரு பொருளைச் சுட்டுதலும் ஆகிய பண்புகளை உடையன.

இப்படி ஆகுபெயர்களின் இயல்பு வேறுபடும் வழிகண்டு தெளிதல் வேண்டும்.

*"வேற்றுமை மருங்கில் போற்றல் வேண்டும்"*

### 3.17.2 அளவு - நிறை

*"அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி*
*உள என மொழிப உணர்ந்திசி னோரே" 116*

அளவைப் பெயரும், நிறுத்தல் பெயரையும் ஆகுபெயராகக் கொள்ள இடமுண்டென்பர் புலவர்.

### 3.18 புறனடை

*"கிளந்த அல்ல வேறு பிற தோன்றினும்*
*கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே" 117*

இதுவரை சொல்லியது அல்லாமல் வேறுவகை ஆகுபெயர்கள் தோன்றுமானால் அவற்றை இதுவரை கூறிய இலக்கண விதிகொண்டு ஆய்ந்துணர்ந்து கொள்ள வேண்டும்.

### தொகுப்புரை

பெயர் உருபேற்று பொருள் வேற்றுமைப்படுவது வேற்றுமையியலிலும், வேற்றுமை உருபுகள் தம்முள் மயங்கிப் பொருள் வேறுபட நிற்கும் பகுதிகள் வேற்றுமை மயங்கியலிலும் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இவை மட்டுமின்றி உருபின் இயல்பு, திரிபு, மயக்கம் ஆகியனவும் ஆகுபெயரின் இயல்பும் விளக்கப்பட்டுள்ளன.

### தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| 1,2 | - | 3.1 ஐப் பார்க்க |
| 3 | - | 3.2 " |
| 4 | - | 3.2.1 " |
| 5 | - | 3.2.4 " |

தன் மதிப்பீட்டு வினாக்கள்

37.ஆகுபெயர் என்றால் என்ன?

38. ஆகு பெயரின் பண்புகள் யாவை?

39. அளவு, நிறைப் பெயர்களை எந்தப் பெயராகக் கருதலாம்?

| | | | | |
|---|---|---|---|---|
| தன் மதிப்பீட்டு வினாக்கள் | 6 | - | 3.2.5 | ஐப் பார்க்க |
| | 7 | - | 3.3 | " |
| | 8 | - | 3.4 | " |
| | 9 | - | 3.4.1 | " |
| | 10 | - | 3.5.1 | " |
| | 11 | - | 3.6 | " |
| | 12 | - | 3.7 | " |
| | 13 | - | 3.8 | " |
| | 14 | - | 3.8.1 | " |
| | 15 | - | 3.9 | " |
| | 16 | - | 3.10 | " |
| | 17 | - | 3.10.2 | " |
| | 18 | - | 3.10.3 | " |
| | 19 | - | 3.10.4 | " |
| | 20 | - | 3.10.5 | " |
| | 21 | - | 3.10.6 | " |
| | 22 | - | 3.10.7 | " |
| | 23 | - | 3.10.8 | " |
| | 24 | - | 3.10.9 | " |
| | 25 | - | 3.10.10 | " |
| | 26 | - | 3.10.11 | " |
| | 27 | - | 3.10.12 | " |
| | 28 | - | 3.10.13 | " |
| | 29 | - | 3.11 | " |
| | 30 | - | 3.13 | " |
| | 31 | - | 3.13.1 | " |
| | 32 | - | 3.13.2 | " |
| | 33 | - | 3.13.3 | " |
| | 34 | - | 3.14 | " |
| | 35 | - | 3.15 | " |
| | 36 | - | 3.16 | " |
| | 37 | - | 3.17 | " |

38 - 3.17.1 ஐப் பார்க்க

39 - 3.17.2 "

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**பயிற்சி வினாக்கள்**

**ஒரு பக்க வினாக்கள் :**

1. எழுவாய் வேற்றுமை ஏற்கும் பயனிலைகளை வரிசைப்படுத்துக.
2. ஐந்தாம் வேற்றுமை பொருட் பாகுபாட்டினை விளக்குக.
3. விளி வேற்றுமையை விளக்குக.
4. மூன்றாம் வேற்றுமை பொருட் பாகுபாட்டினை விளக்குக
5. முதல் மற்றும் சினைப்பெயரில் இடம்பெறும் வேற்றுமை மயக்கத்தினை விளக்குக.
6. உருபின் இயல்பு மற்றும் அதன் திரிபினை விளக்குக.
7. தடுமாறு தொழிற் பொருளில் வேற்றுமை மயக்கம் இடம்பெறும் விதத்தினை விளக்குக.
8. அச்சம் மற்றும் கொடைப் பொருளில் மயங்கும் வேற்றுமை உருபுகள் குறித்து எழுதுக,
9. "யாதன் உருபின் கூறிற்று ஆயினும்

   பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்" - விளக்குக,
10. ஆகுபெயர் குறித்து எழுதுக,

**கட்டுரை வினாக்கள் :**

1. வேற்றுமை என்றால் என்ன? இரண்டாம் வேற்றுமையின் பொருட் பாகுபாட்டினை விளக்குக.
2. உருபுகளின் இயல்புகள் குறித்துக் கட்டுரைக்க
3. பொருளில் (உயர்வு, ஏது, உடைமை, தடுமாறு, பாதுகாத்தல், வாழ்தல்) வேற்றுமை மயங்கும் விதத்தினை விளக்குக.
4. உருபு மயக்கம் என்றால் என்ன? கட்டுரைக்க

தன் மதிப்பீட்டு வினாக்கள்

# அலகு - 4

## விளியின் இயல்பும், சொற்கள் விளி ஏற்கும் முறையும்

### அறிமுகம்

விளியின் இயல்பு, மற்றும் உயர்திணை, அஃறிணை சொற்கள் விளியேற்கும் முறைகள், விரவுப் பெயர் விளியேற்கும் தன்மை ஆகியனவும் விளி ஏற்காப் பெயர்களும் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

### நோக்கம்

சொற்கள் விளி ஏற்பதால் அடையும் மாற்றங்களை விளக்குவது மற்றும் விளி ஏற்கும் மற்றும் ஏற்கா பகுதிகளைத் தொகுத்துரைப்பது இதன் நோக்கமாகும்,

### பாட அமைப்பு

4.1 விளியின் இயல்பு

4.2 உயர்திணைப் பெயர் விளி ஏற்றல்

4.2.1 இ, ஐ ஈறுகள்

4.2.2 ஓ, உ ஈறுகள்

4.2.2.1 உகரம் குற்றியலுகரமே

4.2.3 விளி ஏற்காத உயிர் ஈறுகள்

4.2.3.1 அளபெடை அடையும் மாற்றம்

4.2.3.2 முறைப்பெயர் அடையும் மாற்றம்

4.2.3.3 அண்மை விளி - இயல்பு

4.3 ள,ர,ல,ன மெய் ஈறுகள் விளி ஏற்றல்

4.3.1 னகர ஈறு விளியேற்கும் முறை

4.3.1.2 தொழிலில் ஆன்

4.3.1.3 பண்புப் பெயர்

4.3.1.4 அளபெடை

4.3.1.5 முறைப்பெயர்

4.3.1.6 விளி ஏற்கா னகர ஈறுகள்

4.3.2 ரகர ஈறு

4.3.2.1 தொழிற் பெயர்

4.3.2.2 பண்புப்பெயர்

4.3.2.3 அளபெடை மற்றும் சுட்டுப்பெயர்

4.3.2.4 திரிபு மற்றும் வினாப்பெயர்

4.3.3 லகர, ளகர ஈறு - விளியேற்கும் முறை

4.3.3.1 வினை மற்றும் பண்புப்பெயர்

4.3.3.2 முறைப்பெயர்

4.3.3.3 விளி ஏற்காத ளகர ஈறு

4.3.3.4 அளபெடைப்பெயர்

4.3.4 அஃறிணைப் பெயர் விளி ஏற்றல்

4.3.5 விரவுப்பெயர் விளி ஏற்றல்

4.4 புறனடை

தொகுப்புரை

உயர்திணை, அஃறிணை மற்றும் விரவுப் பெயர்கள் விளியேற்கும் மற்றும் விளியேற்கா இடங்கள் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**4.1 விளியின் இயல்பு**

*"விளிஎனப் படுவ கொள்ளும் பெயரொடு*
*தெளியத் தோன்றும் இயற்கைய என்ப"* 118

விளி என்று சொல்லப்படுவன பெயரோடு விளக்கமாகத் தோன்றும் தன்மையனவாம்.

1. விளியின் இயல்பு யாது?

*"அவ்வே*
*இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப"* 119

விளி, ஏற்கும் பெயர், ஏற்காப் பெயர் இவையென அறிய, இங்கு விளக்கிப் பொருளறியக் கூறப்படும்.

**4.2 உயர்திணைப்பெயர் விளி ஏற்றல்**

*"அவைதாம்*
*'இ' 'உ' 'ஐ' 'ஓ' என்னும் இறுதி*
*அப்பால் நான்கே உயர்திணை மருங்கின்*
*மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே"* 120

2. விளி ஏற்கும் உயிர் ஈறுகள் எவை?

இ,உ,ஐ,ஓ என்னும் உயிரெழுத்தை ஈற்றிலே கொண்டு முடியும் உயர்திணைப் பெயர்கள் விளி ஏற்கும் பெயர்களாம்.

சான்று : சுடர்த்தொடீ கேளாய்

நங்காய்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

#### 4.2.1 இ,ஐ, ஈறுகள்

*"அவற்றுள்*
*இ ஈ ஆகும் ஐ ஆய் ஆகும்"* 121

3. ஐ என்னும் உயிர் ஈறு ஏற்கும் விளி எது?

நான்கு உயிர் ஈறுகளுள் இ,ஐ என்னும் இந்த இரண்டும் முறையே 'ஈ' ஆகவும் 'ஆய்' என்றும் ஈற்றிலே திரிந்து விளி ஏற்கும்.

சான்று :

தம்பி - தம்பீ

நங்கை - நங்காய்

#### 4.2.2 ஓ,உ ஈறுகள்

*"ஓவும் உவ்வும் ஏ ஒடு சிவணும்* 122

4. ஓ, உ என்னும் உயிர் ஈறுடன் பொருந்தும் விளி எது?

'ஓ'கார இறுதியும் 'உ'கர இறுதியும் 'ஏ' யோடு பொருந்தும்.

சான்று :

1) கோ - கோவே

2) வேந்து - வேந்தே

அரசனைக் குறிக்கும் கோ, வேந்து என்னும் 'ஓ' கார உகர ஈற்றுப் பெயர் முறையே கோவே, வேந்தே என விளியேற்றது.

##### 4.2.2.1 உகரம் குற்றியலுகரமே

*" 'உ'கரம் தானே குற்றியலுகரம்"* 123

5. குற்றிய லுகரம் என்றால் என்ன?

முன் சூத்திரத்தில் உகரம் என்று சுட்டியது குற்றியலுகரமாகும்.

#### 4.2.3 விளி ஏற்காத உயிர் ஈறுகள்

*"ஏனை உயிரே உயர்திணை மருங்கில்*
*தம் விளி கொள்ளா என்மனார் புலவர்"* 124

6.விளிஏற்காத உயிர் ஈறுகள் எவை?

இ,உ,ஐ,ஓ என்னும் நான்கு அல்லாத மற்ற உயிர் ஈறுகள் உயர்திணையில் விளித்தல் பொருளில் வராது எனக் கூறுவர் புலவர் பெருமக்கள்.

##### 4.2.3.1 அளபெடை அடையும் மாற்றம்

*"அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்*
*இயற்கைய ஆகும் செயற்கைய என்ப"* 125

7. உயிர் ஈறு அளபெடை விளி ஏற்குமா?

அளபெடையில் 'இ' கரம் முடிவிலே வரும் பெயர் முன் சொன்ன முறையில் ஈகாரமாகத் திரியாது இயல்பாய் விளி ஏற்கும்.

சான்று :

தோழி என்பது தோழீ என்று ஈ இறுதி ஏற்காமல் தோழீஇஇ எனவும் தோழீஇஇஇ எனவும் வருதலால் இது செயற்கைய எனப்பட்டது.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 4.2.3.2 முறைப்பெயர் அடையும் மாற்றம்

*"முறைப்பெயர் மருங்கின் ஐ என் இறுதி*
*ஆவொடு வருவதற்கு உரியவும் உளவே" 126*

உறவுமுறை குறிக்க வரும் முறைப்பெயர் ஐ என்னும் உயிரீற்றில் முடிவது முன்னர் கூறியபடி 'ஆய்' என்று திரியாது 'ஆ' வொடு பொருந்தியும் வரும்.

8. உயிர் ஈறு முறைப்பெயர் ஏற்கும் விளி எது?

சான்று :

அன்னை - அன்னா

அத்தை - அத்தா

அன்னாய் - அத்தாய்

### 4.2.33 அண்மை விளி - இயல்பு

*"அண்மைச் சொல்லே இயற்கை ஆகும்" 127*

இ, உ, ஐ, ஓ என்னும் நான்கு உயிர் ஈற்றுச் சொற்களும் அண்மை இடத்து இயல்பாக விளி ஏற்கும்.

9. அண்மை விளி, விளிச்சொல் ஏற்குமா?

சான்று

நம்பி வாழி

நங்கை வாழி

வேந்து வாழி

கோ வாழி

### 4.3 ள,ர,ல,ன மெய் ஈறுகள் விளி ஏற்றல்

*"ள,ர,ல,ன என்னும் அந்நான்கு என்ப*
*புள்ளி இறுதி விளிகொள் பெயரே 128*

10. விளி ஏற்கும் மெய் ஈறுகள் எவை?

இ,உ,ஐ,ஓ என்னும் நான்கும் உயர்திணை உயிர் ஈறுகள் என்று சொல்லப்பட்டது போல ள,ர,ல,ன என்ற நான்கும் புள்ளியை முடிவிலே உடைய விளி ஏற்கும் சொற்களாகும். புள்ளி உடைய என்றது ள்,ர்,ல்,ன் என்னும் மெய் எழுத்துக்களாகும்.

*"ஏனைப் புள்ளி ஈறு விளி கொள்ளா" 129*

ன,ர,ல,ள அல்லாத மற்ற புள்ளி உடைய ஈற்று எழுத்துக்கள் விளி ஏற்கமாட்டா.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

11. 'மன்னன்' என்னும் சொல் விளியேற்பதால் அடையும் மாற்றம் என்ன?

12. துறைவன் என்னும் சொல்லுக்கான அண்மை விளியைக் கூறு.

13. வந்தான் எவ்வாறு விளியாகும்?

14. னகர ஈறு அளபெடை விளி ஏற்குமா?

### 4.3.1 னகர ஈறு விளியேற்கும் முறை

அவற்றுள்

*" 'அன்' என் இறுதி ஆ ஆகும்மே"* 130

னகர ஒற்றை முடிவிலே உடைய 'அன்' என்னும் சொல் விளி ஏற்கும்போது 'ஆ' ஆகும்,

சான்று : மன்னன் - மன்னா

#### 4.3.1.1 அண்மை விளி

*"அண்மைச் சொல்லிற்கு அ கரமும் ஆகும்"* 131

அண்மை விளிப் பொருளில் 'அன்' என்னும் னகர ஈறு அகரமும் ஆகும்.

சான்று :

துறைவன் - துறைவ ஊரன் - ஊர

*"ஆன் என் இறுதி இயற்கை ஆகும்"* 132

'ஆன்' என்னும் 'ன'கர ஈற்றுச் சொல் திரிபின்றி இயல்பாயும் விளி ஏற்கும்.

சான்று :

சேரமான் - சேரமான் மலையமான் - மலையமான்

#### 4.3.1.2 தொழிலில் ஆன்

*"தொழிலில் கூறும் ஆன் என் இறுதி*
*'ஆய்' ஆகும்மே விளி வயினான்"* 133

ஒன்றின் செயலைக் குறித்து முடியும் 'ஆன்' என்னும் ஈற்றுச் சொல் விளியாய் வரும்போது 'ஆன்' என்னும் ஈறு 'ஆய்' என்றாகும்.

சான்று : வந்தான் - வந்தாய்

#### 4.3.1.3 பண்புப் பெயர்

*"பண்பு கொள்பெயரும் அதன் ஓரற்றே"* 134

ஒன்றின் பண்பைக் குறித்து முடியும் 'அன்' என்னும் ஈறும் தொழிற் பெயரைப் போலவே 'ஆய் விளி ஏற்கும்.

சான்று : கரியன் - கரியாய்

#### 4.3.1.4 அளபெடை

*"அளபெடைப் பெயரே அளபெடை இயல"* 135

'ஆன்' என்னும் சொல்லை ஈற்றிலே கொண்டு முடியும் அளபெடைப்

பெயர், இகர ஈற்று அளபெடைப் பெயர் போல தன் மாத்திரை நீண்டு இயல்பாய் விளி ஏற்கும்.

சான்று :

உழான் - உழாஅஅன்

#### 4.3.1.5 முறைப்பெயர்

*"முறைப் பெயர்க்கிளவி ஏயொடு வருமே" 136*

உறவுமுறை குறித்து வரும் 'ன'கரத்தை ஈற்றிலே கொண்ட முறைப்பெயர் 'ஏ' காரம் பெற்று விளி ஏற்கும்.

சான்று : மகன் - மகனே

#### 4.3.1.6 விளி ஏற்கா 'ன'கர ஈறுகள்

*"தான் என் பெயரும் சுட்டு முதல் பெயரும்*
*யான் என் பெயரும் வினாவின் பெயரும்*
*அன்றி அனைத்தும் விளிகோள் இலவே" 137*

தான் என்று வரும் பெயரும், அவன், இவன், உவன் என்று குறிப்பிட்டுச் சொல்லப்படும் சுட்டுப்பெயரும், யான் எனும் தன்மைப் பெயரும், யாவன் என்னும் வினா எழுப்பும் பெயரும் ஆகிய இவை எல்லாப் பெயர்களும் 'ன' ஈறு உடையனவாக இருந்தாலும் 'விளி' ஏற்க மாட்டா.

#### 4.3.2 'ர' கர ஈறு

*"ஆரும் அருவும் ஈரொடு சிவணும்" 138*

ரகர ஒற்று ர். ஈற்றிலே கொண்டு முடியும் 'ஆர்', 'அர்' என்னும் இரண்டு சொற்களும் 'ஈர்' என்னும் சொல்லை முடிவிலே பெற்று விளி ஏற்கும்.

சான்று :

பார்ப்பார் - பார்ப்பீர் கூத்தர் - கூத்தீர்

#### 4.3.2.1 தொழிற் பெயர்

*தொழிற்பெயர் ஆயின் ஏகாரம் வருதலும்*
*வழுக்கு இன்று என்மனார் வயங்கியோரே" 139*

ஆர், அர் என்னும் இரண்டும் தொழிற்பெயராக வருமிடத்து 'ஈர்' உடன் ஏகாரம் முடிவிலே பெற்று வருதல் தவறல்ல என்பர் கற்றறிந்தோர்.

சான்று :

சென்றீர் - சென்றீரே

தன் மதிப்பீட்டு வினாக்கள்

15. னகர ஈற்று முறைப்பெயர் எந்த விளியை ஏற்கும்?

16. விளி ஏற்கா னகர ஈறுகள் எவை?

17. ஈர் என்னும் சொல்லை முடிவிலே கொள்ளும் மெய் ஈறு எது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

#### 4.3.2.2 பண்புப் பெயர்

*"பண்பு கொள் பெயரும் அதன் ஓரற்றே"* 140

பண்பு - குணம் இதனைக் குறிக்கும் ஆர், அர் என்னும் இரு ஈற்றுச் சொல்லும் தொழில் பெயரில் பெற்றதைப் போலவே ஈர், ஏ என்னும் இரண்டையும் பெற்று விளி ஏற்கும்.

சான்று :

இளையார் - இளையீர், இளையீரே

18. ரகர ஈற்று சுட்டுப்பெயர் விளி ஏற்குமா?

#### 4.3.2.3 அளபெடை மற்றும் சுட்டுப்பெயர்

*"அளபெடைப் பெயரே அளபெடை இயல"* 141

ரகரம் ஈறிலே வரும் அளபெடைப் பெயர் முன்னே சொன்ன 'ன' கர ஈற்று அளபெடைப் பெயரைப் போலவே திரியாது இயல்பாய் நின்று விளி ஏற்கும் மாத்திரை மிகும்.

சான்று : சிறார் - சிறாஅர்

*"சுட்டு முதற் பெயரே முன் கிளந்தன்ன"* 142

#### 4.3.2.4 திரிபு மற்றும் வினாப்பெயர்

*"நும்மின் திரிபெயர் வினாவின் பெயர் என்று*
*அம்முறை இரண்டும் அவற்று இயல்பு இயலும்"* 143

நும் இதன் திரிபு நீயிர், வினாவின் பெயர் யாவர்? இந்த இரண்டும் முன் சூத்திரத்தில் கூறியது போலவே அதாவது சுட்டுப் பெயர்கள் விளி ஏற்காத தன்மை போலவே இவையும் விளி ஏற்க மாட்டா.

19. எஞ்சிய இரண்டின் இறுதி..... இதில் எஞ்சிய இரண்டு எது?

#### 4.3.3 ல,ள ஈறு - விளியேற்கும் முறை

*"எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே*
*நின்ற ஈற்று அயல்நீட்டம் வேண்டும்"* 144

ல,ள என்னும் இரண்டு மெய் ஒற்றுக்களை முடிவிலே வரும் எழுத்துப் பக்கத்தில் உள்ள எழுத்து நீண்டு விளி ஏற்கும்.

சான்று : குரிசில் - குரிசீல் மக்கள் - மக்காள்

*"அயல் நெடிது ஆயின் இயற்கை ஆகும்"* 145

ஈற்று எழுத்துக்கு அயல் எழுத்து நீளும் என்று முன் சூத்திரத்தில் கூறப்பட்டது. ஈற்றெழுத்தில் அயல் எழுத்து நெட்டெழுத்தாக ¬ நெடிலாக இருந்து விட்டால் இயல்பாகவே விளி அமையும்.

#### 4.3.3.1 வினை மற்றும் பண்புப் பெயர்

*"வினையினும் பண்பினும்*
*நினையத் தோன்றும் 'ஆள்' என் இறுதி*

*'ஆய்' ஆகும்மே விளி வயினான"* 146

செயல், பண்பு இரண்டையும் குறிக்க வரும் 'ஆள்' என்னும் ஈற்றை உடைய பெயர், 'ஆய்' என்று வரும் விளி ஏற்கும் போது.

சான்று : நின்றாள் - நின்றாய் கரியாள் - கரியாய்

#### 4.3.3.2 முறைப்பெயர்

*"முறைப்பெயர்க் கிளவி முறைப்பெயர் இயல"* 147

உறவுமுறை குறித்துக் கூறப்படும் ளகர ஈற்று முறைப் பெயர், னகர ஈற்று முறைப்பெயர் போலவே ஏகாரம் பெற்று விளியாகும்.

சான்று : மகள் - மகளே

#### 4.3.3.3 விளி ஏற்காத 'ள' கர ஈறு

(சுட்டு மற்றும் வினாப்பெயர்)

*"சுட்டு முதல் பெயரும் வினாவின் பெயரும்*
*முற் கிளந்தன்ன என்மனார் புலவர்"* 148

அவள், இவள், உவள் என்று வரும் ளகர ஒற்றை முடிவிலே உடைய பெயர்கள் யாவள் எனவரும் வினாப் பெயரும் முன்கூறிய சுட்டுப் பெயரும், வினாப் பெயரும் போலவே விளி ஏற்க மாட்டா.

#### 4.3.3.4 அளபெடைப் பெயர்

*"அளபெடைப் பெயரே அளபெடை இயல"* 149

ல,ள வை முடிவிலே உடைய அளபெடைப் பெயர்கள் முன் சொன்ன அளபெடைப் பெயர்கள் போலவே அளவு நீண்டு இயல்பாக விளி ஏற்று நிற்கும்.

சான்று : மாஅஅல் கோஒஒள்

### 4.3.4 அஃறிணைப் பெயர் விளி ஏற்றல்

*"புள்ளியும் உயிரும் இறுதி ஆகிய*
*அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்*
*விளிநிலை பெறூஉம் காலம் தோன்றில்*
*தெளிநிலை உடைய ஏகாரம் வரலே"* 151

உயிர், மெய் எழுத்துக்களை முடிவிலே வரக் கொண்ட அஃறிணைப் பெயரெல்லாம் விளி ஏற்கும்போது ஏகாரம் பெற்றே வரும்.

சான்று : மரம் - மரமே மான் - மானே புலி - புலியே

### 4.3.5 விரவுப்பெயர் விளி ஏற்றல்

*"கிளந்த இறுதி அஃறிணை விரவுப் பெயர்*

தன் மதிப்பீட்டு வினாக்கள்

20. கரியாள் என்னும் சொல் விளி ஏற்பதால் அடையும் மாற்றம் என்ன?

21. விளி ஏற்கா ளகர ஈற்றுப் பெயர்கள் எவை?

22.அஃறிணைப் பெயரெல்லாம் விளி ஏற்கும் பொழுது எதனைப் பெற்று வரும்?

23. விரவுப் பெயர் என்றால் என்ன?

| தன் மதிப்பீட்டு வினாக்கள் | |
|---|---|

*விளம்பிய நெறிய விளிக்கும் காலை* 152

விளிகொள் உயிர் ஈறு (இ,உ,ஐ,ஓ) புள்ளி ஈறு (ள்,ர்,ல்,ன்) என்று இதுவரை கூறப்பட்ட எட்டினையும் ஈற்றிலே கொண்டு வரும் பொதுப் பெயர்கள் மேலே சொல்லப்பட்ட வழியிலேயே விளி ஏற்கும்.

சான்று : சாந்தி - சாந்தீ     தந்தை - தந்தாய்

24. தந்தை என்னும் சொல் விளி ஏற்பதால் எவ்வகையான மாற்றம் பெறும்?

### 4.4 புறனடை

*"உள எனப்பட்ட எல்லாப் பெயரும்*
*அளபு இறந்தனவே விளிக்கும் காலை*
*சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான"* 153

உயர்திணையிலும், அஃறிணையிலும் விளி ஏற்பவை என்று சொல்லப்பட்ட, எல்லாப் பெயரும் விளி ஏற்கும் போது விளித்தல் காரணமாக எட்ட நின்று ஒலிப்பதால் அவைதம் ஒலி அளவில் மிகுந்து ஒலிக்கும் இயல்புடையனவாம்.

சான்று : நம்பீஇ     சாத்தாஅ

### 4.4.1 அம்ம எனும் இடைச்சொல்

*"அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்*
*அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்*
*விளியொடு கொள்ப தெளியு மோரே"* 153

'அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம் விளிப் பெயருடன் பொருந்தி வராது, இடைச்சொல்லோடு வந்தாலும் விளியாகக் கொள்வர் தெளிந்த புலமை உடையோர்.

சான்று : அம்மா     சாத்தா

25. உயர் திணைப் பொருளில் விளி ஏற்காதவை எவை?

### 4.4.2 உயர்திணைப் பொருள் விளி ஏற்காதவை

*"தநநுஎ என அவை முதலாகித்*
*தன்மை குறித்த னரள என் இறுதியும்*
*அன்ன பிறவும் பெயர்நிலை வரினே*
*இன்மை வேண்டும் விளியொடு கொளலே"* 154

த,ந,நு என்னும் உயிர் மெய்யையும், எ என்னும் உயிரெழுத்தையும் முதலாகக் கொண்டு, ஒருவனது உரிமைப் பொருளைக் குறித்து நின்ற ன,ர,ள என்னும் புள்ளியை முடிவிலே கொண்டு நிற்கும் சொல்லும், அவை போன்ற மறற்வையும் ஆகிய பெயர்ச் சொற்களும் வருமாயின் அவை விளி ஏற்பதில்லை.

சான்று :

தமன், தமர், தமள், நமன், நமர், நமள், நுமன், நுமர், எமன், எமள், எமர், எம்மாள், எம்மார் என்றெல்லாம் வரும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**தொகுப்புரை :**

உயர்திணையில் விளியேற்கும் உயிர் ஈறு மெய் ஈறு மற்றும் அஃறிணைச் சொற்கள் விளியேற்கும் முறை, விரவுப் பெயர் விளியேற்றல் ஆகியனவும் விளி ஏற்கா உயர்திணை, அஃறிணைச் சொற்களும் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

**தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு**

| | | | |
|---|---|---|---|
| 1 | - | 4.1 ஐப் பார்க்க | |
| 2 | - | 4.2 | " |
| 3 | - | 4.2.1 | " |
| 4 | - | 4.2.2 | " |
| 5 | - | 4.2.2.1 | " |
| 6 | - | 4.2.3 | " |
| 7 | - | 4.2.3.1 | " |
| 8 | - | 4.2.3.2 | " |
| 9 | - | 4.2.3.3 | " |
| 10 | - | 4.3 | " |
| 11 | - | 4.3.1 | " |
| 12 | - | 3.3.1.1 | " |
| 13 | - | 4.3.1.2 | " |
| 14 | - | 4.3.1.4 | " |
| 15 | - | 4.3.1.5 | " |
| 16 | - | 4.3.1.6 | " |
| 17 | - | 4.3.2 | " |
| 18 | - | 4.3.2.2 | " |
| 19 | - | 4.3.3 | " |
| 20 | - | 4.3.3.1 | " |
| 21 | - | 4.3.3.3 | " |
| 22 | - | 4.3.4 | " |
| 23 | - | 4.3.5 | " |
| 25 | - | 4.4.2 | " |

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**ஒரு பக்க வினாக்கள்**

1. உயர்திணை முறைப்பெயர் (உயிர்ஈறு) விளியேற்கும் முறையை விளக்குக
2. விரவுப் பெயர் விளியேற்கும் முறையை எழுதுக.
3. விளி ஏற்கா னகர ஈறுகளை வரிசைப்படுத்துக.
4. அஃறிணைச் சொற்கள் விளியேற்கும் முறையை விளக்குக
5. லகர, ளகர ஈறு விளியேற்கும் விதத்தினை விளக்குக.

**கட்டுரை வினாக்கள்**

1. உயர்திணை உயிர் ஈறு விளியேற்கும் முறையைக் கட்டுரைக்க.
2. உயர்திணை மெய்ஈறு விளியேற்கும் முறையைக் கட்டுரைக்க.

# அலகு - 5

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## பெயரியல்

### அறிமுகம்

பெயரியல் என்னும் இப்பகுதியில் சொற்களின் இயல்பு, உயர்திணைப் பெயர்கள், அஃறிணைப்பெயர்கள், விரவுப் பெயர்கள், விரவுப் பெயர்களின் தொகை விரி போன்றவைகள் விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

எல்லாச் சொற்களும் பொருளைக் குறிப்பனவாக இருப்பினும், பெயர்ச் சொல்லுக்கான உயர்திணை, அஃறிணை மற்றும் விரவுப் பெயர்களின் தொகை விரிகளை விளக்குவதே இப்பகுதியின் நோக்கமாகும்.

### பாட அமைப்பு

5.1 சொற்களின் இயல்பு

5.1.1 சொல்லும் பொருளும்

5.2 சொற்களின் வகை

5.3 பெயர்ச்சொல்

5.3.1 உயர்திணைப் பெயர்கள்

5.3.1.1 புறனடை

5.3.2 அஃறிணைப் பெயர்கள்

5.3.2.1 அஃறிணை விகுதிகள்

5.3.2.2 புறனடை

5.3.3 விரவுப் பெயர்கள்

5.3.4 விரவுப் பெயர் தொகை வகை

5.3.4.1 இயற்பெயர்

5.3.4.2 சினைப் பெயர்

5.3.4.4 சினை முதற் பெயர்

5.3.4.5 முறைப்பெயர்

5.3.5 ஒன்று, ஒருத்தி என்னும் விரவுப் பெயர்கள்

5.3.6 ஆண்மை சுட்டிய பெயர்

5.3.7 பன்மை சுட்டிய பெயர்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

5.3.8 தாம் என்னும் பெயர்

5.3.9 தான் என்னும் பெயர்

5.3.10 எல்லாம் எனும் பெயர்

5.3.11 நீயிர், நீ எனும் பெயர்

5.3.12 ஒருவர் என்னும் கிளவி

5.3.13 புறனடை

தொகுப்புரை

பெயர்ச்சொல்என்பது இரண்டு திணைகளுக்கும் ஒத்த உரிமையதான பொதுத்திணை மூன்றிலும் வரும் பெயரிலுள்ள உயர்திணை, அஃறிணை மற்றும் விரவுப் பெயர்கள் பற்றி இவ்வியலில் காண்போம்.

## 5.1 சொற்களின் இயல்பு

1. சொல்லின் இயல்பு யாது?

பெயர்ச்சொல், வினைச் சொல், இடைச்சொல், உரிச்சொல் என உள்ள எல்லாச் சொற்களுமே பொருளைக் குறிப்பனவாகும். பொருள் குறிக்காது நிற்கும் சொல் எதுவும் இல்லை.

*"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"* 155

### 5.1.1 சொல்லும் பொருளும்

*"பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்*
*சொல்லின் ஆகும் என்மனார் புலவர்"* 156

தன்னில் வேறாகிய பொருள் அறியப்படுதலும், தானே பொருள் விளங்க நிற்பதும் என்னும் இரண்டும் சொல்லால் ஆகும் என்பர் புலவர் பெருமக்கள்.

சான்று :

1. கந்தன் வந்தான் என்பதில் வருதல் பொருள் உணர்த்தியது

2. மரம், கல் என்பதால் சொல் தானே பொருள் விளக்கிற்று

*"தெரிபு வேறு நிலையிலும் குறிப்பில் தோன்றலும்*
*இருபாற்று என்ப பொருண்மை நிலையே"* 157

சொல்லே பொருள் விளங்க நிற்பதோடு சொல் மட்டும் தோன்றாது சொல்லோடு கூடிய குறிப்பால் பொருள் உணர்த்துவது என்று இருவகையான தன்மை உடையது என்பது புலவர் கூற்று.

சான்று :

அவன் வந்தான் என்பதில் பொருள் தெரிய நின்றது. ஒருவர் வந்தார் என்பதில் ஆண்பால், பெண்பால் குறிப்பால் தோன்ற நின்றன.

### 5.2 சொற்களின் வகை

*"சொல் எனப் படுவ பெயரே வினை என்று*
*ஆ இரண்டென்ப அறிந்திசி னோரே" 158*

சொல் - பெயர்ச்சொல், வினைச்சொல் என இரண்டு வகையாகும் என்பது கற்றறிந்த புலவர் சொன்னதாகும்.

*"இடைச்சொல் கிளவியும் உரிச்சொல் கிளவியும்*
*அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப" 159*

இடைச்சொல், உரிச்சொல் என்னும் இரண்டும் பெயர்ச்சொல், வினைச்சொல் இவற்றைச் சார்ந்து தோன்றும் என்பர்.

### 5.3 பெயர்ச்சொல்

பெயர், வினை, இடை, உரி என்று முன் சொல்லப்பட்ட நான்கு வகைச் சொற்களில் பெயர்ச்சொல் என்பது உயர்திணை, அஃறிணை மற்றும் இந்த இரண்டு திணைகளுக்கும் ஒத்த உரிமையதான பொதுத்திணை என்னும் மூன்றிலும் தோன்றி வரும்.

*"அவற்றுள்*
*பெயர் எனப்படுபவை தெரியும் காலை*
*உயர்திணைக்கு உரிமையும் அஃறிணைக்கு உரிமையும்*
*ஆஇரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்*
*அம்மூஉருபின தோன்ற லாறே" 160*

உயர்திணை, அஃறிணை என்னும் இருதிணைக்கும் ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்றுள்ள ஐம்பால் முறைக்கும் உரியதை உணர்த்துவது பெயர்ச் சொல்லாகும்.

*"இருதிணைப் பிரிந்த ஐம்பால் கிளவிக்கும்*
*உரியமை உரிய பெயர் வயினான 161*

#### 5.3.1 உயர்திணைப் பெயர்கள்

*"அவ்வழி*
*அவன் இவன் உவன் என வருஉம் பெயரும்*
*அவள் இவள் உவள் என வருஉம் பெயரும்*
*அவர் இவர் உவர் என வருஉம் பெயரும்*
*யான் யாம் நாம் என வருஉம் பெயரும்*
*யாவன் யாவள் யாவர் என்னும்*
*ஆவயின் மூன்றொடு அப் பதினைந்தும்*
*பால் அறிவறிந்த உயர்திணைப் பெயரே" 162*

பெயர்ச் சொற்களில் 'அவன்' தொடங்கி யாவர் என்பது முடிய உள்ள பதினைந்தும் பால் தெரியக் கூறும் உயர்திணைப் பெயர்களாம்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

2. சொல்லின் வகைகளை எழுதுக.

3. பெயர்ச் சொல் என்றால் என்ன?

4. பெயர்ச் சொல்லின் இயல்பு யாது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

"ஆண்மை அடுத்த மகன் என் கிளவியும்
பெண்மை அடுத்த மகள் என் கிளவியும்
பெண்மை அடுத்த இகர இறுதியும்
நம் ஊர்ந்து வரூஉம் இகரஐகாரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ ஆஇரு பெயரும்
சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்
அவை முதல் ஆகிய பெண்டு என் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பதினைந்து அவற்று ஓரன்ன" 163

ஆண்மகன், பெண்மகள், பெண்பாட்டி, நம்பி, நங்கை, மகன், மகள், மாந்தர், மக்கள் அவ்வாளன், அப்பெண்டு, இவ்வாளன், உவ்வாளன், அம்மாட்டான், இம்மாட்டான், உம்மாட்டான், அவ்வாட்டி, இவ்வாட்டி, உவ்வாடி, பொன் அன்னான், பொன் அன்னாள் என்ற வரும் இவை பதினைந்தும் பால் உணர்த்தும் உயர்திணைப் பெயருணர்த்துவதில் ஒரு தன்மையன

"எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை அடுத்த மகள் என்கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர்" 164

எல்லாரும் என்னும் சொல், எல்லீரும் எனும் சொல், பெண் மகள் என்னும் சொல் ஆகிய இம்மூன்றும் பால் உணர்த்தும் உயர்திணைப் பெயர்கள் என்பர் புலவர்.

5. அவ்வாட்டி இவ்வாட்டி இவை எத்திணைக் குரியவை?

"நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பபெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறை நிலைப்பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கின் ஆடு இயற் பெயரே
இன்றிவர் என்னும் எண் இயற்பெயரோடு
அன்றி அனைத்தும் அவற்று இயல்பினவே 165

6. குழுப் பெயருக்குச் சான்று தருக.

சோழியன், சேரமான், அவையத்தார், தச்சன், வெற்பன், சேயோன், தந்தையர், தாயர், பெருந்தலைவர், ஆயர், பட்டிபுத்திரர், ஒருவர், இருவர் என்றுள்ள இவை எல்லாம் பால் விளங்கத் தெரியும் உயர்திணைப் பெயர்களாகும்.

### 5.3.1.1 புறனடை

தன் மதிப்பீட்டு வினாக்கள்

*"அன்ன பிறவும் உயர்திணை மருங்கில்*
*பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த*
*என்ன பெயரும் அத்திணை அவ்வே" 166*

இதுவரை கூறப்பட்டவையும், இன்னும் இதுபோல் உள்ள பெயர்கள் பிறவும், உயர்திணையில் பன்மை ஒருமைப்பால் உணர்த்தும் எல்லாப் பெயர்களும், உயர்திணைப் பெயர்களே ஆகும்.

### 5.3.2 அஃறிணைப் பெயர்கள்

அது, இது, உது என வரும் பெயரும், இப்பெயர்க்கு முதலாக ஆய்தப் புள்ளியுடன் கூடிய அஃது, இஃது, உஃது என வரும் பெயரும், அவை, இவை, உவை என வரும் பெயரும், சுட்டு முதலாக வரும் வகரப் பெயர், அவ், இவ், உவ் என்பனவும், யாது, யா, யாவை என வரும் வினாப்பெயரும் என்று மூன்று வகையான இப்பதினைந்து பெயர்களும், பால் விளங்க வரும் அஃறிணைப் பெயர்களாகும் என்பதை விளக்குகிறது இந்நூற்பா

7.அஃறிணைப் பெயருக்குச் சான்று தருக.

*"அது இது உது என வரூஉம் பெயரும்*
*அவை முதல் ஆகிய ஆய்தப் பெயரும்*
*அவை, இவை, உவை என வரூஉம் பெயரும்*
*அவை முதலாகிய வகரப் பெயரும்*
*யாது யா யாவை என்னும் பெயரும்*
*ஆவியின் மூன்றொடு அப் பதினைந்தும்*
*பால் அறிவந்த அஃறிணைப் பெயரே 167*

8.அஃறிணைக் குரிய வினாப் பெயர்களை எழுதுக.

இவை மட்டுமின்றி பல்ல, சில, உள்ள, இல்ல என்னும் பெயரும், வருவது, செல்வது போன்ற வினைப் பெயர்க் கிளவியும், கரியது செய்யது என்னும் பண்பு கொள் பெயரும், இந்த அளவு என்று எண்ணிக் கணக்கிட்டுச் சொல்ல வரும் எண்ணுக்குறிப் பெயரும், ஒன்றோடு ஒன்றை ஒப்பிட்டுச் சொல்ல வரும். ஒப்பின் ஆகிய பெயரும் என்றுள்ள ஒன்பதும் அஃறிணையில் பாலுணர்த்தி நிற்கும் பெயர்களாம் என்பதை விளக்குகிறது பின்வரும் நூற்பா.

*பல்ல பல சில என்னும் பெயரும்*
*உள்ள இல்ல என்னும் பெயரும்*
*வினைப் பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்*
*இனைத்து எனக் கிளக்கும் எண்ணுக் குறிப் பெயரும்*
*ஒப்பின் ஆகிய பெயர்நிலை உளப்பட*
*அப்பால் ஒன்பதும் அவற்று ஓரன்ன" 168*

### 5.3.2.1 அஃறிணை விகுதிகள்

*"கள்ளொடு சிவணும் அவ்இயற்பெயரே*

தன் மதிப்பீட்டு வினாக்கள்

9. 'கள்ளொடு சிவணும்' அஃறிணை எச்சொல்லாகும்?

*கொள்வழி உடைய பலஅறி சொற்கே"* 169

'கள்' என்று விகுதி பெற்று முடியும் ஈற்றுச் சொல்லோடு பொருந்துவன அஃறிணை இயற்பெயர். இது 'கள்' என்னும் ஈற்றொடு பொருந்தப் பல அறி சொல்லாகும்.

சான்று :

கடல், மலை, குதிரை என்னும் இயற்பெயர்கள் 'கள்' விகுதி பெற்று கடல்கள், மலைகள், குதிரைகள் எனப் பல அறி சொல்லாயின.

#### 5.3.2.2 புறனடை

10. அஃறிணை ஒருமை மற்றும் பன்மைப் பெயருக்குச் சான்று தருக.

*"அன்ன பிறவும் அஃறிணை மருங்கின்*
*பன்மையும் ஒருமையும் பாலறி வந்த*
*என்ன பெயரும் அத்திணை அவ்வே"* 170

பெயர்கள் போன்ற பிறவும், அஃறிணையில் பன்மை ஒருமையுமாகிய பால் விளங்க வருகின்ற எல்லாப் பெயரும் அஃறிணைக்குரிய பெயர்களாகும்.

*"தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்*
*ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே* 171

'கள்" என்னும் விகுதியோடு பொருந்தாத அஃறினை இயற்பெயர் ஒருமையும், பன்மையும் விளங்க அதற்குரிய வினையொடு வரும்போது பொருள் விளங்கித் தெரிய நிற்கும்.

சான்று :

ஆ வந்தது

ஆ வந்தன என்பதில் வந்தது, வந்தன என்னும் வினையால் பால் விளங்கித் தெரிய நின்றது.

### 5.3.3 விரவுப் பெயர்கள்

11. விரவுப் பெயர் என்றால் என்ன?

உயர்திணை, அஃறிணை என்ற இரண்டு திணைக்கும் ஒத்த உரிமை உடைய எல்லாப் பெயரும், உயர்திணையில் உயர்திணைப் பெயராகவும், அஃறிணையில் அஃறிணைப் பெயராகவும் வேறுபடும். விரவுப் பெயர் - பொதுப் பெயர் என்றுள்ளவற்றை எல்லாம் ஆராந்தறியும் போது அவை, தம்தம் மரபுக்கேற்ற வினையோடு பொருந்தியல்லாது திணை விளங்கத் தெரியா என்கிறது பின்வரும் நூற்பா.

*"இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்*
*திரிபு வேறுபடூஉம் எல்லாப் பெயரும்*
*நினையும் காலைத் தம்தம் மரபின்*
*வினையோ டல்லது பால் தெரிபு இலவே"* 172

சான்று : சாத்தன் வந்தான், வந்தது

முடவன் வந்தான், வந்தது
என்ற வழி பாலும், திணையும் உணர்த்தின.

பண்டைத் தமிழர் 'ஆ' வையும் எருதையும் அவற்றின் பயன்பாடு கருதிப் போற்றி வந்ததோடு, அவற்றிற்குச் சாத்தி, சாத்தன் என்று பெயரிட்டனர். முடவன் என்பது முட எருதையும் முடத்தி என்பது முடப் பசுவையும் குறிக்கும் என்பது சேனாவரையம்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

*"நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்*
*தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு*
*உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே*
*அன்ன மரபின் வினை வயினான"* 173

நிகழ்காலம் பற்றி வருகின்ற இயல்பாகப் பாலுணர்த்தும் சொல், உயர்திணை ஒருமைப்பால் தோன்றுதற்கேற்ற வினையிடத்து பால் உணர்த்தலும் உண்டு.

சான்று :

சாத்தி சாந்தரைக்கும்

சாத்தன் யாழிசைக்கும் என்பதில் சாந்தரைப்பதும் யாழிசைப்பதும் ஆகிய வினை அஃறிணைக்கு இயைபுடையதல்ல ஆதலின் உயர்திணை ஒருத்தி, ஒருவன் செயலாதலின் உயர்திணை ஒருமைக்கு விளக்கமானது.

### 5.3.4 விரவுப் பெயர் தொகை வகை

*இயற்பெயர் சினைப்பெயர் சினை முதற் பெயரே*
*முறைப் பெயர்க் கிளவி தாமே தானே*
*எல்லா நீயிர் நீ எனக் கிளந்து*
*சொல்லிய அல்ல பிறவு ஆ அங்கு*
*அன்னவை தோன்றின் அவற்றொடும் கொளலே* 174

12. எல்லாம், நீயிர் - இச்சொற்கள் எவ்வகைப் பெயர்?

இயற்பெயர், சினைப்பெயர், சினை முதற் பெயர், முறைப் பெயர்க்கிளவி, தாம், தான், எல்லாம், நீயிர், நீ என வருவனவும் இவை போன்ற மற்றவையும் விரவுப் பெயர்களாகும்.

"அவற்றுள்
*நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்*
*நான்கென மொழிமனார் சினைமுதல் பெயரே*
*முறைப் பெயர்க்கிளவி இரண்டு ஆகும்மே*
*ஏனைப் பெயரே தம்தம் மரபின"* 175

விரவுப் பெயர்களில் இயற்பெயர், சினைப்பெயர், சினைமுதற் பெயர் என்னும் ஒவ்வொன்றும் நான்காகும். முறைப்பெயர் இரண்டு மற்றைய ஐந்து பெயர்களும் தம்தம் வழியின அதாவது அவை ஒவ்வொன்றும் ஒன்று.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

#### 5.3.4.1 இயற்பெயர்

13.இயற்பெயர் என்றால் என்ன?

*"அவைதாம்*
*பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்*
*பன்மை இயற்பெயர் ஒருமை இயற்பெயர் என்று*
*அந்நான்கு என்ப இயற்பெயர் நிலையே"* 176

இயற்பெயர் தாம் பெண், ஆண், பன்மை, ஒருமை என நான்காகும்.

#### 5.3.4.2 சினைப்பெயர்

இயற்பெயர் போன்றே சினைப்பெயரும் ஆண்பால், பெண்பால், பலவின்பால், ஒன்றன்பால் என நான்காகும் என்கிறது இந்நூற்பா.

*"பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்*
*பன்மைச் சினைப்பெயர் ஒருமைச் சினைப்பெயர் என்று*
*அந்நான்கு என்ப சினைப்பெயர் நிலையே"* 177

#### 5.3.4.4 சினைமுதற் பெயர்

14.சினைமுதற் பெயர் எத்தனை வகைப்படும். அவை யாவை?

சினைமுதல் பெயரும் ஆண், பெண், ஒன்று, பல என நான்காகும் என்கிறது இந்நூற்பா

*"பெண்மை சுட்டிய சினை முதற் பெயரே*
*ஆண்மை சுட்டிய சினை முதற் பெயரே*
*பன்மை சுட்டிய சினை முதற் பெயரே*
*ஒருமை சுட்டிய சினைமுதற் பெயர் என்று*
*அந்நான்கு என்ப சினை முதற் பெயரே"* 178

#### 5.3.4.5 முறைப் பெயர்

15. முறைப் பெயர் என்றால் என்ன?

*"பெண்மை முறைப்பெயர் ஆண்மை முறைப்பெயர் என்று*
*ஆ இரண்டு என்ப முறைபெயர் நிலையே"* 179

முறைப்பெயர் ஆண்பால், பெண்பால் என்று இரண்டே ஆகும்.

#### 5.3.5 ஒன்று, ஒருத்தி என்னும் விரவுப்பெயர்கள் (பெண்மை சுட்டிய பெயர்)

*"பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்*
*ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே"* 180

பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும், பெண்பால் பற்றிச் சொல்லப்படும் இயற்பெயர், முறைப்பெயர், சினைப்பெயர், சினை முதல் பெயர் என உள்ள நான்கு பெயரும், அஃறிணையில் ஒன்று என்று வருதற்கும், உயர்திணையில் ஒருத்தி என வருதற்கும் உரியன.

### 5.3.6 ஆண்மை சுட்டிய பெயர்
### (ஒன்று, ஒருவன் என்னும் விரவுப் பெயர்கள்)

தன் மதிப்பீட்டு வினாக்கள்

ஆண்பால் குறிக்க வரும், ஆண்மை இயற்பெயர், சினைப்பெயர், முறைப்பெயர், சினைமுதற் பெயர் என்ற நான்கும் அஃறிணையில் ஒன்றிற்கும், உயர்திணையில் ஒருவனைக் குறிக்கவுமே உரியதாகும்.

*"ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்*
*ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே"* 181

சான்று : சாத்தன் வந்தது சாத்தான் வந்தான்

### 5.3.7 பன்மை சுட்டிய பெயர்

*"பன்மை சுட்டிய எல்லா பெயரும்*
*ஒன்றே பலவே ஒருவர் என்னும்*
*என்று இப்பாற்கு ஓரன்னவ்வே"* 182

ஒன்றுக்கு மேற்பட்ட பலவற்றைச் சுட்டிச் சொல்லவரும் பன்மை இயற்பெயர், பன்மைச் சினைப்பெயர், பன்மை சினை முதல் பெயர் எல்லாம் அஃறிணை ஒருமை, அஃறிணைப் பன்மை, உயர்திணைப் பன்மை என்னும் மூன்று பாலுக்கும் உரியன.

சான்று : யானை வந்தான் யானை வந்தது யானை வந்தன

*"ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்*
*ஒன்றற்கும் ஒருவர்க்கும் ஒன்றிய நிலையே"* 183

ஒரு என்னும் ஒன்றைச் சுட்டிச் சொல்ல வரும் ஒருமை இயற்பெயர், ஒருமை சினைப் பெயர், ஒருமை சினை முதற் பெயர் எல்லாம் அஃறிணை ஒருமைக்கும், உயர்திணை ஒருமைக்கும் உரியதாகும்.

சான்று : கோதை வந்தது கோதை வந்தாள் கோதை வந்தான்

### 5.3.8 தாம் என்னும் பெயர்

தாம் என்னும் பெயர் உயர்திணை, அஃறிணை என்னும் இருதிணையிலும் பன்மைப்பாலுக்கே உரியது (பலர்பால், பலவின்பால்) என்கிறது பின்வரும் நூற்பா.

16. தாம் என்னும் கிளவியின் பொருள் என்ன?

*"தாம் என் கிளவி பன்மைக்கு உரித்தே"* 184

சான்று : தாம் வந்தார் தாம் வந்தன

### 5.3.9 தான் எனும் பெயர்

தான் என்னும் பெயர், உயர்திணை, அஃறிணை என்னும் இரண்டிலும் ஒருமைக்கே உரியதாம் என்கிறது இந்நூற்பா.

17. தான் என்னும் கிளவியின் பொருள் என்ன?

*"தான் என்கிளவி ஒருமைக்கே உரித்தே"* 185

சான்று : தான் வந்தான் தான் வந்தாள் தான் வந்தது

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 5.3.10 எல்லாம் எனும் பெயர்

*"எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி*
*பல்வழி நுதலிய நிலைத்து ஆகும்மே"* 186

. எல்லாம் என்னும் ஒன்றுக்கு மேற்பட்ட பலவற்றைக் குறிக்க வரும் பெயர், உயர்திணை, அஃறிணை என்னும் இரண்டிலும் பன்மைப் பொருளுணர்த்தும்.

சான்று : எல்லாம் வந்தார் எல்லாம் வந்தன

*"தன் உள்ளுறுத்த பன்மைக்கு அல்லது*
*உயர்திணை மருங்கில் ஆக்கம் இல்லை"* 187

பன்மைப் பொருளுணர்த்தும் எல்லாம் என்னும் இப்பெயர் உயர்திணையில் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைக்கே வரும்.

### 5.3.11 நீயிர், நீ என்னும் கிளவி

18. தன்மைப் பன்மைக்குரிய பெயர்நிலைக் கிளவி எது?

நீயிர், நீ என்னும் இரண்டு பெயரும், பால் விளங்கத் தோன்றாது, இரு திணைக்கும் பொருந்தும் சொல்லாகும் என்பதை விளக்குகிறது இந்நூற்பா.

*"நீயிர் நீ என வரூஉம் கிளவி*
*பால் தெரிபு இலவே உடன் மொழிப் பொருள்* 188

சான்று : நீயிர் வந்தீர் நீ வந்தாய் என வரும்

*"அவற்றுள்*
*நீ என் கிளவி ஒருமைக்கு உரித்தே"* 189

19. முன்னிலை ஒருமைக்குச் சான்று தருக.

நீயிர், நீ என்னும் இவ்விரண்டினுள் நீ எனும் பெயர் ஒருமையைக் குறிக்கும் தன்மையது.

சான்று : நீ வந்தாய்

*"ஏனைக் கிளவி பன்மைக்கு உரித்தே"* 190

நீயிர் என்னும் சொல் பன்மைப் பொருள் உணர்த்துதற்கு உரியது.

சான்று : நீயிர் வந்தீர்

### 5.3.12 ஒருவர் என்னும் கிளவி

*"ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி*
*இருபாற்கும் உரித்தே தெரியும் காலை"* 191

20. 'ஒருவர்' என்னும் சொல் எப்பாலுக் குரியது?

ஒன்றைச் சுட்டும் ஒருவர் என்னும் பெயர்ச்சொல், உயர்திணை ஆண்பால், பெண்பால் என்னும் இருபாலுக்கும் உரியதாகும்.

சான்று : ஒருவர் வந்தார்

*"தன்மை சுட்டின் பன்மைக்கு ஏற்கும்"* 192

'ஒருவர் என்னும் இப்பெயரின் உண்மை இயல்பை நோக்குமிடத்து,

ஒருமைப் பெயராக உள்ள இச்சொல் பன்மைப் பெயராகவும் கொள்ளத்தக்கதாகும்.

சான்று : ஒருவர் வந்தார்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**5.3.13 புறனடை**

*"இன்ன பெயரே இவை எனல் வேண்டின்*
*முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல்* 193

முன் சூத்திரங்களில் கூறிய நீயிர், நீ, ஒருவர் என்று வரும் மூன்று பெயர்களும், அவை என்ன பால் உணர்த்தும் பெயர் என்று அறிய வேண்டுமென்றால், சொல்லுபவனின் குறிப்புடன் கூட்டிப் பொருளுணர வேண்டும். சுட்டும் பால் தெளியும் வழியிதாம்.

*"மகடூஉ மருங்கில் பால்திரி கிளவி*
*மகடூஉ இயற்கை தொழில் வயினான"* 194

பெண்மைப் பொருள் பற்றி, பால் திரிந்த பெண்மகன் என்னும் சொல், வினைச் சொல்லாக வரும் பொழுது பெண்பாலுக்கு உரியதான வினையே ஏற்கும்.

சான்று : பெண்மகன் வந்தாள்

*"ஆ ஓ ஆகும் பெயருமார் உளவே*
*ஆ இடம் அறிதல் செய்யுள் உள்ளே"* 195

'ஆ' காரம், ஓகாரமாகத் திரியும் பெயர்களும் உண்டு. அப்படித் திரியும் அவை செய்யுளில் வரும்.

சான்று :

"கழனி நல்லூர் மகிழ்நர்க் கெண் இழை

நெகிழப் பருவரல் செப்பா தோயே"

என்னும் நற்றிணைப் பாடலின் முடிவில் ஆ,ஓ ஆனது.

**5.3.14 உயர்திணை ஈறு அமைந்த விரவுப் பெயர்**

*"இறைச்சிப் பொருள்வயின் செய்யுளுள் கிளக்கும்*
*இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா*
*நிலத்துவழி மருங்கில் தோன்றலான"* 196

21.உயர்திணை ஈறு அமைந்த விரவுப் பெயருக்குள் சான்று தருக.

செய்யுளில் அதாவது பாடல்களில் கருப்பொருள் குறிக்கும் இரண்டு திணைக்கும் உரிய பெயர், உயர்திணை குறிக்காது, அந்த அந்தச் செய்யுள் குறிக்கும் கருப்பொருள் சார்ந்த நிலத்தின் அஃறிணைப் பொருளாய் வழங்கி வரும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நிலப்பெயர் சார்ந்த கருப்பொருள் அஃறிணைப் பொருளாக அமையும்.

"கடுவன் முதுமகள் கல்லா மூவற்கு
வதுவை அயர்ந்த வன்பறழ்க் குமரி"

தன் மதிப்பீட்டு வினாக்கள்

என்னும் பாடலில் கடுவன், முதுவன், குமரி என்பன அஃறிணைப் பொருளாயின.

*"திணையொடு பழகிய பெயர் அலங்கடையே"* 197

அந்த, அந்தத் திணைக்கு உரிய பெயர் வழங்கி வராத இடத்து, கருப்பொருள் உணர்த்தும் பொதுப்பெயர், உயர்திணை உணர்த்தாது. அஃறிணை உணர்த்தும்.

சான்று :

'கூர்வேல் காளை' என்பதில் காளை அஃறிணை உயர்திணைக்கானது.

**தொகுப்புரை :**

பெயரியல் என்னும் இப்பகுதியில் சொற்களின் இயல்பு, உயர்திணைப் பெயர்கள், அஃறிணைப் பெயர்கள், விரவுப்பெயர்கள், விரவுப்பெயர்களின், தொகை விரி மற்றும் மூவிடப் பெயர்கள் விளக்கப்பட்டுள்ளன.

**தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு**

| | | |
|---|---|---|
| 1 | - | 5.1 ஐப் பார்க்க |
| 2 | - | 5.2 " |
| 3,4 | - | 5.3 " |
| 5,6 | - | 5.3.1 " |
| 7,8 | - | 5.3.2 " |
| 9 | - | 5.3.2.1 " |
| 10 | - | 5.3.2.2 " |
| 11 | - | 5.3.3 " |
| 12 | - | 5.3.4 " |
| 13 | - | 5.3.4.1 " |
| 14 | - | 5.3.4.4 " |
| 15 | - | 5.3.4.5 " |
| 16 | - | 5.3.8 " |
| 17 | - | 5.3.9 " |
| 18 | - | 5.3.10 " |
| 19 | - | 5.3.11 " |
| 20 | - | 5.3.12 " |
| 21 | - | 5.3.14 " |

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**ஒருபக்க வினாக்கள்**

1. சொற்களின் இயல்புகளை விளக்குக.
2. மூவிடங்களை விளக்குக
3. இயற்பெயர், சினைப்பெயர் இவற்றைச் சான்று தந்து விளக்குக
4. பன்மை சுட்டிய பெயர்கள் எவை? சான்று தருக.

**கட்டுரை வினாக்கள்**

1. உயர்திணைப் பெயர்களைச் சான்றுடன் விளக்குக
2. அஃறிணைப் பெயர்களைக் கட்டுரைக்க
3. விரவுப்பெயர் என்றால் என்ன? அதன் தொகை, வகைகளை விளக்குக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

# அலகு - 6

## வினையியல்

**அறிமுகம்**

வினையியல் என்னும் இப்பகுதியில் வினைச் சொல்லின் இயல்பு, வினைமுற்று மற்றும் அதன் வகைகள், பெயரெச்சம், வினையெச்சம் மற்றும் அதற்குரிய வாய்பாடுகள், காலமயக்கம் போன்றவைகள் விளக்கப்பட்டுள்ளன.

**நோக்கம் :**

வினை என்பதற்குச் செயல் என்பது பொருள் வினைச் சொல்லாகிய வினைமுற்று ஈறு, பெயரெச்ச ஈறு மற்றும் வினையெச்ச ஈறுகளை விளக்குவதே இவ்வியலின் நோக்கம்.

**அமைப்பு :**

6.1 வினை இலக்கணம்

6.2 காலம் மூன்று

6.3 வினைச் சொற்களின் வகை

6.3.1 உயர்திணை வினை

6.3.2 செய்கு எனும் வாய்ப்பாட்டு வினை

6.3.3 படர்க்கை ஒருமை வினைமுற்று

6.3.4 படர்க்கைப் பன்மை வினைமுற்று

6.3.4.1 செய்மார் எனும் வாய்பாடு

6.3.5 உயர்திணைக்கு உரிய வினைமுற்று

6.3.5.1 தன்மைப் பன்மைக்கு வேறுபாடு

6.3.6 யார் என்னும் கிளவி

6.3.7 ஈறு திரியும் வினைமுற்று

6.3.8 குறிப்பு வினைமுற்று

6.3.9 தெரிநிலை வினைமுற்று

6.4 அஃறிணை வினை (பன்மை வினைமுற்று)

6.4.1 பால் அறிவந்த வினைமுற்று

6.4.2 ஒருமை வினைமுற்று

6.4.3 எவன் என்னும் குறிப்பு வினை

6.4.4 குறிப்பு வினை முற்று

6.4.4.1 குறிப்பு வினைமுற்றின் ஈறு

6.5 விரவு வினை

6.5.1 முன்னிலை ஒருமை வினைமுற்று

6.5.2 முன்னிலை பன்மை வினைமுற்று

6.5.3 மற்ற வினைகள்

6.5.3.1 வியங்கோள் வினை

6.5.4 செய்யும் எனும் வினை

6.5.5 வினையெச்ச வாய்பாடுகள்

6.5.5.1 வினை எஞ்சு கிளவி அடுக்கி முடிதல்

6.5.6 பெயரெச்ச வாய்பாடு

6.5.7 பெயரெச்சம், வினையெச்சம் - செய்யா என்னும் எதிர்மறை

6.5.7.1 'ஈறு கெடும்' செய்யும் எனும் பெயரெச்சம்

6.5.7.2 செய்து எச்சம்

6.5.7.3 முக்காலத்திற்கும் ஒத்ததை நிகழ்காலத்தில் கூறல்

6.5.8 கால மயக்கம்

6.5.8.1 சிறப்புப் பொருள் முதலில்

6.5.8.2 இது செயல் வேண்டும் என்னும் முற்று

6.5.8.3 வற்புறுத்தல் பொருளில் வரும் வினா

6.5.9 காலமயக்கத்திற்குச் சிறப்பு விதி

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## 6.1 வினை இலக்கணம்

வினை என்பதற்குச் செயல் என்பது பொருள். வினைச் சொல் என்பது வேற்றுமை உருபுகள் ஏற்று வராது. வினைச் சொல் காலம் காட்டும் என்று வினைச் சொல்லுக்கு இலக்கணம் பகர்கிறது இந்நூற்பா

1. வினைச் சொல் என்றால் என்ன?

*"வினை எனப்படுவது வேற்றுமை கொள்ளாது*
*நினையும் காலைக் காலமொடு தோன்றும்"* 198

சான்று : கந்தன் சென்றான்

இதில் செல்லுதல் - வினை. வேற்றுமை ஏற்று நிற்கவில்லை. ஆனால் சென்றான் என்று இறந்தகாலம் காட்டி நின்றது.

| தன் மதிப்பீட்டு வினாக்கள் | |
|---|---|

## 6.2 காலம் மூன்று

காலம் மூன்று என்பர் அறிஞர் பெருமக்கள்,

*"காலம் தாமே மூன்றென மொழிப"* 199

2. காலம் எத்தனை வகைப்படும்?

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலமும் வினைச்சொற்கள் தோன்றும் முறையில் குறிப்பு வினையொடு பொருந்தும் உண்மைத் தன்மையனவாம் என்கிறது இந்நூற்பா

*"இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா*
*அம்முக்காலமும் குறிப்பொடும் கொள்ளும்*
*மெய்நிலை உடைய தோன்றலாறே"* 200

சான்று : உண்டான் உண்ணா நின்றான்

உண்பான் என இறந்த காலமும், நிகழ்காலமும், எதிர்காலமும் உணர்த்தின. குறிப்பொடு கொள்ளும் என்றது காலம் வெளிப்படத் தோன்றாது, சொல்லுபவன் குறிப்பால் தோன்றி நிற்கும் நிலையாம்.

3. வினைச் சொல்லின் இலக்கணம் யாது?

## 6.3 வினைச் சொற்களின் வகை

*"குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்*
*காலமொடு வருஉம் வினைச்சொல் எல்லாம்*
*உயர்திணைக்கு உரிமையும் அஃறிணைக்கு உரிமையும்*
*ஆஇரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்*
*அம் மூஉருபின தோன்ற லாறே"* 201

4.வினைமுற்று என்றால் என்ன?

குறிப்பு, வினை என்னும் இருபொருளிலும் முறைப்படித் தோன்றிக் காலம் காட்டி வரும் எல்லா வினைச் சொற்களும் தோன்றுமிடத்து உயர்திணை, அஃறிணை மற்றும் இரண்டு திணைக்கும் ஒத்தவை என்று மூன்று வகையினவாம்.

சான்று : உண்டான் சென்றது செய்யாது

### 6.3.1 உயர்திணை வினை

*"அவைதாம்*
*அம் ஆம் எம் ஏம் என்னும் கிளவியும்*
*உம் ஒடு வருஉம் க,ட,த,ற என்னும்*
*அந்நாற் கிளவியொடு ஆஎண் கிளவியும்*
*பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே"* 202

5. உயர் திணைப் பன்மைக்குரிய வினை ஈறுகள் எவை?

அம், ஆம், எம், ஏம் என்னும் நான்கு சொற்களை ஈற்றிலே கொண்டு, முடிவனவும் இந்த கும்,டும்,தும்,றும் என்னும் நான்கு சொற்களை முடிவிலே கொண்டிருப்பனவும், ஆகிய எட்டும் உயர்திணைப் பன்மைக்குரியன ஆகும்.

சான்று : உண்கின்றனம் உண்கின்றாம் உண்கின்றெனம்

உண்கின்றேம் உண்கும் உண்டும்

வருதும் சேறும்

கு,டு,து,று இந்த நான்கெழுத்தை ஈற்றிலே கொண்டு முடியும் சொல்லும் என், ஏன், அல் ஈறுகள் கொண்டு வரும் சொல்லும் ஆக, இந்த ஏழு சொற்களும் தன்மை ஒருமை உணர்த்தும் சொற்களாகும் என்கிறது இந்நூற்பா.

*"க,ட,த,ற என்னும்*
*இந்நான்கு ஊர்ந்த குற்றியலுகரமொடு*
*என்,ஏன்,அல் என வரூஉம் ஏழும்*
*தன்வினை உணர்த்தும் தன்மைச் சொல்லே"* 203

சான்று : உண்கு உண்டு வருது சேறு

உண்டென் உண்டேன் உண்பல் எனவும் வரும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

6. உயர்திணை தன்மை ஒருமைக்கான வினை ஈறுகளை வரிசைப்படுத்துக

### 6.3.2 செய்கு எனும் வாய்பாட்டு வினை

*"அவற்றுள்*
*செய்கு என் கிளவி வினையொடு முடியினும்*
*அவ்இயல் திரியாது என்மனார் புலவர்"* 204

தன்மை, ஒருமை வினைகள் ஏழினுள்ளும் 'செய்க' என்னும் சொல் வினையோடு முடிந்தாலும் முற்றுச் சொல்லாக நிற்றலால் தன் இயல்பு திரியாது என்பர் புலவர்.

சான்று : காண்டு வந்தேன்

### 6.3.3 படர்க்கை ஒருமை வினைமுற்று

அன், ஆன், அள், ஆள் எனும் ஈறுகொண்டு முடியும் நான்கு சொல்லும் உயர்திணையில் ஒருமை சுட்டும் படர்க்கைச் சொல்லாம் இந்த நான்கு ஈற்றுச் சொல்லும் மூன்று காலத்துக்கும் உரியனவாம் என்கிறது இந்நூற்பா

*"அன் ஆன் அள் ஆள் என்னும் நான்கும்*
*ஒருவர் மருங்கில் படர்க்கைச் சொல்லே"* 205

*சான்று :*

உண்டனன், உண்டான், உண்பான் எனவும் உண்டனள், உண்டாள், உண்பாள் எனவும் வரும்.

7. பன்மை உணர்த்தும் படர்க்கைச் சொல் ஈறுகளை வரிசைப்படுத்துக

### 6.3.4 படர்க்கைப் பன்மை வினைமுற்று

*"அர், ஆர், ப என வரூஉம் மூன்றும்*
*பல்லோர் மருங்கில் படர்க்கைச் சொல்லே"* 206

தன் மதிப்பீட்டு வினாக்கள்

அர், ஆர், ப என்பதை முடிவாகக் கொண்டு முடியும் சொல் மூன்றும் பன்மை உணர்த்தும் படர்க்கைச் சொல்லாம்.

சான்று : உண்டனர் உண்பார் உண்ப

**6.3.4.1 செய்மார் எனும் வாய்பாடு**

*“மார் ஐக் கிளவியும் பல்லோர் படர்க்கை*
*காலக் கிளவியொடு முடியும் என்ப”* 207

‘மார்’ என்னும் சொல் ஈற்றுச் சொல்லாக வினை கொண்டு முடியுமாயின் பலரை உணர்த்தும் படர்க்கைச் சொல்லாகும். மார் ஈறு, பகர ஈறு போலவே எதிர்காலம் சுட்டி முடியும் என்பர்.

8. கொண்மார் வந்தார் என்பது எக்காலம் சுட்டும்?

*சான்று : கொண்மார் வந்தார்*

**6.3.5 உயர்திணைக்கு உரிய வினைமுற்று**

பன்மை ஒருமை என்று பால் உணர்த்த வந்த இருபத்து மூன்று வினை ஈற்றுச் சொற்களும் உயர்திணைக்கு உரியதாகும் என்கிறது இந்நூற்பா.

*“பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த*
*அந்நால் ஐந்தும் மூன்று தலை இட்ட*
*முன்னுறக் கிளந்த உயர்திணை அவ்வே* 208

**6.3.5.1 தன்மைப் பன்மைக்கு வேறுபாடு**

*அவற்றுள் பன்மை உரைக்கும் தன்மைக் கிளவி*
*எண்ணியல் மருங்கின் திரிபவை உளவே”* 209

இருபத்து மூன்று வினை ஈற்றுச் சொற்களுள், பன்மைப் பொருள் சுட்டும் தன்மை உயர்திணைச் சொல், எண்ணிப் பார்க்கும் நிலையில் திரிந்து அஃறிணைப் பொருள் குறிக்க வருதற்கும் உரியதாகும்.

9. தன்மைப் பன்மைச் சொல்லுக்குச் சான்று தருக.

சான்று : யானும் என் எஃகமும்

**6.3.6 யார் என்னும் கிளவி**

*“யாஅர் என்னும் வினாவின் கிளவி*
*அத்திணை மருங்கில் முப்பாற்கும் உரித்தே”* 210

யார்? என்னும் வினாப்பொருள் உணர்த்தி வரும் சொல் உயர்திணை ஆண்பால், பெண்பால், பலர்பால் என்னும் மூன்றிற்கும் உரியது.

10. யார்? என்னும் வினாப் பொருள் எப்பால்களுக்கு உரியது?

**6.8.7 ஈறு திரியும் வினைமுற்று**

*“பால் அறிமரபின் அம் மூஈற்றும்*
*‘ஆ’ ‘ஓ’ ஆகும் செய்யுள் உள்ளே”*

ஆண்பால், பெண்பால், பலர்பால் என்று தெளிவாக விளங்கும் தன்மை உடைய ஆன், ஆள், ஆர் என்னும் ஈற்றுச் சொல் மூன்றும் பாடலில் வரும்போது 'ஆ' 'ஓ' என்று ஆகும்.

சான்று : வினவி நிற்றந் தோளே
நல்லை மன்னென நகூப் பெயர்த் தோனே
பாசிலை வாடா வள்ளியம் காடிறந்தோரே

*"ஆய் என் கிளவியும் அவற்றொடு கொள்ளும்"* 212

முன்னிலையில் வரும் 'ஆய்' என்னும் ஈற்றுச் சொல் செய்யுள் வடிவில் இடம் பெறும்போது 'ஆ' ஓ ஆகத் திரியும்.

சான்று : வந்தோம் மன்ற தண்கடற் சேர்ப்ப

தன் மதிப்பீட்டு வினாக்கள்

11. ஈறு திரியும் வினைமுற்று எவை?

### 6.3.8 குறிப்பு வினைமுற்று

ஆறாம் வேற்றுமை சுட்டும் உடைமைப் பொருளும் ஏழாம் வேற்றுமை குறிக்கும் நிலப்பொருளும் ஒப்பிட்டுச் சொல்லுமிடத்தும், பண்பு பற்றி வருமிடத்தும், அப்பொருள் பற்றி வரும் வினைக்குறிப்பு காலம் காட்டி நிற்கும்.

*"அதுச் சொல் வேற்றுமை உடைமையானும்*
*கண் என் வேற்றுமை நிலத்தினானும்*
*ஒப்பினானும் பண்பினானும் என்று*
*அப்பால் காலம் குறிப்பொடு தோன்றும்"* 213

12. குறிப்பு வினைமுற்று என்றால் என்ன?

சான்று :

கழலினன் - கழலை உடையவன்

இல்லத்தான் - இல்லத்தில் உள்ளவன்

புலிபோல் வான்- புலியைப் போன்றவன்

இவை மட்டுமின்றி அன்மை, இன்மை, உண்மை, வன்மை என்னும் இவையும், இவை போன்ற மற்றவையும், குறிப்புப் பொருளுணர்த்தும் எல்லாச் சொல்லும், குறிப்பால் காலம் உணர்த்துவனவாம்.

சான்று : அல்லன், அல்லள், அல்லர்
இலன், இலள், இலர்
உளன், உளள், உளர்
வலியன், வலியள், வலியர் என்று வரும்

### 6.3.9 தெரிநிலை வினைமுற்று

*"பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த*
*அன்ன மரபில் குறிப்பொடு வருஉம்*

தன் மதிப்பீட்டு வினாக்கள்

13. தெரிநிலை வினைமுற்று என்றால் என்ன?

14. அ, ஆ, வ என்னும் இறுதி எதற்குரிய வினைமுற்றாம்?

*காலக் கிளவி உயர்திணை மருங்கின்*
*மேலைக் கிளவியொடு வேறுபாடு இலவே"* 215

பலர்பால், ஒன்றன்பால் என்று பால் வேறுபாட்டை விளக்கும் வினைச்சொல் போல வரும் வினைச்சொல் உயர்திணைத் தெரிநிலை வினையுடன் ஒக்கும்.

சான்று :

கரியம், கரியாம், கரியெம், கரியேம், கரியான் எனவும் கரியாள், கரியான், கரியர், கரியார் எனவும் வரும். ஈறு இடமும், பாலும் விளக்கி நின்றது.

### 6.4 அஃறிணை வினை (பன்மை வினைமுற்று)

அ, ஆ என்னும் உயிர் எழுத்தையும், வ என்னும் உயிர்மெய் எழுத்தையும் ஈற்றிலே கொண்டு முடியும் சொற்கள், அஃறிணையில் பன்மை சுட்டும் படர்க்கை வினைமுற்றாம் என்கிறது பின்வரும் நூற்பா

*"ஆ, ஆ, வ என வருஉம் இறுதி*
*அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை"* 216

சான்று :

உண்டன தின்னா
உண்ட உண்குவ
உண்ணா திண்குவ

### 6.4.1 பால் அறிவந்த வினைமுற்று

*"பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த*
*அம் மூவிரண்டும் அஃறிணை அவ்வே"* 218

பலவின்பால், ஒன்றன்பால் என்று அஃறிணையில் பிரித்தறிய உள்ள சொற்கள் அ,ஆ,வ,து,று,டு என்னும் எழுத்துக்களை ஈற்றிலே உடைய ஆறு சொற்கள் மட்டும் ஆகும்.

### 6.4.2 ஒருமை வினைமுற்று

அஃறிணையில் ஒருமை சுட்டும் படர்க்கை வினைமுற்று து,று,டு என்னும் மூன்று சொற்களை ஈற்றிலே கொண்டு முடியும் குற்றியலுகரம் ஆகும்.

*"ஒன்றன் படர்க்கை தறட ஊர்ந்த*
*குன்றிய லுகரத்து இறுதி யாகும்"* 217

சான்று : வந்தது வந்தன்று கட்டு

### 6.4.3 எவன் என்னும் குறிப்பு வினை

அஃறிணையில் இரண்டு பாலிலும் ஒரு சேர ஒத்து வரும் சொல் 'எவன்' என்னும் வினாப் பொருள் தரும் சொல் என்பர் புலவர் எனத் தொல்காப்பியர் பின்வரும் நூற்பா வழி விளக்குகிறார்.

*"அத்திணை மருங்கில் இருபால் கிளவிக்கும்*
*ஒக்கும் என்ப 'எவன்' என் வினாவே"* 219

சான்று : அஃதெவன்? அவையெவன்?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

15. அஃறிணை இருபாலுக்கும் உரிய வினாச்சொல் எது?

### 6.4.4 குறிப்பு வினைமுற்று

*"இன்று இல உடைய என்னும் கிளவியும்*
*அன்று உடைத்து அல்ல என்னும் கிளவியும்*
*பண்புகொள் கிளவியும் உள என் கிளவியும்*
*பண்பின் ஆகிய சினைமுதற் கிளவியும்*
*ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ*
*அப்பால் பத்தும் குறிப்பொடு கொள்ளும்"* 220

இன்று, இல, உடைய என்னும் சொற்களும் அன்று, உடைத்து, அல்ல என்னும் சொற்களும், கரிய செய்ய என்னும் பண்புநிலை உணர்த்தும் சொல்லும் உள என்னும் சொல்லும், 'நெடுஞ்செவிய' என வரும் 'பண்பின் ஆன சினை முதல் கிளவியும் ஆகிய இவை பத்தும் குறிப்பு வினைமுற்றுச் சொற்களாம்.

இன்று, இல, உடைய, அன்று உடைத்து, அல்ல, உள இவை தம்மை உணர்த்து நிற்பன. மற்றவை பொருளுணர்த்துவன.

#### 6.4.4.1 குறிப்பு வினைமுற்றின் ஈறு

பன்மை, ஒருமை என்று பால் வேறுபாடு விளங்கிக் கொள்ள உதவும் குறிப்புப் பொருளுணர்த்தி வரும் வினைச்சொல் முன்னே சொன்னது போல மாறுபாடின்றி அஃறிணை வினையோடொக்கும் என்பதைப் பின்வரும் நூற்பா மூலம் விளக்குகிறார் தொல்காப்பியர்

*"பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த*
*அன்ன மரபின் குறிப்பொடு வரூஉம்*
*காலக் கிளவி அஃறிணை மருங்கின்*
*மேலைக் கிளவியொடு வேறுபாடு இலவே"* 221

### 6.5 விரவு வினை (இருதிணைக்கும் உரிய பெயர் முறை தொகை)

உயர்திணை, அஃறிணை ஆகிய இரண்டையும் உணர்த்தும் வேறுபட்ட இயல்புடையனவாய் இரண்டு திணைக்கும் ஒத்தனவாய் வரும் வினை விரவு வினை ஆகும்.

*"முன்னிலை வியங்கோள் வினைஎஞ்சு கிளவி*
*இன்மை செப்பல் 'வேறு' என் கிளவி*

தன் மதிப்பீட்டு வினாக்கள்

16. விரவு வினை என்றால் என்ன?

*செய்ம்மன செய்யும் செய்த என்னும்*
*அம்முறை நின்ற ஆஎண் கிளவியும்*
*திரிபு வேறுபடூஉம் செய்திய ஆகி*
*இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய''* 222

எதிர் நின்று பொருளுணர்த்தும் முன்னிலை ஏவல் பொருள் மற்றும் வாழ்த்துதல் பொருளில் வரும் வியங்கோள் வினை, வினையெச்சம், இன்மையைக் கூறும் 'இல்லை' என்னும் குறிப்புச் சொல், முரணைக் காட்டும் வேறுபாடு எனும் சொல், 'செய்ம்மன' என வரும். எதிர்காலம் உணர்த்தும் 'மன்' ஈற்றுச் சொல், 'செய்யும்' என்ற நிகழ்காலம் உணர்த்தும் சொல், செய்த என்னும் இறந்த காலம் உணர்த்தும் சொல் ஆகிய எட்டும் பொதுமையில் பிரிந்து உயர்திணை, அஃறிணை இரண்டையும் உணர்த்தும் வேறுபட்ட இயல்புடையவனாய், இரண்டு திணைக்கும் ஒத்தனவாய் விரவு வினையாய் வரும் என்கிறார் தொல்காப்பியர்.

### 6.5.1 முன்னிலை ஒருமை வினைமுற்று

விரவு வினைகளுள் இகர ஈறும், ஐகார ஈறும், ஆ என்னும் ஈறும் பெற்று வரும் மூன்று முன்னிலைச் சொல்லும் ஒருவனுக்கும், ஒருத்திக்கும், ஒன்றற்கும் மட்டுமே பொருந்தும் என்கிறார் தொல்காப்பியர்.

*"அவற்றுள்*
*முன்னிலைக் கிளவி*
*இ,ஐ,ஆய் என வரூஉம் மூன்றும்*
*ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்''* 223

சான்று : உண்டி உண்பை உண்பாய்

### 6.5.2 முன்னிலைப் பன்மை வினைமுற்று

இர், ஈர், மின் என்னும் ஈற்றை உடைய மூன்று சொல்லும். உயர்திணையில் பல்லோர் பற்றியும், அஃறிணையில் பலவற்றைப் பற்றியும் சொல்லவே உரியன என்கிறார் தொல்காப்பியர்.

*"இர், ஈர், மின் என வரூஉம் மூன்றும்*
*பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்*
*சொல் ஓர்அனைய என்மனார் புலவர்''* 224

சான்று : உண்டனர் உண்டீர் உண்மின்

### 6.5.3 மற்ற வினைகள்

*எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி*
*ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே''* 225

முன்னிலை தவிர்த்த மற்ற ஏழு வினைச்சொற்களும் இல்லை, வேறு செய்மண், செய்யும், செய்கு தம்தம் பொருளோடு பொருந்தி ஐம்பால்

மூவிடத்தும் தோன்றுவதற்கு உரியனவாம்.

சான்று : அவன் செல்க அது செல்க அவள் செல்க
அவை செல்க அவர் செல்க

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 6.5.3.1 வியங்கோள் வினை

*"அவற்றுள்*
*முன்னிலை தன்மை ஆஃர் இடத்தொடும்*
*மன்னதாகும் வியங்கோள் கிளவி" 226*

முன்னர்ச் சொன்ன எட்டு வினைகளும் வியங்கோள் வினை முன்னிலை தன்மை என்னும் இரண்டு இடங்களில் பெரும்பாலும் பொருந்தி நிற்பதில்லை. ஓரிரு இடங்களில் வருதலும் ஏற்றுக் கொள்ளப்படும்.

சான்று : நீ வாழ்க

17.வியங்கோள் வினைமுற்றுக்குச் சான்று தருக.

### 6.5.4 செய்யும் எனும் வினை

*"பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை*
*அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்*
*செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா" 227*

பலர்பால், தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்றிடத்தும் நிகழ்காலத்துக்குரிய செய்யும் என்னும் சொல்லோடு சேராது

### 6.5.5 வினையெச்ச வாய்பாடுகள்

வினையெச்சமாவது, முற்று விகுதி பெறாத குறைச்சொல்லாய் வினை கொண்டு முடிவதாகும். இதனை அறிய வினைஎச்ச வாய்பாடுகள் உதவும்

*"செய்து செய்யூச் செய்பு செய்தென*
*செய்யியர் செய்யிய செயின் செய செயற்கு என*
*அவ்வகை ஒன்பதும் வினை எஞ்சு கிளவி" 228*

என்கிறார் தொல்காப்பியர்

செய்து, செய்யூ, செய்பு, செய்தென, செய்யிர், செய்யிய, செயின், செய, செயற்கு என்றுள்ள ஒன்பதும் வினை எச்சமாகும். (அவ்வகை என்றது இறுதி நின்ற விகுதி உ, ஊ, பு, இயர், இய, இன், அ, கு என்பதைக் குறிக்கும்)

18. வினை யெச்சம் என்றால் என்ன?

சான்று : உண்டு சென்று ஓடி

இவை மட்டுமின்றி குறிப்பு வினையெச்சம் பின்வரும் வாய்பாடுகளில் வரும்.

*"பின், முன், கால், கடை, வழி இடத்து என்னும்*
*அன்ன மரபின் காலம் கண்ணிய*
*என்ன கிளவியும் அவற்று இயல்பினவே" 229*

தன் மதிப்பீட்டு வினாக்கள்

19. குறிப்பு வினையெச்ச வாய்பாடுகளை வரிசைப்படுத்துக.

பின், முன், கால், கடை, வழி, இடத்து என்னும் ஈற்றினைக் கொண்டு முடியும் சொற்களும் இவைபோலக் காலம் கருதி வரும் சொற்களும் வினையெச்சமாகும். (என்ன கிளவி என்றது இன்றி, அன்றி, அல்லது, அல்லாது என வரும் குறிப்பு வினை எச்சத்தை என்பர்.)

சான்று :

1. நீயிர் பொய் கூறிய பின் மெய் கூறுவார் யார்?

2. மருந்து தின்னாமுன் நோய் தீர்ந்தது

3. அகன்றவர் திறத்தினி நாடுங்கால்

4. தொடர் கூரத் தூவாமை வந்தக் கடை

*"அவற்றுள்*
*முதல்நிலை மூன்றும் வினை முதல் முடிபின"* 230

என்கிறார் தொல்காப்பியர்.

முன்னிரு சூத்திரங்களிலும் சொல்லப்பட்ட பதினைந்து வினை எச்சங்களில் முதலில் கூறிய செய்து, செய்ய, செய்பு என்றுள்ள மூன்றும் தம் வினை முதலுக்குரிய வினையேற்று முடியும்.

சான்று : உண்டு வந்தான் உண்ணு வந்தான் உண்குபு வந்தான்

இவை மட்டுமின்றி வினை முதல் முடிவினை ஏற்கும். அம்மூன்று சொல்லும் (செய்து, செய்ய, செய்பு) சினை வினையாய் அதனோடு முடியாது, முதல் வினையோடு முடியுமானாலும் பிறவினை கொண்டதாகாது, வினை முதல் வினையோடேயே முடியும் என்பதைப் பின்வரும் நூற்பா வழி விளக்குகிறார் தொல்காப்பியர்.

*"அம் முக்கிளவியும் சினைவினை தோன்றின்*
*சினையொடு முடியா முதலொடு முடியினும்*
*வினை ஓரனைய என்மனார் புலவர்"* 231

சான்று :

கந்தன் கால் ஒடிந்து வீழ்ந்தான். இங்கே கால் சினைவினை வீழ்ந்தது கந்தன் முதல் வினை. எனவே ஒடிந்தது எனும் சினை வினை வீழ்ந்தான் என்னும் முதல்வினை கொண்டு முடிந்தது.

(செய்து, செய்ய, செய்பு) என்ற மூன்றைத் தவிர மீதமுள்ள பன்னிரண்டு வினை எச்சங்களும், வினை முதல் வினையாலும், அவை கொள வந்து பொருந்தும் மற்ற வினையோடு இயல்பாய் முடியும் என்பதை பின்வரும் நூற்பா மூலம் விளக்குகிறார் தொல்காப்பியர்.

*"ஏனை எச்சம் வினை முதலானும்*
*ஆன் வந்து இயையும் வினை நிலையானும்*
*தாம் இயல் மருங்கில் முடியும் என்ப"* 232

சான்று :

1. மழை பெய்தெனப் புகழ் பெற்றது
2. மழை பெய்யிய வான் பழிச்சும்
3. மழை பெய்யிற் புகழ் பெறும்

### 6.5.5.1 வினை எஞ்சு கிளவி அடுக்கி முடிதல்

*"பல் முறையானும் வினை எஞ்சுகிளவி*
*சொல்முறை முடியாது அடுக்குந வரினும்*
*முன்னது முடிய முடியுமன் பொருளே"* 233

என்கிறார் தொல்காப்பியர்.

ஒரு வாய்பாட்டாலும் மற்றும் பல வாய்பாட்டாலும் வினையெச்சம், அச்சொல்லோடு, பொருள் முடியாது அடுக்கி வந்தாலும் முதலில் நின்ற எச்சம் முடியுமானால், வந்த மற்றவையும் பிற வாய்பாட்டால் பொருள் முடிந்தனவாகும்.

சான்று : உண்டு தின்று ஓடிப் பாடி வந்தான்

### 6.5.6 பெயரெச்ச வாய்பாடு

பெயரெச்சமாவது, பால்காட்டும், முற்று விகுதி பெறாத குறைச் சொல்லாய்ப் பெயர் கொண்டு முடியும் வினையாகும். செய்யும், செய்த எனும் சொற்கள் தொழில் முன்னிலை என்னும் எட்டினுள் இடம், பொருள், காலம், கருவி, வினை, வினைமுதற் கிளவி என்னும் ஆறுக்கும் உரியனவாகும் என்பதை பின்வரும் நூற்பா மூலம் விளக்குகிறார்.

*"நிலனும் பொருளும் காலமும் கருவியும்*
*வினை முதற்கிளவியும் வினையும் உளப்பட*
*அவ் அறு பொருட்கும் ஓரன்ன உரிமைய*
*செய்யும் செய்த என்னும் சொல்லே"* 234

சான்று :

உண்ட வீடு உண்ட கலம்
உண்ட சோறு உண்ட ஊண்
உண்ட காலை உண்ட சாத்தன்

இடம், பொருள், காலம், கருவி, வினை, வினைமுதற் கிளவி முதலான ஆறுடனும் பொருந்தி வரும் செய்யும் எனும் வாய்பாட்டு வினையெச்சம், விலக்கப்பட்ட பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை என்னும் மூன்று இடத்துக்கும் உரியதாகும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

20. பெயரெச்சம் என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 6.5.7 பெயரெச்சம், வினை எச்சம்

பெயரெச்சம், வினை எச்சம் இரண்டும் செய்தற் பொருளில்லாமல், செய்யா என்னும் எதிர்மறையில் வரினும் அது தானுணர்த்தும் பொருளில் மாறுபடாது என்கிறார் தொல்காப்பியர்.

*"பெயரெஞ்சு கிளவியும் வினை எஞ்சு கிளவியும்*
*எதிர்மறுத்து மொழியினும் பொருள் நிலைதிரியா"* 236

சான்று

உண்ணா ஊண்

உண்ணாது வந்தான் என வரும். உண்ணா, உண்ணாது இரண்டு 'உண்ணும்' 'உண்ட' என்னும் இரண்டிற்கும் எதிர்மறை

*"தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்*
*எச்சொல் ஆயினும் இடைநிலை வரையார்"* 237

என்கிறார் தொல்காப்பியர்

தம்தம் எச்சமாகிய வினையுடனும், பெயருடனும் சேரும், குறிப்பினை உடைய எச்சொல்லாயினும் அவை அவற்றிற்கு இடை நிற்பது விலக்கத்தக்கதல்ல.

சான்று :

உழுது சாத்தன் வந்தான். உழுது ஏரோடு வந்தான் எனவும் சொல்லுங் காட்டுள் யானை, கொன்ற காட்டுள் யானை எனவும் வரும் என்று கூறும் சேனா வரையர் "சிவணுக் குறிப்பின் வரையாரெனவே சிவணும் குறிப்பின் வரைப என்பதாம். சிவனாக் குறிப்பினவாவன ஒரு தலையா, எச்சத்தோடியைந்து நில்லாது நின்ற சொல்லோடு தாமே இயைந்த பொருட்படுவன" என்பார்.

### 6.5.7.1 ஈறு கெடும் செய்யும் என்னும் பெயரெச்சம்

21. செய்யும் என்னும் செயரெச்சம் குறித்து எழுதுக.

"அவற்றுள்
*செய்யும் என்னும் பெயர் எஞ்சு கிளவிக்கு*
*மெய்யொடும் கெடுமே ஈற்றுமிசை உகரம்*
*அவ் இடன்அறிதல் என்மனார் புலவர்"* 238

என்கிறார் தொல்காப்பியர்.

செய்யும் என்னும் பெயர் எச்ச முடிவில் நின்ற 'உ' கரம், தான் ஏற்றுவந்த மெய்யொடும் கெடும். இப்படிக் கெடுமிடங்கள் எவையென்று கற்றறிந்த புலவர்கள் உற்றுணர வேண்டும். கெடும் இடங்களைப் புலவர் உற்றுணர வேண்டும் என்றது, இந்தத் திரிபு எல்லா இடங்களுக்குமான பொதுவிதி அல்ல என்பதால் புலவர் கெடுமிடங்களை, உலக வழக்கிலும் செய்யுளிலும் கண்டு இடமறிந்து பொருள் கொள்ள வேண்டும்.

**6.5.7.2 செய்து எச்சம்**

*"செய்து என் எச்சத்து இறந்த காலம்*
*எய்து இடம் உடைத்தே வாராக் காலம்"* 239

என்கிறார் தொல்காப்பியர்.

'செய்து' என்னும் பெயரெச்ச விகுதியும் இறந்த காலம் காட்டியே நிற்கும் என்றாலும், இது எதிர்காலத்தை உணர்த்தி வரும் இடங்களும் உண்டு.

சான்று :

உழுது வருவாய். இது உழுதுவிட்டு வந்துள்ளாய் என இறந்த காலமும், உழுதுபின் வருவாய் என எதிர்காலமும் குறித்தது.

**6.5.7.3 முக்காலத்திற்கும் ஒத்ததை நிகழ்காலத்தில் கூறல்**

*"முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை*
*எம்முறைச் சொல்லும் நிகழும் காலத்து*
*மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்"* 240

என்கிறார் தொல்காப்பியர்.

இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று வரும் மூன்று காலங்களிலும் நின்று நிலைக்கத்தக்கதான உண்மை உடையதாகிய உள்ள எல்லாப் பொருளையும், நிகழ்காலக் குறிப்புணர்த்தும் செய்யும் என்னும் வாய்பாட்டு முறையாலேயே சொல்லுதல் வேண்டும்.

இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம் மூன்றும் குறிக்கும் சொல் பொதுச் சொல் எனப்பட்டது. இயற்கை உண்மைப் பொருள் என்றது. ஞாயிறு, திங்கள், கடல், மலை போன்றவையாகும்.

சான்று :

ஞாயிறு வலம் வரும் திங்கள் ஒளிரும்

கடல் ஒலிக்கும் மலை குலையாது என வரும்.

**6.5.8. கால மயக்கம்**

*"வாராக் காலத்தும் நிகழும் காலத்தும்*
*ஓராங்கு வரூஉம் வினைச் சொற்கிளவி*
*இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்*
*விரைந்த பொருள் என்மனார் புலவர்"* 241

என்கிறார் தொல்காப்பியர்

எதிர்காலம், நிகழ்காலம் என்னும் இரண்டுக்கும் பொருந்த வரும் வினைச்சொல்லை, இறந்தகாலப் பொருள் தோன்றச் சொல்லுதலை 'விரைவுப்' பொருள் என்று கூறுதல் புலவர் வழக்காம்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

22. செய்து எனும் எச்சம் எக்காலங்களை உணர்த்தும்?

23. கால மயக்கம் என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

சான்று :

உண்டியோ? என்ற வினாவுக்கு விடையாக உண்டேன் என்று கூறுவது எதிர்காலம் நிகழ்காலம் இரண்டும் உணர்த்திய விரைவுப் பொருள்.

### 6.5.8.1 சிறப்புப் பொருள் முதலில்

*"மிக்கதன் மருங்கில் வினைச்சொல் சுட்டி*
*அப்பண்பு குறித்த வினைமுதல் கிளவி*
*செய்வது இல்வழி நிகழும் காலத்து*
*மெய்பெறத் தோன்றும் பொருட்டு ஆகும்மே"* 242

என்கிறார் தொல்காப்பியர்.

மிகுதியானது அல்லது உயர்வானது இதைக் குறிக்க வரும் வினைச்சொல், அவ்வுயர் பொருளைச் சுட்டும் வினைமுதற் சொல்லை முதலில் கொண்டு வரும். அப்படி வினைமுதல் இல்லாதபோது நிகழ்காலத்து உண்மை உணர்த்தும் பொருள் உடையாதாகும்.

சான்று :

தவம் செய்யில் சொர்க்கம் புகும்

தாயைக் கொல்லின் நகரம் புகும்

இதில் மிக்கதாகிய தவம் வினைமுதற்கிளவி, முன்னதாகி உண்மைப் பொருளான சொர்க்கம் புகும் என நிகழ்காலம் உணர்த்தி நின்றது.

### 6.5.8.2 இது செயல் வேண்டும் என்னும் முற்று

ஒன்றைச் செய்யவேண்டும் என்று கூறும் பொருள் குறிக்க வரும் சொல், தன் பக்கம், பிறர் பக்கம் என்னும் இருபக்கமும் பொருளுணர்த்தி நிற்கும் தன்மையது என்பதை தொல்காப்பியர் பின்வரும் நூற்பா மூலம் விளக்குகிறார்.

*"இது செயல் வேண்டும் என்னும் கிளவி*
*இருவயின் நிலையும் பொருட்டு ஆகும்மே*
*தன் பாலானும் பிறன் பாலானும்"* 243

சான்று :

கற்றல் வேண்டும். இதில் கற்றல் கல்வி கற்பவனான தனக்கும் அவன் கற்பதால் அவனைச் சார்ந்தவர்க்கும் ஆயிற்று.

24.வற்புறுத்தல் பொருளில் வரும் வினாவிற்குச் சான்று தருக.

### 6.5.8.3 வற்புறுத்தல் பொருளில் வரும் வினா

*"வன்புற வரூஉம் வினா விடை வினைச்சொல்*
*எதிர்மறுத்து உணர்த்துவதற்கு உரிமையும் உடைத்தே"* 244

என்கிறார் தொல்காப்பியர்.

வற்புறுத்தி ஒரு பதிலைப் பெறக் கேட்கப்படும் கேள்விக்குக் கிடைக்கின்ற பதில் எதிர்மறைப் பொருளுக்கு உரியதாகும் தன்மை உடையதுமாகும்.

சான்று :

கோபத்தால் வைதவனிடத்தில், "என்னை ஏன் வைதாய்?" எனக் கேட்க, வைதவன் விடையாக வைதேனோ? என்று வைதவனே கேட்பது, எதிர்மறைப் பொருள் உடையதான வினா, வைதிலேன்' என்னும் பொருளைத் தந்தது.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 6.5.9 காலமயக்கத்திற்குச் சிறப்பு விதி

எதிர்காலத்தைக் குறிக்க வரும் வினைச்சொல், இயற்கை, தெளிவு இரண்டும் குறிக்கும் சொல். மழை, எதிர்காலம் குறித்தது. இறந்தகாலம் நிகழ்காலம் இரண்டிற்கும் ஒப்பத் தோன்றியது.

25. எதிர் காலத்தைக் குறிக்கவரும் வினைச்சொற்கள் எவை?

செய்யப்படு பொருளை - செய்து முடித்த பொருளைச் செய்தது போலும் தொழில் குறிப்புணர்த்திச் சொல்லுதல் உலக வழக்கில் உள்ள ஒன்றாகும் என்பதை இந்நூற்பா விளக்குகிறது.

*"செய்படு பொருளைச் செய்தது போலத்*
*தொழில்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே"* 246

சான்று :

கலம் கழுவிற்று, கலம் கழுவப்பட்டது என்னும் தொழில் படக் கிளத்தல், கலம் 'கழுவிற்று' என வழக்கில் வந்தது.

*"இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்*
*சிறப்பத் தோன்றும் மயங்கு மொழிக் கிளவி"* 247

என்கிறார் தொல்காப்பியர்.

இறந்தகாலம், எதிர்காலம் என்னும் இவ்விரு காலமும் மயங்க மொழிப்பொருள் விளங்கத் தோன்றலும் உண்டு.

சான்று :

பண்டு இவள் இப்பொழிலகத்து விளையாடும் இறந்த காலம், எதிர்காலம் எனும் இருகாலம் காட்டிற்று.

*"ஏனைக் காலமும் மயங்குதல் வரையார்"* 248

இறந்தகாலம், எதிர்காலம் அன்றி மற்றதான நிகழ்காலமும் மயங்கி வருதலை நீக்கார் புலவர் பெருமக்கள்.

சான்று : நாளை வரும்

## தொகுப்புரை

வினைச்சொல்லின் இயல்பு, வினை முற்று மற்றும் அதன் வகைகள், பெயரெச்ச, வினையெச்ச ஈறுகள், பெயரெச்ச மற்றும் வினையெச்ச

| | |
|---|---|
| தன் மதிப்பீட்டு வினாக்கள் | வாய்பாடுகள், காலமயக்கம் போன்ற பகுதிகள் விளக்கப்பட்டுள்ளன |

**தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு**

| | | | |
|---|---|---|---|
| 1,3 | - | 6.1 | ஐப் பார்க்க |
| 2 | - | 6.2 | " |
| 4 | - | 6.3 | " |
| 5,6 | - | 6.3.1 | " |
| 7 | - | 6.3.4 | " |
| 8 | - | 6.3.4.1 | " |
| 9 | - | 6.3.5.1 | " |
| 10 | - | 6.3.6 | " |
| 11 | - | 6.3.7 | " |
| 12 | - | 6.3.8 | " |
| 13 | - | 6.3.9 | " |
| 14 | - | 6.4 | " |
| 15 | - | 6.4.3 | " |
| 16 | - | 6.5 | " |
| 17 | - | 6.5.3.1 | " |
| 18, 19 | - | 6.5.5 | " |
| 20 | - | 6.5.6 | " |
| 21 | - | 6.5.7.1 | " |
| 22 | - | 6.5.7.2 | " |
| 23 | - | 6.5.8 | " |
| 24 | - | 6.5.8.3 | " |
| 25 | - | 6.5.9 | " |

**ஒரு பக்க வினாக்கள்**

1. வினைச்சொல் என்றால் என்ன? அதன் இயல்பினை விளக்குக
2. உயர்திணை வினை ஈறுகளை வரிசைப்படுத்துக.
3. குறிப்பு வினைமுற்றைச் சான்று தந்து விளக்குக.
4. வினையெச்ச வாய்பாடுகளை வரிசைப்படுத்துக
5. காலமயக்கத்தினை விளக்குக.

**கட்டுரை வினாக்கள்**

1. வினைமுற்று என்றால் என்ன? அதன் வகைகளை விளக்குக.
2. விரவு வினை ஈறுகளைக் கட்டுரைக்க
3. பெயரெச்ச வாய்பாடுகள் குறித்தெழுதுக

தன் மதிப்பீட்டு வினாக்கள்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

# அலகு - 7

## இடையியல்

## இடைச்சொற்களின் இலக்கணமும் பாகுபாடும்

### அறிமுகம்

இடைச் சொற்களின் இலக்கணமும் அதன் பாகுபாடும் என்னும் இப்பகுதியில், இடைச்சொல்லின் பொது இலக்கணம் மற்றும் அதன் சிறப்பிலக்கணம், இடைச் சொற்களின் வகைகள் குறித்து விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

பெயர்ச்சொல் மற்றும் வினைச்சொல்லை சார்ந்து வரும் இடைச்சொல் பற்றியும், மொழியில் இடம் பெறுவதால் பொருள் வேறுபடும் விதம் மற்றும் அவற்றின் பண்பினை அடிப்படையாகக் கொண்டு ஏழுவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளதையும், இடைச்சொல்லின் சிறப்பு இலக்கணத்தையும் விளக்குவதே இப்பகுதியின் நோக்கமாகும்.

### பாட அமைப்பு

7.1 இடைச்சொல் இயல்பு

7.2 இடைச்சொல் பாகுபாடு

7.3 இடைச்சொல் இடம்பெறும் இடமும், வேறுபாடும்

7.4 சிறப்பு இலக்கணம் - மன் எனும் இடைச்சொல்

7.5 'தில்' எனும் இடைச்சொல்

7.5.1 'தில்' - இன்னுமொரு விளக்கம்

7.6 'கொண்' எனும் இடைச்சொல்

7.7 'உம்' எனும் இடைச்சொல்

7.7.1 'உம்' மேலும் ஒரு முடிவு

7.7.2 முற்றும்மை சிறப்பு விதி

7.8 ஓகார, ஏகார இடைச்சொற்கள்

7.8.1 'ஏ', 'ஓ' - வுக்கு இன்னுமொரு விளக்கம்

7.8.2 'ஏ' - இடைச்சொல்லுக்கு இன்னுமொரு முடிவு

7.8.3 'ஏ' 'குரை' என்னும் சொற்கள்

7.9 'என' 'என்று' எனும் சொற்கள்

7.10 மற்று என்னும் இடைச்சொல்

7.11 'எற்று' 'மற்றையது' 'மன்ற' என்னும் இடைச்சொற்கள்

7.12 'தஞ்சம்' எனும் சொல்

7.13 'அந்தில்' என்னும் இடைச்சொல்

7.14 'கொல்' 'எல்' என்னும் இடைச் சொற்கள்

7.15 'ஆர்' என்னும் இடைச்சொல்

7.15.1 'ஆர்' - இதற்கு இன்னுமொரு விதி

7.16 அம்ம எனும் இடைச்சொல்

7.17 அசைநிலைச் சொற்கள்

7.17.1 பிரிவில்லாத அசைநிலைகள்

7.17.2 மா என்னும் இடைச்சொல்

7.17.3 முன்னிலை அசைச் சொற்கள்

7.17.4 தன்மை, படர்க்கை அசைச் சொற்கள்

7.17.5 உரைநடையில் அசைச்சொல்

7.18 குறிப்புச் சொற்கள்

7.18.1 'ஔ' எனும் சொல்

7.19 எண் உணர்த்தும் இடைச்சொல்

7.19.1 எண்ணுப் பொருளில் ஏகாரம்

7.19.2 எண்ணுப் பொருளில் எனா, என்றா

7.19.3 தொகை பெறும் எண் இடைச்சொல்

7.19.4 எண்ணுப் பொருளில் 'உம்'

7.20 புறனடை

தொகுப்புரை

தன் மதிப்பீட்டு வினாக்கள்

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் ஏழாவது இயலாக இடையியல் கூறப்பட்டுள்ளது. தனித்தியங்கும் ஆற்றலின்றி மிகுதியும் இடையில் வரும் இடைச்சொல் பற்றியும் அதன் வகைகள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன.

### 7.1 இடைச்சொல் இயல்பு

*"இடைஎனப்படுப பெயரொடும் வினையொடும்*
*நடைபெற்று இயலும் தமக்கு இயல்பு இலவே"* 249

இடைச்சொல் எனப்படுவது, பெயர்ச்சொல், வினைச்சொல் என்னும் இரண்டுடன் சேர்ந்து வருவதாகும். இடைச்சொற்கள் தாமே தனித்தியங்கும் தன்மை இல்லாதன. மொழிக்கு முன்னும், பின்னும் வரும் என்றாலும், மிகுதியும் இடையில் வருமாதலின் இடைச்சொல் எனப்பட்டது.

1.இடைச்சொல் என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

2.இடைச்சொல் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

சான்று :

'அது<u>கொல்</u> தோழி காமநோயே!

## 7.2 இடைச்சொல் பாகுபாடு

*"அவைதாம்*
*புணரியல் நிலைஇடைப் பொருள் நிலைக்கு உதவுநவும்*
*வினைசெயல் மருங்கில் காலமொடு வருநவும்*
*வேற்றுமைப் பொருள்வயின் உருபு ஆகுநவும்*
*அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்*
*இசைநிலைக் கிளவி ஆகி வருநவும்*
*தத்தம் குறிப்பில் பொருள் செய்குநவும்*
*ஒப்பில் வழியால் பொருள் செய்குநவும் என்று*
*அப்பண்பினவே நுவலும் காலை"* 250

இடைச்சொற்களின் பாகுபாடுகளாவன

1. இடைச்சொற்கள், இரண்டு சொற்கள் சேருமிடத்து அதன் பொருள் விளங்கிக் கொள்ள உதவும் சாரியையாக வருவன.
2. வினைச்சொல்லாய் முடியும் இடத்து காலம் காட்டி வரும்.
3. வேற்றுமைப் பொருள் விளங்க உருபாக நிற்கும்
4. பொருள் குறித்தலின்றி அசைநிலைச் சொல்லாகச் செய்யுளில் இடம்பெறும்
5. செய்யுளில் ஓசைநயம் கருதி ஒலிக்குறிப்பாய், இசை நிறையாய் நிற்கும்
6. இடைச்சொல் தம்தம் குறிப்பால் நின்று பொருள் தரும்
7. ஒப்புப்பொருள் தோன்றாத நிலையில் (ஒப்பில் வழி) தான் ஒப்புவமைப் பொருள் விளங்கச் செய்குவதுமான பண்பினை உடையது இடைச்சொல்லாகும்.

இத்தகைய பண்புகளை அடிப்படையாகக் கொண்டு இடைச்சொல்லை ஏழு வகையாகப் பிரிக்கலாம்.

## 7.3 இடைச்சொல் இடம்பெறும் இடமும், வேறுபாடும்

*"அவைதாம்*
*முன்னும் பின்னும் மொழி அடுத்து வருதலும்*
*தம் ஈறு திரிதலும் பிறிது அவண் நிலையலும்*
*அன்னவை எல்லாம் உரிய என்ப"* 251

இரண்டு சொற்களுக்கு இடையில் வருதலேயன்றி, தாம் சார்ந்து வரும் சொல்லுக்கு முன்னும் பின்னும் வருதலும் தம் ஈற்றுச் சொல் கெட்டு (திரிதல்) வருதலும் ஒரு இடைச் சொல் முன்னால் வேறோர் இடைச்சொல் (பிறிது)

தோன்றி நிற்றலும் (அவண் நிலையல்) ஆகிய தன்மைகள் எல்லாம் இடைச்சொற்களுக்கு உரியனவாகும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

சான்று :

1. அதுமன், கேண்மியா, கொன்னூர் - முன்னும், பின்னும் வந்தன
2. உடனுயிர் போகுகதில்லை - ஈறு திரிந்தது
3. 'வருகதில் அம்ம வெஞ்சேரி' - பிறிதவண் நின்றது

## 7.4 சிறப்பு இலக்கணம் - மன் எனும் இடைச்சொல்

*"கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவி என்று*
*அம்மூன்று என்ப மன்னைச் சொல்லே"* 252

மன் என்னும் இடைச்சொல் கழிவு, ஆக்கம், ஒழியிசை என்னும் மூன்று குறித்து வரும் தன்மையதாகும்.

சான்று :

1. "சிறிய கட் பெறினே எமக் கீயு மன்னே" - கழிந்ததைக் கூறியதால் கழிவு
2. 'பண்டு காடு மன் இன்று வயலாயிற்று' - காடு வயலாகத் திருத்தம் பெற்றதால் ஆக்கம் ஆனது.
3. 'கூரியதோர் வாள்மன்' - வாள் துணித்தது என்னும் ஒழிந்த பொருளைக் காட்ட ஒழியிசை ஆனது.

## 7.5 'தில்' எனும் இடைச்சொல்

*"விழைவே காலம் ஒழிஇசைக் கிளவிஎன்று*
*அம்மூன்று என்ப தில்லைச் சொல்லே"* 253

விழைவு (விருப்பம்), காலம், ஒழிந்த பொருள் குறித்தல் என்னும் மூன்று பொருள் உணர்த்த 'தில்' எனும் இடைச்சொல் வரும்.

சான்று :

1. 'சின்மொழி அரிவையைப் பெறுகதில் அம்ம யானே' - பெண்ணைப் பெறும் விருப்பம் உள்ளதால் விழைவு

2. 'பெற்றாங்கு அறிகதில் அம்ம இவ்வூரே' - பெற்ற காலம் பற்றியதால் காலம் குறித்தது.

3. 'வருகதில் அம்ம வெம்சேரி சேர' - சேரி சேர்ந்தபின் நிகழ்ந்த சொல்லாது விட்டதால் ஒழியிசை

### 7.5.1 'தில்' இதற்கு இன்னுமொரு விளக்கம்

*"விழைவின் தில்லை தன் இடத்து இயலும்"* 260

தன் மதிப்பீட்டு வினாக்கள்

3. தில் என்னும் இடைச்சொல் வரா இடங்கள் எவை?

விருப்பம் அதாவது விழைவுப் பொருள் சுட்டிவரும் 'தில்' என்னும் இந்த இடைச்சொல் தன்மைக்கு மட்டுமே வரும். முன்னிலை, படர்க்கை இடங்களில் வராது.

### 7.6 'கொன் என்னும் இடைச்சொல்

*"அச்சம், பயமிலி, காலம் பெருமை என்று*
*அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே"* 254

'கொன்' என்னும் இடைச்சொல் அச்சம் (பயம்) பயமிலி பயமற்ற தன்மை, காலம், பெருமை என்னும் நான்கு பொருளுடையதாகும்.

சான்று :

1. 'கொன் வாளி' - (அச்சம்)

2. 'கொன்னே கழிந்தன்றிளமை' - (பயமின்மை)

3. 'கொன்வரல் வாடை' - காலம்

4. 'கொன் ஊர் துஞ்சினும்' - பெருமை

### 7.7 'உம்' என்னும் இடைச்சொல்

*"எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை*
*முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம் என்று*
*அப்பால் எட்டே உம்மைச் சொல்லே"* 255

எஞ்சிய பொருளைக் குறிக்கும் 'எச்சம்' , தகுதி குறிக்கும் 'சிறப்பு' ஐயம் (சந்தேகம்) எதிர்ப்பொருள் (எதிர்மறை) முடிந்த பொருள் தரும் முற்று, எண்ணுப் பொருளதைக் குறிக்கும் எண், குறித்த பொருள் தரும் தெரிநிலை, ஆகிவரும் பொருள் தரும் ஆக்கம் என்னும் எட்டையும் சுட்ட 'உம்' என்னும் இடைச்சொல் வரும்.

சான்று :

1. சாத்தனும் வந்தான் என்பதில் சாத்தனொடு மாடனும் வந்துள்ளான் எனும் பொருள் குறித்ததால் அது 'இறந்தது தழீஇய எச்சம்'. காடனும் வருவான் எனப் பொருள் தரின் 'எதிரது தழீஇய எச்சம்'

2. 'குறவரும் மருளும் குன்றம்' - சிறப்பும்மை

3. 'வெல்லினும் வெல்லும்' - ஐயம்

4. 'களவு செய்யினும் பொய் சொல்லற்க' - இதில் களவும் செய்யாதே என்னும் எதிர்மறைப்பொருள் தர நின்றது.

5. 'எல்லாரும் வந்தார்கள்' - முற்று

6. 'இரவும், பகலும்' - எண்ணுதல் பொருள்

7. 'ஆணும் அன்று' 'பெண்ணும் அன்று' - தெரிநிலை

8. 'பாலும் ஆயிற்று' - பால் உணவானதன்றி மருந்தும் ஆனதைக் குறித்ததால் ஆக்கம்.

### 7.7.1 'உம்' மேலும் ஒரு முடிவு

*"எச்சம் உம்மையும் எதிர்மறை உம்மையும்*
*தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே"* 283

எச்சப்பொருள் குறிக்கும் உம்மையோடு, எச்சப்பொருள் சொல்லாகிய எதிர்மறை உம்மைத் தொடர்வந்து பொருந்துதல் இல்லை

சான்று :

சாத்தனும் வந்தான் கொற்றனும் வாரான் - பொருந்தா நின்றது.

*"எஞ்சு பொருட்கிளவி செஞ்சொல் ஆயின்*
*பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்"* 284

எச்ச உம்மை சேர்ந்து வரும் சொல், உம்மை விகுதி பெறாத தனிச் சொல்லாகுமானால், அவ்வும்மை பெறாத தனிச்சொல் உம்மைத் தொடருக்குப் பின்னே சொல்லாது முன்னே சொல்ல வேண்டும்.

சான்று : உணவு கொடுத்தனர், படிக்கவும் வைத்தனர்

### 7.7.2 முற்றும்மை சிறப்பு விதி

*"முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்*
*எச்சக் கிளவி உரித்தும் ஆகும்"* 285

முற்றும்மையை அடுத்து வரும் தொகைச் சொல்லின் பக்கம் எச்சச்சொல் இடம் பெறுதற்கு உரியது.

சான்று :

'பத்தும் கொடாதே' - முற்றும்மை. (குறைத்துக் கொடு என எச்ச உம்மைப் பொருள் தந்தது.)

### 7.8 ஓகார, ஏகார இடைச் சொற்கள்

*"பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை*
*தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ*
*இருமூன்று என்ப ஓகாரம்மே"* 256

ஒன்றைப் பிரித்தறிய உதவும் பிரிநிலை, கேள்விப்பொருள், எதிர்மறை, ஒழியிசை, தெரிநிலை, உயர்வு சுட்டும் சிறப்பு என்னும் ஆறுபொருள் குறித்து வரும் இடைச்சொல் 'ஓ' ஆகும்.

சான்று :

1. 'இவனோ கொண்டான்' - பிரிநிலை, பலரடங்கிய இடத்து ஒருவனைப் பிரித்தறிய உதவும்.
2. மகனோ? மகளோ? - வினா
3. யானோ கள்வன் - கள்வனில்லை எனும் எதிர்மறைப்பொருள்
4. படிக்கவோ வந்தாய்? - படிக்க அல்ல விளையாட வந்தாய் என்னும்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

4. தேற்றம் என்றால் என்ன?

5. 'ஓகார' இடைச்சொல் எத்தனை பொருளில் வரும்?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

ஒழிந்த பொருளைத் தந்ததால் ஒழியிசை

5. ஆணோ அன்று, பெண்ணோ அன்று - தெரிநிலை

6. ஓஒபெரியன் - சிறப்பு

*“தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே*
*ஈற்றசை இவ் ஐந்து ஏகாரம்மே”* 257

தேற்றம், வினா, பிரிநிலை, எண், ஈற்றசை என ஐந்து இடங்களில் வருதற்குரியது ‘ஏ’ என்னும் இடைச்சொல்.

சான்று :

1. ‘உண்டே கடவுள்” - கடவுள் உண்டென்று உறுதியாக உணர்த்துவதால் தேற்றம்

2. நீயே கொண்டாய்? - நீயா கொண்டாய்? என்னும் வினாப்பொருள் தந்ததால் வினா

3. ‘அவருள் இவரே நல்லவர்’ - பிரிநிலை

4. ‘நிலமே, நீரே, தீயே, வளியே வானே’ - எண்

5. ‘ஏத்தித் தொழுவோம் யாமே’ - ஈற்றசை

### 7.8.1 ‘ஏ’ ‘ஓ’ வுக்கு இன்னுமொரு விளக்கம்

*“தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்*
*அளபின் எடுத்த இசைய என்ப”* 201

தெளிவுப் பொருளில் வரும் ‘ஏ’காரமும், உயர்வு சிறப்பு சுட்டவரும் ‘ஓ’ காரமும் மாத்திரை நீண்டு ஒலிக்கும் இசை உடையன என்று சொல்லுவர்.

சான்று :

1. ‘வாடா வள்ளியங் காடிறந்தோரேஎ - ஏகாரம் (தெளிவு)

2. ஓஒபெரியன் - ஓகாரம் (சிறப்பு)

### 7.8.2 ஏ இடைச்சொல்லுக்கு இன்னுமொரு முடிவு

*“ஈற்று நின்று இசைக்கும் ஏ என் இறுதி*
*கூற்று வயின் ஓர் அளவு ஆகலும் உரித்தே”* 286

செய்யுளின் முடிவில் நின்றொலிக்கும் ‘ஏ’ என்னும் ஈற்றசை ஒரு மாத்திரை அளவாக ஒலித்தலுக்கு உரியது.

6. ‘ஏ’ ‘குரை’ என்னும் இடைச்சொற்கள் எந்தெந்த பொருளில் வரும்?

சான்று :

“கடல்போற் தோன்றல் காடிறந் தோரே”

### 7.8.3 ‘ஏ’ ‘குரை’ என்னும் சொற்கள்

*“ஏ’யும் ‘குரையும் இசைநிறை அசைநிலை*

*ஆ இரண்டு ஆகும் இயற்கைய என்ப"* 272

'ஏ', 'குரை' என்னும் இரண்டு இடைச்சொற்களும் இசைநிலை, அசைநிலை ஆகிய இரண்டு பொருளிலும் வரும்.

சான்று :

1. ஏகாரம் - 'ஏஎ இஃது ஒத்ததென்' - இசைநிறை
   - 'ஏஎயென் சொல்லுக' - அசைநிலை
2. ஓகாரம் - 'அளிதோதானே அது பெறலருங் குரைத்து' - இசைநிறை
   - நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத் துன்பங்கள் சென்று படும் - அசைநிலை

### 7.9 'என' 'என்று' என்னும் இடைச்சொற்கள்

*"வினையே குறிப்பே இசையே பண்பே*
*எண்ணே பெயரொடு அவ்ஆறு கிளவியும்*
*கண்ணிய நிலைத்தே என என் கிளவி"* 258

செயல், குறிப்பு, இசை, பண்பு, எண், பெயர் என்னும் ஆறும் கருதி வரும் தன்மையது 'என' என்னும் இடைச்சொல்

சான்று :

1. மகன் பிறந்தானென்று தந்தை மகிழ்ந்தான் - (வினை) செயல்
2. பொன்னெனப் பொலிந்தது - குறிப்பு
3. பொம்மென வண்டலம்பும் புரிகுழல் - இசை
4. வெள்ளென வெளுத்தது -பண்பு
5. நிலமென, நீரெனக் காற்றென - எண்
6. அழுக்காறென்றொரு பாவி - பெயர்

*"'என்று' என் கிளவியும் அதன் ஓரற்றே"* 259

என்று என்னும் இடைச்சொல்லும், முன் சூத்திரத்தில் சுட்டிய அதே ஆறு பொருள்களில் வரும்.

சான்று :

1. நரைவருமென்று - வினை
2. விண்ணென்று விசைத்தது - குறிப்பு
3. ஒல்லென்று ஒலிக்கும் ஒலி புனலூரன் - இசை
4. பச்சென்று பசத்தது - பண்பு
5. நிலனன்று, நீரன்று - எண்
6. பாரி என்றொருவன் உளன் - பெயர்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

7. ஒரே மாதிரி பொருள்களில் வரும் இடைச்சொற்கள் யாவை?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 7.10 மற்று என்னும் இடைச்சொல்

"*மற்று என்கிளவி வினைமாற்று அசைநிலை*
*அப்பால் இரண்டு என மொழிமனார் புலவர்*" 262

மற்று என்னும் இடைச்சொல், வினைமாற்று, அசைநிலை என்னும் இரண்டு பொருளில் வருமென்று கூறுவர் புலவர்.

சான்று :

1. மற்றறிவாம் நல்வினையாம் இளையம் - வினைமாற்று
2. அது மற்றவலம் கொள்ளாது - அசைநிலை

### 7.11 'எற்று', 'மற்றையது' 'மன்ற' என்னும் இடைச்சொல்

"*எற்று என்கிளவி இறந்த பொருட்டே*" 263

எற்று என்னும் இடைச்சொல், இறந்த, கழிந்து போன பொருளைக் குறிக்கவே வரும்.

சான்று :

எற்றென் உடம்பின் எழில் நலம் குறைந்தது - இறந்த பொருள்

"*மற்றையது என்னும் கிளவிதானே*
*சுட்டு நிலை ஒழிய இனம் குறித்தன்றே*" 264

மற்றையது என்னும் சொல்லின் முதல்நிலையாய் வரும் 'மற்றை' என்னும் ஐகார ஈற்று இடைச்சொல் சொல்லிய பொருளை விட்டு, அதனோடு தொடர்புடைய வேறு ஒன்றைக் குறித்து நிற்கும்.

சான்று :

உடுத்த ஆடை தந்தவனிடம், 'மற்றையது கொண்டு வா' எனில் வேறு ஆடை தரச்சொன்னதைக் குறித்தது.

'*மன்ற என் கிளவி தேற்றம் செய்யும்*' 265

'மன்ற' என்னும் இடைச்சொல் தெளிவுப் பொருளைக் குறிக்கும்.

சான்று :

"இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்" தெளிவு

'தஞ்சம்' என்னும் இடைச்சொல் எளிமைப் பொருள் குறிக்கும்.

சான்று :

"முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்" - எளிமை

### 7.13 அந்தில் என்னும் இடைச்சொல்

"*அந்தில் ஆங்கு அசைநிலைக் கிளவி என்று*

*ஆயிரண்டாகும் இயற்கைத்து என்ப"* 267

அந்தில் என்னும் இடைச்சொல், 'ஆங்கு' என்னும் இடப்பொருள் உணர்த்துதல், அசைநிலையாய் நிற்றல் என்னும் இரு தன்மைகளையும் இயல்பாகப் பெற்றது.

சான்று :

1. 'வருமே சேயிழை அந்தில் கொழுநர் காணி' - இடம்
2. 'அந்திற் கச்சினன் கழலினன் - அசை

### 7.14 'கொல்' 'எல்' என்னும் இடைச்சொற்கள்

*"கொல்லே ஐயம்"* 268

'கொல்' என்னும் இடைச்சொல் ஐயப்பொருளைக் குறிக்கும்.

சான்று : 'மரம் கொல்? மனிதர் கொல்? - ஐயம்

*"எல்லே இலக்கம்"* 269

'எல்' என்னும் இடைச்சொல் இலங்குதல் அல்லது விளங்குதல் என்னும் பொருளில் வரும்.

சான்று :

'எல்விளை இளங்கிளியே' - விளக்கம்

### 7.15 'ஆர்' என்னும் இடைச்சொல்

*"இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி*
*பலர்க்கு உரி எழுத்தின் வினையொடு முடிமே"* 270

இயற்பெயர் முன்பாக வரும் 'ஆர்' என்னும் இடைச்சொல் உயர்திணைப் பலர்பால் முடிபுடையதாகும்.

சான்று : சேந்தனார் வந்தார்

### 7.15.1 'ஆர்' இதற்கு இன்னுமொரு விதி

*"அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்"* 271

'ஆர்' என்னும் இடைச்சொல் அசைநிலையாகவும் வரும்.

சான்று : எல்லா உயிரொடும் சொல்லுமார் முதலே - அசைநிலை

### 7.16 அம்ம என்னும் இடைச்சொல்

*'அம்ம கேட்பிக்கும்'* 276

'அம்ம' என்னும் இடைச்சொல் 'கேள்' என்று கேட்கச் சொல்லும் பொருளுடையது.

சான்று : அம்ம வாழி தோழி! - கேள்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

8. கொல் எனும் இடைச்சொல் எந்தப் பொருளைக் குறிக்கும்?

9. அம்ம என்னும் இடைச்சொல் எந்தப் பொருளில் இடம் பெறும்?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 7.17 அசைநிலைச் சொற்கள்

*"'யா', 'கா'*
*'பிற' 'பிறக்கு' 'அரோ' 'போ' மாது என வரூஉம்*
*ஆ ஏழ் சொல்லும் அசைநிலைக் கிளவி"* 279

யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது என்றுள்ள இடைச்சொற்கள் ஏழும் அசைநிலை ஆகும்.

சான்று :

1. யா பன்னிரு மாணவருளர்
2. அகத்தியனார்க் காண்டிகா
3. தான் பிறவரிசை அறிதலின்
4. அது பிறக்கு
5. இருங்குயில் ஆலுமரோ
6. பிரியன் வாழா தென்போ தெய்ய
7. விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் நெஞ்சே

10.பிரிவில்லாத அசைநிலைகள் யாவை?

### 7.17.1 பிரிவில்லாத அசைநிலைகள்

*'ஆக' 'ஆகல்' 'என்பது' என்னும்*
*ஆவயின் மூன்றும் பிரிவுஇல் அசைநிலை"* 280

'ஆக' 'ஆகல்' 'என்பது' என்னும் மூன்று இசைச்சொற்களும் பிரிவில்லாத அசைநிலைச் சொற்கள். எனவே இவை தனித்து நின்று அசைநிலையாகா. இவை அசைநிலையாம் போது இரட்டித்து நிற்கும்.

### 7.17.2 மா என்னும் இடைச்சொல்

*'மா' என்கிளவி வியங்கோள் அசைச்சொல்"* 273

'மா' என்னும் இடைச்சொல் வியங்கோள் வினையைச் சார்ந்து அசைநிலைப் பொருள் குறித்து நிற்கும்.

சான்று : புற்கை உண்கமா கொற்கையோனே

### 7.17.3 முன்னிலை அசைச்சொற்கள்

11. முன்னிலை அசைச் சொற்களை வரிசைப்படுத்துக.

*'மியா' 'இக' 'மோ' 'மதி' 'இகும்' 'சின்' என்னும்*
*ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்* 274

மியா, இக, மோ, மதி, இகும், சின் என்னும் ஆறும் முன்னிலை அசைச் சொற்களாம்.

சான்று :

1. கேண்மியா

2. கண்பனியான்றிக

3. காமம் செப்பாது கண்டது மொழிமோ

4. உரைமதி வாழி

5. மெல்லப் புலம்ப கண்டிகும்

6. காப்பும் பூண்டு சின் கடையும் போகலை

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 7.14.4 தன்மை, படர்க்கை அசைச்சொற்கள்

*"அவற்றுள்*

*இகுமும் சின்னும் ஏனை இடத்தொடும்*

*தகுநிலை உடைய என்மனார் புலவர்"* 275

மியா, இக, மோ, மதி, இகும், சின் என்று முன் சூத்திரத்தில் சொல்லப்பட்ட ஆறில், 'இகும்' 'சின்' என்னும் இவ்விரு இடைச்சொற்களும் தன்மை, படர்க்கை என்னும் இரு இடங்களுக்கும் உரியது என்பது புலவர்கள் கூற்று.

சான்று :

தன்மை - கண்டு இகுமல்லோ வென்றிசின் யானே

படர்க்கை - புகழ்ந்திகும் அல்லரோ? யார் அஃது அறிந்திசினோரே

### 7.17.5 உரைநடையில் அசைச்சொல்

*"ஆங்க உரை அசை"* 277

'ஆங்க' என்னும் இடைச்சொல் உரைநடையில் அசை நிலையாக வரும்.

சான்று : 'ஆங்கக் குயிலும் மயிலும்'

*"ஒப்பில் போலியும் அப்பொருட்டு ஆகும்"* 278

ஒப்புவமை கூறிச் சொல்லும் பொருளுணர்த்த வரும் போலிச் சொல்லும் ஆங்க என்னும் இடைச்சொல் போலவே உரைநடையில் வரும்.

சான்று : மங்கலம் என்பதோர் ஊர் உண்டு போலும்

12. உரை நடையில் இடம்பெறும் அசைநிலை எது?

### 7.18 குறிப்புச் சொற்கள்

*"நன்று ஈற்று ஏயும் அன்று ஈற்று ஏயும்*

*அந்து ஈற்று ஓவும் அன் ஈற்று ஓவும்*

*அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்"* 282

'நன்று ஈற்று ஏ - நன்றே' 'அன்று ஈற்று ஏ - அன்றே' 'அந்து ஈற்று ஓ - அந்தோ' 'அன் ஈற்று ஓ - அன்னோ' என்று வரும் சொற்களும், அவை போன்ற பிறவும், ஒருவர் சொல்லும் குறிப்பால் பொருள் தருவனவாம்.

13. குறிப்புச் சொற்களை எழுதுக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

சான்று : நன்றே - ஏற்புக் குறிப்பு

அன்றே - மறுப்புக் குறிப்பு

அந்தோ பரிதாபம் - இரங்கல் குறிப்பு

அன்னோ - வியப்புக் குறிப்பு

### 7.18.1 ஔ என்னும் சொல்

*"ஈர் அளபு இசைக்கும் இறுதியில் உயிரே*
*ஆ இயல் நிலையும் காலத்தானும்*
*அளபெடை நிலையும் காலத்தானும்*
*அளபெடை இன்றித் தான்வரும் காலையும்*
*உள என மொழிப - பொருள் வேறுபடுதல்*
*குறிப்பின் இசையான் நெறிபடத் தோன்றும்"* 281

இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கும் 'ஔ' மொழிக்கு முடிவில் வராது. பிரிவில் அசை போன்று, இரட்டித்து நிற்கையிலும், இரட்டாத நிலையிலும், அளபெடுத்து வரும் போதும், அளபெடையின்றி வரும் போதும், பொருள் வேறுபடும் என்று சொல்வர், இப்பொருள் வேறுபாடு அதைச் சொல்லுகிறவன் குறிப்பாலும் அதற்கேற்றவாறு புலப்படும் ஓசையால் விளங்கும்.

சான்று : 1. 'ஔஔ ஒருவன் தவம் செய்தவாறு'
2. 'ஔஔ இனிச்சாலும்'
3. 'ஔஉ ஒருவர் இரவலர்க்கு ஈந்தவாறு".

### 7.19 எண் என்னும் இடைச்சொல்

*"உம்மை எண்ணும் என என் எண்ணும்*
*தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே"* 287

நீரும், நிலமும் என உம் பெற்று வரும் எண்ணுப் பொருளும் நீரென, நிலனென என என்பது பெற்று வரும் எண்ணுப் பெயரும் முடிவில் தொகைநிலை பெற்று வர வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. தொகை பெறாமலும் வரும்.

சான்று :

1. 'நிலனென, 'நீர் எனத் தீ என, வளி என நான்கும்'

- தொகை பெற்று வந்தது

'உயிரென உடலென இன்றியமையா' - தொகை பெறாமல் வந்தது.

### 7.19.1 எண்ணுப் பொருளில் ஏகாரம்

*"எண் ஏகாரம் இடை இட்டுக் கொளினும்*

*எண்ணுக் குறித்து இயலும் என்மனார் புலவர்"* 288

எண் குறிக்கும் 'ஏ' கார இடைச்சொல் சொல்லோடு தொடர்ந்து வராமல் இடைவிட்டு வந்தாலும் எண்ணுப் பொருளையே தரும்.

சான்று : 'மலை நிலம் பூவே துலாக்கோல் என்றின்னா'

### 7.19.2 எண்ணுப் பொருளில் எனா என்றா

*"உம்மை தொக்க எனா என் கிளவியும்*
*ஆஈறு ஆகிய என்று என் கிளவியும்*
*ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன"* 289

உம்மை தொக்கி நிற்கும் 'எனா' என்னும் சொல்லும் 'ஆ' என்னும் சொல்லை ஈற்றிலே கொண்டுள்ள என்றா என்னும் சொல்லும் ஆகிய இவ்விடைச் சொல் இரண்டும் எண்ணுமிடத்தன.

சான்று : 1. நிலனெனா நீரெனா 2. நிலனென்றா நீரென்றா

### 7.19.3 தொகை பெறும் எண் இடைச்சொல்

*"அவற்றின் வருஉம் எண்ணின் இறுதியும்*
*பெயர்க்கு உரிமரபின் செவ்வெண் இறுதியும்*
*ஏயின் ஆகிய எண்ணின் இறுதியும்*
*யாவயின் வரினும் தொகை இன்று இயலா"* 290

முன் சூத்திரத்தில் சொல்லப்பட்ட 'எனா' 'என்றா' என்னும் இடைச்சொல்லின் ஈற்றிலே வரும். இடைச்சொல்லால் எண்ணப்படாது பெயரால் எண்ணப்படும். எண்ணின் முடிவு 'ஏ'காரம் பெற்று வரும் ஈறும் ஏதேனும் ஓரிடத்தில் வந்தாலும் தொகை இன்றி இயங்கமாட்டா. தனிப்பெயராய் எண்ணுப் பொருளில் வருவது செவ்வெண் எனப்படும்.

### 7.19.4 'உம்' எண்ணுப் பொருளில்

*"உம்மை எண்ணின் உருபு தொகல் வரையார்"* 291

உம்மை எண்ணுப் பொருளில் வரும்போது உருபு தொக்கவரினும் விலக்கத்தக்கதல்ல.

சான்று :

"இசையிலும் குறிப்பிலும் பண்பிலும் தோன்றி" -

உம்மை எண்ணில் உருபு தொக்கி நின்றது

### 7.20 'உந்து' ஆகும் 'உம்'

*" 'உம்' உந்து ஆகும் இடனுமார் உண்டே"* 292

வினை, செயல் காலமொடு வரும் 'உம்' உந்தாகத் திரியும்.

சான்று : நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து

தன் மதிப்பீட்டு வினாக்கள்

14. ஏகாரம் எண்ணுப் பெயரில் எவ்வாறு இடம் பெறும்?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 7.2.1 'எண்' - எனும் இடைச்சொல்

*"வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா*
*நினையல் வேண்டும் அவற்று அவற்று இயல்பே"* 293

வினைச்சொல்லுடன் வந்தாலும் எண் இடைச்சொற்கள் தன்னியல்பில் மாறுபடாது. அவ்வாறு அவற்றுடன் வருமிடங்களில் அவற்றின் இயல்பறிந்து பொருளறிய வேண்டும்.

சான்று : உண்டும் தின்றும், ஆடியும், பாடியும் வந்தான்.

### 7.21.1 பிரிந்து சென்று ஒன்றும் எண் இடைச்சொல்

*"என்றும் எனவும் ஒடுவும் தோன்றி*
*ஒன்று வழி உடைய எண்ணினுள் பிரிந்தே"* 294

என்று, என, ஓடு என்னும் மூன்று இடைச்சொல்லும் ஓரிடத்தில் தோன்றி, எண்ணினுள் பிரிந்து சென்று வேறு இடங்களில் சேர்ந்து வருதலும் உடையன.

சான்று : 1. வினைபகை என்று இரண்டின் எச்சம்
2. கண்ணிமை நொடி என
3. பொருள், கருவி, காலம், வினை, இடைனொடு ஐந்து

### 7.22 இடைச்சொற்கள் பொருளறியும் வகை

*"அவ் அச்சொற்கு அவை அவை பொருள் என*
*மெய்பெறக் கிளந்த இயல ஆயினும்*
*வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்*
*திரிந்து வேறுபடினும் தெளிந்தனர் கொளலே"* 295

இடைச்சொற்கள் வினைச் சொல்லோடும், பெயர்ச்சொல்லோடும் தோன்றி வேறு பொருள் உணர்த்துவனவாகவும் அசை நிலையாகவும், திரிந்து வருதலும் உடையன ஆதலால் தெளிந்த அறிவுடையோர், இதனை ஆய்ந்தறிந்து கொள்ள வேண்டும். வினையோடும் பெயரோடும் நினையத் தோன்றுதல் செய்யுளில் வரும்.

### 7.23 இவ்வியலுக்குப் புறனடை

*"கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்*
*கிளந்த வற்று இயலான் உணர்ந்தனர் கொளலே"* 296

இந்த இயலில் இதுவரை சொல்லப்பட்டவை அல்லாது இவை போன்ற வேறு இடைச்சொற்கள் தோன்றினாலும் அவற்றையெல்லாம் இதுவரை கூறிவந்த மரபறிந்து பொருளுணர்ந்து கொள்ள வேண்டும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## தொகுப்புரை

மேற்சுட்டிய இடைச்சொற்களின் இலக்கணமும் அதன் பாகுபாடுகளும் என்னும் இப்பகுதியில் பெயர்ச்சொல் மற்றும் வினைச்சொல்லைச் சார்ந்து வரும் இடைச்சொல் பற்றியும், மொழியில் இடம் பெறுவதால் பொருள் வேறுபடும் விதம் மற்றும் பண்பினை அடிப்படையாகக் கொண்டு ஏழு வகையாக பிரிக்கப்பட்ட விதமும், இடைச்சொல்லின் சிறப்பு இலக்ணமும் விளக்கப்பட்டுள்ளன.

## தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| 1 | - | 7.1 ஐப் பார்க்க | |
| 2 | - | 7.2 | " |
| 3 | - | 7.5.1 | " |
| 4,5 | - | 7.8 | " |
| 6 | - | 7.8.3 | " |
| 7 | - | 7.9 | " |
| 8 | - | 7.14 | " |
| 9 | - | 7.16 | " |
| 11 | - | 7.17.3 | " |
| 12 | - | 7.17.5 | " |
| 13 | - | 7.18 | " |
| 14 | - | 7.19.1 | " |

## ஒருபக்க வினாக்கள்

1. இடைச் சொற்களின் பாகுபாடுகள் எவை?
2. ஓகார இடைச்சொல் குறித்து எழுதுக.
3. 'உம்' என்னும் இடைச்சொல் குறித்து எழுதுக.
4. 'மன்' என்னும் இடைச்சொல் குறித்து எழுதுக.
5. 'என' 'என்று' என்னும் இடைச்சொல் குறித்தெழுதுக.

## கட்டுரை வினாக்கள்

1. அசைச்சொற்கள் இடைச்சொல்லாக அமையும் விதத்தினை விளக்குக.
2. ஏகார இடைச்சொல் குறித்துக் கட்டுரைக்க
3. 'எண்' இடைச்சொற்கள் குறித்துக் கட்டுரைக்க

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## அலகு - 8

# உரிச்சொல் இலக்கணமும், அதன் பாகுபாடுகளும்

### அறிமுகம்

உரிச்சொல் இலக்கணமும், அதன் பாகுபாடுகளும் என்னும் இப்பகுதியில் உரிச்சொல் இலக்கணமும், அதன் வகைகளும் செய்யுளில் இடம் கொண்டு பொருள் வழங்கும் முறைகளும் இப்பகுதியில் விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

பெயராய், வினையாய் அவற்றின் முதனிலையாய்த் தோன்றி இசை, குறிப்பு, பண்பு உணர்த்தும் சொற்களுக்கு உரிமையுடையனவாய் வரும் உரிச்சொல்லின் இலக்கணம் மற்றும் அதன் பாகுபாடுகளை விளக்குவதே இப்பகுதியின் நோக்கமாகும்.

### பாட அமைப்பு

8.1 உரிச்சொல்லின் பொது இலக்கணம்

8.2 உரிச்சொல்லின் வகைகள்

8.2.1 ஒரு குணம் தழுவிய பல உரிச்சொல்

8.2.2 குரு, கெழு என்னும் உரிச்சொற்கள்

8.2.3 செல்லல், இன்னல் என்னும் உரிச்சொற்கள்

8.2.4 அலமரல் தெருமரல் என்னும் உரிச்சொற்கள்

8.2.5 மழ, குழ என்னும் உரிச்சொற்கள்

8.2.6 கூர்ப்பு, கழிவு என்னும் உரிச்சொற்கள்

8.2.7 கதழ்வு, துனைவு எனும் உரிச்சொற்கள்

8.2.8 அதிர்வு விதிர்ப்பு என்னும் உரிச்சொற்கள்

8.2.9 தீர்தல், தீர்த்தல் என்னும் உரிச்சொற்கள்

8.2.10 கெடவரல், பண்ணை என்னும் உரிச்சொற்கள்

8.2.11 தட, கய, நளி என்னும் உரிச்சொற்கள்

8.2.11.1 தட, கய, நளி - மேலுமொரு விளக்கம்

8.2.12 நம்பு, மேவு எனும் உரிச்சொற்கள்

8.2.13 ஆய்தல், ஓய்தல், நிழத்தல் சாஅய் என்னும் உரிச்சொற்கள்

8.2.14 பிணை, பேண் என்னும் உரிச்சொற்கள்

8.2.15 பையுள், சிறுமை என்னும் உரிச்சொற்கள்

8.2.16 பிறப்பு, உறப்பு, வெறுப்பு என்னும் உரிச்சொற்கள்

8.2.16.1 பிறப்பு மேலுமொரு விளக்கம்

8.2.17 கம்பலை, சும்மை, கல், அழுங்கல் என்னும் உரிச்சொற்கள்

8.2.18 துவைத்தல், சிலைத்தல், இயம்பல், இரங்கல் என்னும் உரிச்சொற்கள்

8.2.18.1 இரங்கல் மேலுமொரு விளக்கம்

8.2.19 இலம்பாடு ஒற்கம் என்னும் உரிச்சொற்கள்

8.2.20 ஞெமிர்தல், பாய்தல் என்னும் உரிச்சொற்கள்

8.2.21 கறுப்பு, சிவப்பு என்னும் உரிச்சொற்கள்

8.2.21.1 கறுப்பு, சிவப்பு மேலுமொரு விளக்கம்

8.2.22 நொசிவு, நுழைவு, நுணங்கு என்னும் உரிச்சொற்கள்

8.2.23 பரவு, பழிச்சு என்னும் உரிச்சொல்

8.3 பலகுணம் தழுவிய உரிச்சொல்

8.3.1 ஏற்றம், பணை, படர் என்னும் உரிச்சொற்கள்

8.3.2 தா, செழுமை, விழுமம் என்னும் உரிச்சொற்கள்

8.3.3 நனவு, மத என்னும் உரிச்சொற்கள்

8.3.3.1 'மத மேலுமொரு விளக்கம்

8.3.4 கடி என்னும் உரிச்சொல்

8.3.4.1 கடி என்பதற்கு மேலுமொரு விளக்கம்

8.4 அறியப்படாதவற்றை தெரிந்த சொல்லோடு பொருந்தக் காட்டல்

8.4.1 உரு, புரை என்னும் உரிச்சொற்கள்

8.4.2 மல்லல், ஏ எனும் உரிச்சொற்கள்

8.4.3 உகப்பு, உவப்பு எனும் உரிச்சொற்கள்

8.4.4 பயப்பு, பசப்பு எனும் உரிச்சொற்கள்

8.4.5 சீர்த்தி, மாலை எனும் உரிச்சொற்கள்

8.4.6 பழுது, முழுது எனும் உரிச்சொற்கள்

8.4.7 சாயல், வம்பு, மாதர் எனும் உரிச்சொற்கள்

8.4.8 புலம்பு, துவன்று, முரஞ்சல் எனும் உரிச்சொற்கள்

8.4.9 வெம்மை, பொற்பு, வறிது எனும் உரிச்சொற்கள்

8.4.10 எய்யாமை, நன்று எனும் உரிச்சொற்கள்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

8.4.11 தெவு, தெவ்வு என்னும் உரிச்சொற்கள்

8.4.12 கழுமு, கருவி, கமழ், அரி, கவவு என்னும் உரிச்சொற்கள்

8.4.13 கவர்வு, சேர், வியல் எனும் உரிச்சொற்கள்

8.4.14 வய, வாள், துயவு எனும் உரிச்சொற்கள்

8.4.15 உயா, உசா, வயா என்னும் உரிச்சொற்கள்

8.4.16 புனிறு, யாணர், அமர்தல் எனும் உரிச்சொற்கள்

8.4.17 யாண், ஐ, முனைவு எனும் உரிச்சொற்கள்

8.4.18 வை, எறுழ் எனும் உரிச்சொற்கள்

8.5 சொல்லும் பொருளும்

8.5.1 பிறபொருள் உணர்த்தல்

8.5.2 கருத்துணர்தல்

8.5.3 பொருளுணர்த்தும் ஆற்றல்

8.5.4 பொருள் உணரும் ஆற்றல்

8.5.5 சொற்களின் பொருள்கட்குக் காரணம்

8.5.6 எழுத்துப் பிரிந்திசையா

8.6 புறனடை

தொகுப்புரை

உரிச்சொல்லாவது, ஒரு பொருட்கு உரிமை உடையதாயிருக்கும் பண்பை உணர்த்தும் சொல்லாம். அதன் வகைகளை இப்பகுதியில் காண்போம்.

## 8.1 உரிச்சொல்லின் பொது இலக்கணம்

1. உரிச்சொல் என்றால் என்ன?

*"உரிச்சொல் கிளவி விளக்கும் காலை*
*இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி*
*பெயரினும் வினையினும் மெய் தடுமாறி*
*ஒருசொல் ஒரு பொருட்கு உரிமை தோன்றினும்*
*பலசொல் ஒரு பொருட்டு உரிமை தோன்றினும்*
*பயிலாத வற்றைப் பயின்றவை சார்த்தித்*
*தத்தம் மரபில் சென்றுநிலை மருங்கின்*
*எச்சொல் ஆயினும் பொருள் வேறு கிளத்தல்"* 297

உரிச்சொல்லின் இயல்பை விளக்கிச் சொல்லுமிடத்து இசை, குறிப்புணர்த்தல், பண்பு நலம் அறிவித்தல் என்னும் பொருட்கள் வழி பெயர்ச்சொல்லோடும், வினைச்சொல்லோடும் தம் உருமாறி ஒரு சொல் பலபொருள் குறித்து வந்தாலும், பலசொல் ஒரு பொருள் குறித்ததாய் வந்தாலும், நன்கு அறியப்படாதவற்றை நன்கு தெரிந்த சொல்லோடு

பொருந்தக்காட்டி பெயரும் வினையும் தம் இயல்பில் நின்று, ஏதாவது ஒரு சொல்லாக இருப்பினும் வேறு வேறு பொருளுணர்த்தும். பெயராய், வினையாய் அவற்றின் முதனிலையாய்த் தோன்றி இசை, குறிப்பு, பண்பு உணர்த்தும் சொற்களுக்கு உரிமையுடையனவாய் வருவனவாகும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

*"வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா*
*வெளிப்பட வாரா உரிச்சொல் மேன"* 297

வெளிப்படத் தோன்றிப் பொருள்தரும் உரிச்சொற்கள் பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை என்பதால் அவை இங்கு விரித்துரைக்காமல் விடப்பட்டுள்ளன.

### 8.2 உரிச்சொல் வகைகள்

உரிச்சொல்லை

1. ஒரு குணம் தழுவிய பல உரிச்சொல்
2. பல குணம் தழுவிய ஒரு உரிச்சொல்

என்று வகைப்படுத்தலாம். மேலும் அறியப்படாத சொல்லை அறிந்த சொல்லோடு பொருந்தக்காட்டி விளக்குதல் என்றும் பிரிக்கலாம்.

2. உரிச் சொல்லின் வகைகளை வரிசைப்படுத்துக.

#### 8.2.1 ஒரு குணம் தழுவிய பல உரிச்சொல் (உறு, தவ, நனி)

*"அவைதாம்*
*உறு,தவ,நனி என வரூஉம் மூன்றும்*
*மிகுதி செய்யும் பொருள் என்ப"* 299

உறு, தவ, நனி என்னும் இம்மூன்று சொற்களும் மிகுதிப் பொருள் குறித்து வரும்.

சான்று : 1. உறுபுனல் தந்து உலகு ஊட்டி
2. ஈயாது ஈயும் உயிர் தவப்பயனே
3. வந்து நனி வருந்தினை வாழி என் நெஞ்சே

3. மிகுதி என்னும் பொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் எவை?

#### 8.2.2 குரு, கெழு என்னும் உரிச்சொற்கள்

*"குருவும் கெழுவும் நிறன் ஆகும்மே"* 301

'குரு' 'கெழு' என்னும் இரண்டு உரிச்சொற்களும் நிறம் என்னும் பண்புணர்த்துவனவாகும்.

சான்று : 1. குருமணித் தாலி
2. செங்கேழ்மென்கொடி

4. நிறன் என்னும் பொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் எவை?

#### 8.2.3 செல்லல், இன்னல் என்னும் உரிச்சொற்கள்

*"செல்லல் இன்னல் இன்னாமையே"* 302

தன் மதிப்பீட்டு வினாக்கள்

செல்லல், இன்னல் என்னும் உரிச்சொல் இரண்டும் வறுமை - துன்பம் என்னும் பொருளுணர்த்தும்.

சான்று :

1. மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல்

2. வெயில் புறந் தரூஉம் இன்னல் இயக்கூத்து

### 8.2.4 அலமரல் தெருமரல் என்னும் உரிச்சொற்கள்

5. அலமரல், தெருமரல் என்ற உரிச்சொற்கள் உணர்த்தும் பொருள் என்ன?

*"அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி"* 310

அலமரல், தெருமரல் என்னும் இரண்டு உரிச்சொற்களும் சுழலுதல் எனும் பொருளுணர்த்தும்.

சான்று : 1. அலமரல் ஆயம்

2. தெருமரல் உள்ளமோடு அன்னை துயிலும்

### 8.2.5 மழ, குழ என்னும் உரிச்சொற்கள்

*"மழவும் குழவும் இளமைப் பொருள"* 311

மழ, குழ என்னும் உரிச்சொற்கள் இளமை என்னும் பொருளில் வருவன.

6. இளமை மற்றும் விரைவு பொருள் குறிக்க வரும் உரிச்சொற்கள் எவை?

சான்று : 1. மழ களிறு 2. குழக்கன்று

### 8.2.6 கூர்ப்பு, கழிவு என்னும் உரிச்சொற்கள்

*"கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்"* 314

'கூர்ப்பு', 'கழிவு' என்னும் இரண்டு உரிச்சொற்களும் ஒரு பொருளின் சிறப்பை மேலும் கூட்டிச் சொல்லும் பொருளுடையனவாகும்.

சான்று : 1. துனிகூர் எவ்வம் 2. கழி கண்ணோட்டம்

### 8.2.7 கதழ்வு, துனைவு என்னும் உரிச்சொற்கள்

*"கதழ்வும் துனைவும் விரைவின் பொருள"* 315

கதழ்வு, துனைவு ஆகிய இரண்டு உரிச்சொற்களும் வேகம் - விரைவு என்னும் பொருள் குறிக்க வருவனவாகும்.

சான்று : 1. கதழ்பரி நெடுந்தேர்

2. துனைபரி நிவக்கும் புள்ளினமான

7. நடுக்கம் என்னும் பொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் எவை?

### 8.2.8 அதிர்வு, விதிர்ப்பு என்னும் உரிச்சொற்கள்

*"அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்"* 310

அதிர்வு, விதிர்ப்பு என்னும் உரிச்சொற்கள் இரண்டும் நடுக்கம் என்னும் பொருள் கொள்ளவரும்.

சான்று : 1. அதிர வருவதோர் நோய்

2. விதிர்ப்புற அறியா ஏமக் காப்பினை

### 8.2.9 தீர்தல், தீர்த்தல் என்னும் உரிச்சொற்கள்

*"தீர்தலும், தீர்த்தலும் விடற்பொருட்டாகும்"* 318

தீர்தல், தீர்த்தல் என்னும் இரு உரிச்சொற்களும் விடுதல் என்னும் பொருள் குறிக்க வரும்.

சான்று : 1. துணையில் தீர்ந்த கடுங்கண் யானை

2. 'தீர்த்தன்' - பற்று விட்டவன்

### 8.2.10 கெடவரல், பண்ணை என்னும் உரிச்சொல்

*"கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு"* 319

கெடவரல் பண்ணை ஆகிய இரு உரிச்சொற்களும் விளையாட்டுப் பொருளுணர்த்தும்.

சான்று : 1. கெடவரல் ஆயம்

2. பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருள்

### 8.2.11 தட, கய, நளி என்னும் உரிச்சொல்

*"தடவும் கயவும் நளியும் பெருமை"* 320

தட, கய, நளி இம்மூன்று உரிச்சொற்களும் பெருமை சுட்ட வரும்.

சான்று : 1. வலிதுஞ்சு தடக்கை 2. கயவாய்ப் பெருங்கை

3. நளிமலை நாடன்

#### 8.2.11.1 தட, கய, நளி என்பதற்கு மேலுமொரு விளக்கம்

*"அவற்றுள்*
*தட என்கிளவி கோட்டமும் செய்யும்"* 321

'தட' என்னும் உரிச்சொல் வளைவு என்னும் பொருளையும் தரும்.

சான்று : 1. தடமருப்பு எருமை

*"கய என் கிளவி மென்மையும் செய்யும்"* 322

'கய' என்னும் உரிச்சொல் மென்மை எனும் பொருளிலும் வரும்.

சான்று : 1. கயந்தலை மடப்பிடி

"நளி என் கிளவி செறிவும் ஆகும்"

நளி என்னும் உரிச்சொல் செறிவு - அடர்த்தி எனும் பொருளுணர்த்தவும் வரும்.

சான்று : நளி இருள்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

8.விளையாட்டு என்னும் பொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் யாவை?

9. செறிவு என்னும் பொருள் கொண்ட உரிச்சொல் எது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**8.2.12 நம்பு மேவு என்னும் உரிச்சொற்கள்**

*"நம்பும் மேவும் நசை ஆகும்மே"* 329

10. விருப்பம் என்ற பொருள் குறிக்கும் உரிச்சொற்கள் எவை?

நம்பு, மேவு என்னும் இரண்டு உரிச்சொற்களும் விருப்பம் என்னும் பொருள் குறிக்கும்.

சான்று : 1. நம்பும் அடியார் வினை தீர

2. நசைஇயார் நல்கார் எனினும்

**8.2.13 ஓய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய் என்னும் உரிச்சொற்கள்**

*"ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்*
*ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்"* 330

11. நுட்பம் என்னும் பொருளுணர்த்தும் உரிச்சொற்களை வரிசைப்படுத்துக

ஓய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய் என்னும் உரிச்சொற்கள் நான்கும் நுட்பம் என்னும் பொருள் குறிக்க வரும்.

சான்று : 1. வேனில் உழந்த வறிதுயங்கு ஓய்களிறு

2. பாய்ந்தாய்ந்த தானை

3. நிழத்த யானை மேய்ம்புலம்படர

4. கயலறல் எதிரக் கடும்புனல் சாஅய்

**8.12.14 பிணை, பேண் என்னும் உரிச்சொற்கள்**

*"பிணையும் பேணும் பெட்பின் பொருள"* 338

12. பிணை என்னும் உரிச்சொல்லின் பொருள் என்ன?

உரிச்சொற்கள் பிணை, பேண் என்பவை பெருமை ஓம்புதல் என்னும் பொருளைத் தருவனவாம்.

சான்று : 1. அரும்பிணை அகற்றி வேட்ட ஞாட்பினும்

2. அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்

**8.2.15 பையுள், சிறுமை என்னும் உரிச்சொற்கள்**

*"பையுளும் சிறுமையும் நோயின் பொருள"* 341

பையுள், சிறுமை என்னும் இரு உரிச்சொற்களும் நோய் துன்பம் என்னும் பொருள்களை உணர்த்துவனவாம்.

சான்று : 1. பையுள் மாலை 2. சிறுமை உறுப செய்பறியலரே

**8.2.16 விறப்பு, உறப்பு, வெறுப்பு என்னும் உரிச்சொற்கள்**

*"விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே"* 347

விறப்பு, உறப்பு, வெறுப்பு என்னும் உரிச்சொற்கள் மூன்றும் செறிவு எனும் பொருளைக் குறிப்பன.

சான்று : 1. விறந்த காப்பு 2. உறந்த விஞ்சி 3.வெறுத்த கேள்வி

**8.2.16.1 விறப்பு மேலுமொரு விளக்கம்**

*"அவற்றுள்*
*விறப்பே வெரூஉம் பொருட்டும் ஆகும்"* 348

விறப்பு என்னும் உரிச்சொல் அச்சப் பொருளுணர்த்தியும் வரும்,

சான்று : 1. அவலெறி உலக்கைப் பாடுவிறந்தியல

**8.2.17 கம்பலை, சும்மை, கலி, அழுங்கல் என்னும் உரிச்சொற்கள்**

*"கம்பலை சும்மை கலியே அழுங்கல்*
*என்று இவை நான்கும் அரவப் பொருள"* 349

கம்பலை, சும்மை, கலி, அழுங்கல் என்றுள்ள உரிச்சொற்கள் நான்கும் ஒலிக் குறிப்புணர்த்த வருவனவாம். ஒலி என்றே அகராதிப் பொருள் கூறினாலும் கம்பலை, அழுங்கல் இவை வாய்விட்டழுதல், நடுக்கம் எனும் பொருளும் குறிப்னவாகும்.

சான்று : 1. கம்பலை மூதூர் 2. ஒரு பெரும் சும்மையொடு

3. கலிகொளாய 4. அழுங்கல் ஊரே

**8.2.17.1 அழுங்கல் - இன்னுமொரு விளக்கம்**

*"அவற்றுள்*
*அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்"* 350

அழுங்கல் என்னும் உரிச்சொல், இரக்கம், கேடு என்னும் இருபொருள் உணர்த்தும்.

சான்று : 1. பழங்கண்ணோட்டமும் நலிய அழுங்கினேனல்லனோ - இரக்கம்

2. குணனழுங்கக் குற்றமுறை நின்று கூறும் சிறியர்கட்கு - கேடு

**8.2.18 துவைத்தல், சிலைத்தல், இயம்பல், இரங்கல் என்னும் உரிச்சொற்கள்**

*"துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்*
*இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்"* 358

துவைத்தல், சிலைத்தல், இயம்பல், இரங்கல் என்னும் உரிச்சொற்கள் நான்கும் இசைக் குறிப்புணர்த்தும் பொருளன என்பர் புலவர்.

சான்று : 1. வரிவளை துவைப்ப 2. ஆமா நல்லேறு சிலைப்ப

2. பல்லியம் இயம்ப 4. ஏறிரங்கு இருளிடை

**8.2.18.1 இரங்கல் மேலுமொரு பொருள்**

*"அவற்றுள்*
*இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்"* 359

தன் மதிப்பீட்டு வினாக்கள்

13. அழுங்கல் எனும் உரிச் சொல்லுக்கான பொருளை வரிசைப்படுத்துக.

14. இசைக் குறிப்புணர்த்தும் உரிச்சொற்களை வரிசைப்படுத்துக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

15. ஒற்கம் எனும் உரிச்சொல் உணர்த்தும் பொருள் எது?

16. பரத்தல் பொருளில் வரும் உரிச்சொற்களை வரிசைப்படுத்துக.

17. வெகுளிப் பொருளில் வரும் உரிச்சொற்கள் எவை?

18. பழிச்சு எனும் உரிச்சொல் உணர்த்தும் பொருள் எது?

இரங்கல் என்னும் சொல் கழிந்த பொருள் என்னும் குறிப்புணர்த்தவும் வருதல் கூடும்.

### 8.2.19 இலம்பாடு, ஒற்கம் என்னும் உரிச்சொற்கள்

*"ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தல் பொருள"* 361

ஞெமிர்தல், பாய்தல் என்னுமிரு உரிச்சொற்களும் பரத்தல் என்னும்பொருளுணர்த்துவன.

சான்று : 1. ஞெமிரிய திருநகர் 2. பாய்புனல்

### 8.2.21 கறுப்பு, சிவப்பு என்னும் உரிச்சொற்கள்

*"கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள"* 372

கறுப்பு, சிவப்பு என்னும் உரிச்சொற்கள் சினத்தை சுட்டும்.

சான்று : 1. நிற்கறுப்பதோர் அருங்கடி 2. நீ சிவந்திறுத்த நீரழிபாக்கம்

### 8.2.21.1 கறுப்பு, சிவப்பு இன்னுமொரு விளக்கம்

*"நிறத்து உரு உணர்த்தற்கும் உரிய என்ப"* 373

கறுப்பு, சிவப்பு என்னும் இரு உரிச்சொற்களும், வினையாகாமல் பண்புணர்த்த வரும்வழி அவை முறையே கறுமை, செம்மை என்னும் நிறத்தின் பொருளுணர்த்தி வரவும் உரியனவாகும் என்பர் புலவர்.

சான்று : கறுத்த காயா சிவந்த காந்தள்

### 8.2.22 நொசிவு, நுழைவு நுணங்கு

*"நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை"* 374

நொசிவு, நுழைவு, நுணங்கு ஆகிய இம்மூன்றும் உரிச்சொற்களும் நுட்பமான என்னும் பொருளுடையன.

சான்று : 1. நொசி இடை மருங்குல் 2. நுழைநூல் கலிங்கம்

3. நுணங்கு துகில் நுடக்கம்

### 8.2.23 பரவு, பழிச்சு என்னும் உரிச்சொல்

*"பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள"* 382

பரவு, பழிச்சு என்னும் ஒரு உரிச்சொற்களும் வணங்குதல் பொருள் குறிக்க வரும்.

சான்று : 1. நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே

2. கைதொழுஉப் பழிச்சி

### 8.3 பலகுணம் தழுவிய ஓர் உரிச்சொல்

ஒரு உரிச்சொல்லானது பல்வேறு பொருள் குறித்து வருவது பலகுணம் தழுவிய ஓர் உரிச்சொல்லாகும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 8.3.2 ஏற்றம், பணை, படர் என்னும் உரிச்சொற்கள்

*"ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும்"* 337

ஏற்றம் என்னும் உரிச்சொல் நினைவு, துணிவு என்னும் இரு பொருள்களிலும் வரும்.

சான்று : ஏற்றேற்றம் இல்லாருள் யான் ஏற்றேற்றம் இல்லாதேன்

19. பலகுணம் தழுவிய உரிச்சொல் என்றால் என்ன?

*"பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும்"* 339

பணை என்னும் உரிச்சொல் தவறுதல், பெருத்தல் என்னும் பொருளுணர்த்தும்.

சான்று : பணைத்து வீழ் பகழி

வேய் மருள் பணைத்தோள்

20. படர் என்னும் உரிச்சொல் குறிக்கும் பொருள்கள் எவை?

*"படரே உள்ளல் செலவும் ஆகும்"* 340

படர் என்னும் உரிச்சொல் நினைத்தல், செல்லுதல் என்னும் பொருள் குறிக்கும்.

சான்று : 1. வள்ளியோர்ப் படர்ந்த புள்ளில் போகி

2. கறவை கன்று வயிற் படர

### 8.3.2 தா, செழுமை, விழுமம் என்னும் உரிச்சொற்கள்

*"தாவே வலியும் வருத்தமும் ஆகும்"* 344

'தா' என்னும் உரிச்சொல் வலியும், வருத்தமும் ஆகிய குறிப்புணர்த்த வரும்.

சான்று : தாவினன் பொன் தைஇய பாவை

*"செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்"* 352

செழுமை எனும் உரிச்சொல் வளப்பமான கொழுத்த, அதாவது கொழுமையான என்னும் பொருள்களில் வரும்.

சான்று : செழும்பல் குன்றம் செழுந்தடி தின்ற செந்நாய்

*"விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும்"* 353

"விழுமம் என்னும் உரிச்சொல் பெருமை, சிறப்பு, துன்பம் எனும் மூன்று பொருளிலும் வரும்.

சான்று : 1. விழுமியோர் காண்தொறும் செய்வர் சிறப்பு

2. வேற்றுமை இல்லா விழுத்திணை பிறந்து

3. நின்உறு விழுமம் களைந்தோன்

21. செழுமை, விழுமம் என்னும் உரிச்சொற்கள் உணர்த்தும் பொருட்களை வரிசைப்படுத்துக

தன் மதிப்பீட்டு வினாக்கள்

22. மத என்னும் உரிச்சொல் உணர்த்தும் பொருட்கள் யாவை?

23. கடிமலர் என்பதில் கடி என்பதன் பொருள் என்ன?

### 8.3.3 நனவு, மதவு என்னும் உரிச்சொற்கள்

*"நனவே களனும் அகலமும் செய்யும்"* 376

நனவு என்னும் உரிச்சொல், அரசர் அவைகளத்தையும் அகன்ற இடத்தையும் குறிக்கும்.

சான்று : 1. நனவுப் புகு விறலியர் தோன்று நாடன்

2. நனந்தலை உலகம்

*"மதவே மடனும் வலியும் ஆகும்"* 377

மத என்னும் உரிச்சொல் இளமை, வலிமை என இருபொருள் தரும்.

சான்று : பதவு மேய்ந்த மதவு நடை நல்லான்

கயிற்றிடு கதச்சேப்போல மிதமிக்கு

#### 8.3.3.1 'மத'வு மேலுமொரு விளக்கம்

*"மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே* 378

மத என்னும் உரிச்சொல் அதிகம், அழகு என்னும் இரு பொருளிலும் வருதற்குரியதாம்.

சான்று : துள்ளும் மதவேட்கைக் கணையாலே

மாதர் வாண்முகம் மதஇய

### 8.3.4 கடி என்னும் உரிச்சொல்

*"கடி என் கிளவி*
*வரைவே கூர்மை காப்பே புதுமை*
*விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே*
*அச்சம் முன்தேற்று ஆஈர் ஐந்தும்*
*மெய்படத் தோன்றும் பொருட்டு ஆகும்மே"* 383

கடி என்னும் உரிச்சொல் வரைவு, கூர்மை, காப்பு, புதுமை, விரைவு விளக்கம், மிகுதி, சிறப்பு, அச்சம் முன்தேற்று என்னும் பத்துப் பொருள்களையும் மெய்பட விளக்கும் தன்மையன.

சான்று : 1. கடிந்த கடிந்தோரார் செய்தார்க்கு (வரைவு)

2. கடிதுணைப் பகழி (கூர்மை)

3. கடிகா (காவல்)

4. கடிமலர் (புதுமை)

5. கடிமான் (விரைவு)

6. கடும்பகல் (விளக்கம்)

7. கடுங்காலொற்றலின் (மிகுதி)

8. கடுநட்பு (சிறப்பு)

9. கடியை யான் நெடுந்தகை செருவத்தானே (அச்சம்)

10. கொடுஞ்சுழிப் புகார்த் தெய்வ நோக்கிக் கடுஞ்சூள் தருகுவன் நினக்கே (முன்தேற்றம்)

#### 8.3.4.1 கடி என்பதற்கு மேலுமொரு விளக்கம்

"*ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே*" 384

கடி என்னும் உரிச்சொல் முன் சூத்திரத்தில் சொல்லிய விரைவு தொடங்கி முன்தேற்றம் வரையிலான பத்துப் பொருள்களுணர்த்த வருவதே அல்லாமல் ஐயம் என்னும் குறிப்பும், 'கரிப்பு' என்னும் பண்பும் உணர்த்த வருதற்கும் உரியதாம்.

சான்று : கடுத்தனள் அல்லளோ அன்னை

கடுமிளகு தின்ற கல்லாமந்தி

### 8.4 அறியப்படாதவற்றை தெரிந்த சொல்லோடு பொருந்தக்காட்டல்

உரிச்சொல் நன்கு அறியப்படாதவற்றை நன்கு தெரிந்த சொல்லோடு பொருந்தக்காட்டி பெயரும் வினையும் தம் இயல்பில் நின்று, ஏதாவது ஒரு சொல்லாக இருப்பினும் வேறு வேறு பொருளுணர்த்தும்.

#### 8.4.1 உரு, புரை என்னும் உரிச்சொற்கள்

"*உரு உட்கு ஆகும் புரை உயர்வு ஆகும்*" 300

'உரு' என்னும் உரிச்சொல் அச்ச உணர்வைக் குறிக்கும். 'புரை' என்னும் உரிச்சொல் உயர்வு குறித்து வரும் சொல் ஆகும்.

சான்று : 1. உருகெழு தானை

2. புரைய மன்ற புரையோர் கேண்மை

#### 8.4.2 மல்லல், ஏ என்னும் உரிச்சொற்கள்

"*மல்லல் வளனே*" 303 '*ஏ' பெற்று ஆகும்*" 304

மல்லல் என்னும் உரிச்சொல் வளம் குறிக்க வரும். 'ஏ' பெருக்கம் என்பதைக் குறிக்கும்.

சான்று : 1. மல்லல் மால் வரை 2. ஏகல் அடுக்கம்

#### 8.4.3 உகப்பு, உவப்பு என்னும் உரிச்சொற்கள்

"*உகப்பே உயர்தல் உவப்பே உவகை*" 305

உகப்பு என்னும் உரிச்சொல் உயர்தல் பொருளையும் உவப்பு என்னும் உரிச்சொல் உவகை - மகிழ்ச்சி என்னும் பொருளையும் தரும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

24. ஐயக் குறிப்பும், கரிப்பு பண்பும் உணர்த்தும் உரிச்சொல் எது?

25. கடி என்னும் மெய்பட விளக்கும் சொற்கள் எத்தனை?

26. 'உரு' என்பது உணர்த்தும் பொருள் என்ன?

27. 'மல்லல்' எனும் சொல் உணர்த்தும் பொருள் என்ன?

| தன் மதிப்பீட்டு வினாக்கள் | |
|---|---|
| | சான்று : 1. விசும்பு உகந்தாடாது<br>2. உவந்து வந்தார்வ நெஞ்சமொடு |

**8.4.4 பயப்பு, பசப்பு என்னும் உரிச்சொற்கள்**

*"பயப்பே பயன் ஆம்"* 306

'பயப்பு' என்னும் உரிச்சொல் 'பலன்' என்னும் பொருளுக்கானது.

சான்று : பயவர்க் களர் அணையா கல்லாதவர்

*"பசப்பு நிறன் ஆகும்"* 307

பசப்பு என்னும் உரிச்சொல் நிறவேறுபாடு குறிக்க வரும்.

சான்று : மையில் வாண்முகம் பசுப்பு ஊரும்மே

**8.4.5 சீர்த்தி, மாலை என்னும் உரிச்சொல்**

*"சீர்த்தி மிகுபுகழ்",* 312 *"மாலை இயல்பே"* 313

சீர்த்தி என்னும் உரிச்சொல் மிகுந்த புகழையும் மாலை என்னும் உரிச்சொல் இயல்பு நிலையும் உணர்த்த வரும்.

சான்று : 1. வயக்கஞ்சால் சீர்த்தி 2. இரவரன் மாலையனே

**8.4.6 பழுது, முழுது என்னும் உரிச்சொல்**

*"பழுது பயம் இன்றே"* 324

பழுது என்னும் உரிச்சொல் 'பயனற்றது' எனும் பொருள் குறிக்கும்.

சான்று : பழுது கழி வாழ்நாள்

*"முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே"* 326

'முழுது' என்னும் உரிச்சொல், மிச்சம் அதாவது மீதம் இல்லாத முழுமையைக் குறிக்க வரும்.

சான்று : கடலுலகு முழுதாண்ட கன்னல் தமிழ்

**8.4.7 சாயல், வம்பு, மாதர் என்னும் உரிச்சொற்கள்**

*"சாயல் மென்மை"* 325

சாயல் எனும் உரிச்சொல் மென்மை எனும் பொருளைத் தரும்.

சான்று : சாயல் மார்பு

*"வம்புநிலை இன்மை"* 327

வம்பு எனும் உரிச்சொல் நிலை இல்லாமை குறித்த பொருள் உணர்த்தும்.

சான்று : வம்புமாரி

*"மாதர் காதல்"* 328

மாதர் எனும் உரிச்சொல் காதல் பொருளுணர்த்தும்

சான்று : மாதர் நோக்கு

28. உவப்பு எனும் உரிச்சொல் உணர்த்தும் பொருள் என்ன?

29. பலன் என்னும் பொருளுக்கான உரிச்சொல் எது?

30. மாலை என்னும் உரிச்சொல் உணர்த்தும் பொருள் என்ன?

31. பயனற்றது எனும் பொருளுக்கான உரிச்சொல் எது?

32. வம்பு என்னும் உரிச்சொல்லின் பொருள் என்ன?

**8.4.8 புலம்பு, துவன்று, முரஞ்சல் என்னும் உரிச்சொற்கள்**

*"புலம்பே தனிமை"* 331

'புலம்பு' என்னும் உரிச்சொல் 'தனிமை' வருத்தம் குறித்து நிற்கும்.

சான்று : புலம்பல் கோத்த புலம்பு மணித்தாலி

*"துவன்று நிறைவாகும்"* 332

'துவன்று' என்னும் உரிச்சொல் நிறைவு என்னும் பொருள் உணர்த்தும்.

சான்று : ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்

*"முரஞ்சல் முதிர்வே"* 333

முரஞ்சல் என்னும் உரிச்சொல் 'முதிர்வு' என்னும் பொருளதாகும்.

சான்று : சூல் முரஞ்சு எழிலி

**8.4.9 வெம்மை, பொற்பு, வறிது என்னும் உரிச்சொற்கள்**

*"வெம்மை வேண்டல்"* 334

வெம்மை என்னும் உரிச்சொல் விருப்பம் என்னும் வேண்டுதல் பண்புணர்த்த வரும்.

சான்று : வெம் காமம்

*"பொற்பே பொலிவு"* 335

பொற்பு என்னும் உரிச்சொல் அழகு எனும் பொருள் தரும்.

சான்று : பெருவரை அடுக்கம் பொற்ப

*"வறிது சிறிது ஆகும்"* 336

வறிது என்னும் உரிச்சொல் சிறிது என்னும் பொருளுணர்த்தும்.

சான்று : வறிது வடக்கு இறைஞ்சிய

**8.4.10 எய்யாமை, நன்று என்னும் உரிச்சொற்கள்**

*"எய்யாமையே அறியாமையே"* 342

எய்யாமை என்னும் உரிச்சொல் அறிவின்மை என்னும் குறிப்புப் பொருளுணர்த்தும்.

சான்று : எய்யாமை அலை நீயும் வருந்துதி

*"நன்று பெரிது ஆகும்"* 343

'நன்று' என்னும் உரிச்சொல் பெரிது என்னும் குறிப்பை உணர்த்தும்.

சான்று : நன்று மரிதுற்றனையாற் பெரும்

**8.4.11 தெவு, தெவ்வு என்னும் உரிச்சொற்கள்**

*"தெவுக் கொளல் பொருட்டே"* 345

தன் மதிப்பீட்டு வினாக்கள்

33. புலம்பு என்னும் உரிச்சொல்லின் பொருள் என்ன?

34. முதிர்வு எனும் பொருளுக்கான உரிச்சொல் எது?

35. பொற்பு எனும் உரிச் சொல்லுக்கான பொருள் எது?

36. நன்று எனும் உரிச்சொல் உணர்த்தும் பொருள் எது?

37. பகை எனும் பொருளைக் குறிக்கும் உரிச்சொல் எது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

தெவு என்னும் உரிச்சொல் கொள்ளுதல் பொருள் குறிக்கும்.

சான்று : நீர்த் தெவு நிறைத்தொழுவார்.

*"தெவ்வுப் பகை ஆகும்"* 346

தெவ்வு என்னும் உரிச்சொல் பகை என்னும் பொருளதாகும்.

சான்று : தெவ்வுப் புலம்

**8.4.12 கழுமு, கருவி, கமழ் அரி, கவ்வு என்னும் உரிச்சொற்கள்**

38. கழுமு எனும் உரிச்சொல் உணர்த்தும் பொருள் எது?

*"கழுமு என் கிளவி மயக்கம் செய்யும்"* 351

கழுமு என்னும் உரிச்சொல் மயக்கம் எனும் குறிப்புணர்த்தும் பொருளாகும்.

சான்று : கழுமிய ஞாட்பு

*"கருவி தொகுதி"* 354"

கருவி என்னும் உரிச்சொல் தொகுதி எனும் பொருளில் வரும்.

39. தொகுதி எனும் பொருளில் வரும் உரிச்சொல் எது?

சான்று : கருவி வானம் தலைஇ வாங்கும்

*"கமம் நிறைந்து இயலும்"* 355

கமம் என்பது நிறைவு என்னும் பொருள் குறிக்க வரும்.

சான்று : கமம் சூழ் மாமழை

*"அரியே அம்மை"* 356

அரி என்னும் உரிச்சொல் 'அழகு' என்னும் குறிப்புணர்த்தும்.

சான்று : அரிமயிர்த்திரள் முன்கை வால் இழை மடமங்கையர்

40. விருப்பு, திரட்சி எனும் பொருளில் வரும் உரிச்சொற்கள் எவை?

*"கவவு அகத்திடுமே"* 357

கவவு என்னும் உரிச்சொல் உள்ளடங்கச் செய்தல் என்னும் பொருளில் வரும்.

சான்று : நின் கழுஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே

**8.4.13 கவர்வு, சேர், வியல் என்னும் உரிச்சொற்கள்**

*"கவர்வு விருப்பு ஆகும்"* 362

கவர்வு என்னும் உரிச்சொல் விருப்பு என்னும் பொருள் குறிக்க வரும்.

சான்று : உள்ளம் கவர் கள்வன்

*"சேரே திரட்சி"* 363

'சேர்' என்னும் உரிச்சொல் செறிவு என்னும் பொருளில் வரும்.

41. வியல் என்னும் உரிச்சொல்லின் பொருள் என்ன?

சேர்ந்து செறிகுரங்கு

*"வியல் என்கிளவி அகலப் பொருட்டே"* 364

வியல் என்னும் உரிச்சொல் அகலம் என்னும் பொருள் உணர்த்த வரும்.

சான்று : வியனுலகம்

### 8.4.14 வய, வாள், துயவு என்னும் உரிச்சொற்கள்

"*வயவலி ஆகும்*" *366*

வய என்னும் உரிச்சொல் வலி என்னும் பொருள் தரும்.

சான்று : துன்னரும் துப்பின் வயமான்

"*வாள் ஒளி ஆகும்*" *367*

வாள் என்னும் உரிச்சொல் ஒளி எனப் பொருள் தரும்.

சான்று : வாள் நுதல்

"*துயவு என்கிளவி அறிவின் திரிபே*" *368*

துயவு என்னும் உரிச்சொல் அறிவு வேறுபடுதல் என்னும் குறிப்புப் பொருள் கூறும்.

சான்று : துயவுற்றோம் யாமாக

### 8.4.15 உயா, உசா, வயா என்னும் உரிச்சொற்கள்

"*உயாவே உயங்கல்*" *369*

உயா என்னும் உரிச்சொல் உயங்கல் என்னும் குறிப்புணர்த்தும் பொருளது.

சான்று : பருந்திருந்து உயாவிளி பயிற்று மியர்வுயர் நலந்தலை

"*உசாவே சூழ்ச்சி*" *370*

உசா என்னும் உரிச்சொல் சூழ்ச்சி என்னும் பொருள் தரும்

சான்று : உசாத்துணை

"*வயா என்கிளவி வேட்கைப் பெருக்கம்*" *371*

வயா என்னும் உரிச்சொல்லுக்கு வேட்கைப் பெருக்கம் என்பது பொருள்.

சான்று : வயவுறு மகளிர் வேட்டு உணின்

### 8.4.16 புனிறு, யாணர், அமர்தல் என்னும் உரிச்சொற்கள்

"*புனிறு என்கிளவி ஈன்றணிமைப் பொருட்டே*" *375*

புனிறு என்னும் உரிச்சொல் ஈன்றதன் அணிமைக் காலக் குறிப்பை உணர்த்த வரும் சொல்லாகும்.

சான்று : புனிற்றா

"*புதிது பாடல் பொருட்டே யாணர்க்கிளவி*" *376*

'புது வருவாய்' எனும் பொருள் குறித்து வரும் யாணர் என்னும் உரிச்சொல்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

42. வாள் என்னும் உரிச்சொல்லின் பொருள் என்ன?

43. உசா எனும் உரிச்சொல்லின் பொருள் என்ன?

44. புது வருவாய் என்னும் பொருளுணர்த்தும் உரிச்சொல் எது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

45. ஐ என்னும் உரிச்சொல்லின் பொருள் என்ன?

46. ஐ எனும் உரிச்சொல்லின் பொருள் என்ன?

47. வலி என்னும் பொருளுணர்த்தும் உரிச்சொல் எது?

சான்று : மீனொடு பெயரும் யாணர் ஊர

"*அமர்தல் மேவல்*" *380*

அமர்தல் என்னும் உரிச்சொல் விரும்புதல் என்னும் பொருளில் வரும்.

சான்று :

"அகனமர்ந்து ஈதலின் நன்றே முகன் அமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்"

**8.4.17 யாண், ஐ, முனைவு என்னும் உரிச்சொற்கள்**

"*யாணுக் கவின் ஆகும்*" *381*

'யாண்' எனும் உரிச்சொல் அழகு என்னும் பொருள் குறிக்கும்.

சான்று : யாண் அது பசலை

"*ஐ வியப்பு ஆகும்*" *385*

ஐ எனும் உரிச்சொல் ஆச்சரியப் பொருளுணர்த்தும்.

"*முனைவு முனிவு ஆகும்*" *386*

முனைவு என்னும் உரிச்சொல் வெறுப்புப் பொருள் குறிக்க வரும்.

சான்று : சேற்று நில முனைஇய செங்கட்காரான்

**8.4.18 வை, எறும் என்னும் உரிச்சொற்கள்**

"*வையே கூர்மை*" *387*

வை என்னும் உரிச்சொல் கூர்மை எனும் பொருள் குறிக்கும்.

சான்று : வைநுனைப் பகழி

"*எறுழ்வலி ஆகும்*" *388*

எறுழ் என்னும் உரிச்சொல்லுக்கு வலிமை என்பது பொருள்,

சான்று : போரெறுழ்த் திணி தோள்

**8.5 சொல்லும் பொருளும்**

"*மெய்பெறக் கிளர்ந்த உரிச்சொல் எல்லாம்*
*முன்னும் பின்னும் வருபவை நாடி*
*ஒத்த மொழியால் புணர்த்தனர் உணர்த்தல்*
*தத்தம் மரபில் தோன்றுமன் பொருளே*" *389*

உரிச்சொற்களுக்கு முன்னதாகவும், அடுத்தும் வருகின்ற சொற்களை ஆராய்ந்தறிந்து அவற்றிற்கு ஒத்த பொருத்தமான சொற்கள் கொண்டு பொருள் உணர்த்துதல் வேண்டும். உணர்த்தின் அச்சொற்கள் தத்தம் இயல்பில் நின்று பொருள் வியங்க நிற்கும்.

#### 8.5.1 பிறபொருள் உணர்த்துதல்

*"கூறிய கிளவிப் பொருள் நிலை அல்ல*
*வேறுபிற தோன்றினும் அவற்றொடும் கொளவே" 390*

உரிச்சொல்லுக்குக் கூறிய பொருள் அல்லாமல், வேறு பொருள் தோன்றுமாயினும் முன்னும், பின்னும் வரும் சொற்களை அடிப்படையாகக் கொண்டு பொருள் கொள்ள வேண்டும்.

சான்று :

"கடிநாறும் பூந்துணர்" என்பதில் கடி என்னும் உரிச்சொல் முன்னும் பின்னும் வருவன நோக்கக் கடி வரைவு, கூர்மை, காப்பு என்னும் பொருள் குறிக்காது மணம் என்னும் பொருள் தர நின்றது.

#### 8.5.2 கருத்துணர்தல்

*"பொருட்குப் பொருள் தெரியின் அது வரம்பு இன்றே"*
*391*

ஒரு சொல்லுக்குப் பொருள் இன்னதென்று வேறு ஒரு சொல் கொண்டு விளக்கும் போது, அச்சொல்லுக்கு என்ன பொருள் என்று ஆராயத் தொடங்கினால், இத்தகைய ஆய்வு எல்லை கடந்து போகும்.

#### 8.5.3 பொருளுணர்த்தும் ஆற்றல்

*"பொருட்குத் திரிபு இல்லை உணர்த்த வலித்தே"*
*392*

ஒரு பொருளை உணர்த்த விரும்புகிறவன், அப்பொருளுக்குரிய சரியான சொல் கொண்டு சொன்னால் சொன்ன பொருள் பற்றிய மயக்கம் சந்தேகம் கேட்பவனுக்கு வராது.

#### 8.5.4 பொருள் உணரும் ஆற்றல்

*"உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே" 393*

ஒன்றின் பொருளை விளக்கச் சொல் கொண்டு விளக்கியும் காட்சி அளவாகக் காட்டுவித்தும், அவன் அப்பொருளை உணரவில்லை என்றால், அவனுக்குப் பொருளுணர்த்தி விளக்க வழியில்லை. உணர்வு வழியாக அறிகின்றவன் அறிவையே வழியாக உடையது உணர்வு ஆகும்.

#### 8.5.5 சொற்களின் பொருள்கட்குக் காரணம்

*"மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" 394*

உறு, தவ, நனி எனவரும் உரிச்சொற்களுக்கு இதுவரை பொருள் கொள்ளக் கூறப்பட்ட காரணங்கள் - விளக்கங்கள் தொன்று தொட்டுக் கூறிவரும் வழக்கு பற்றிச் சொன்னதே அல்லாமல், இப்படிப் பொருள் உரைத்ததற்கு வெளிப்படையான, விளக்கத்தக்க காரணங்கள் எதுவுமில்லை.

**தன் மதிப்பீட்டு வினாக்கள்**

48. 'கடிநாறும் பூந்துணர்' - இத் தொடரில் கடி உணர்த்தும் பொருள் எது?

49. 'மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா' - விளக்குக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

50.உரிச்சொல் பிரிந்து நின்று பொருள் வழங்குமா?

**8.5.6 எழுத்துப் பிரிந்திசையா**

*"எழுத்துப் பிரிந்திசைத்தல் இவணியல்பு இன்றே"* 395

எழுத்துக்கள் முதலும் இறுதியுமாக வெவ்வேறாகப் பிரிந்து வேறுவேறு பொருளை உரிச்சொல் உணர்த்துவதில்லை.

**8.6 புறனடை**

*"அன்ன பிறவும் கிளந்த அல்ல*
*பல முறையானும் பரந்தன வரூஉம்*
*உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட*
*இயன்ற மருங்கின் இனைத்து என அறியும்*
*வரம்பு தமக்கு இன்மையின் வழிநனி கடைப்பிடித்து*
*ஓம்படை ஆணையிற் கிளந்தவற்று இயலான்*
*பாங்குற உணர்தல் என்மனார் புலவர்"* 396

இதுவரை கூறியனவும், இவையன்றி இவை போன்ற பிறவும், பலவகையாகப் பரந்து வரும் உரிச்சொற்கள் எல்லாம், பொருளுணர்த்தச் சேர்ந்து வரும் இடங்களில் எல்லாம் இவ்வளவு என்று வரையறுத்துக் கூறும் அளவு இல்லமையால் பொருள் கூறம் வழியே சென்று, பாதுகாப்பாகக் கூறிய விதிகளின்படி சிறப்பித்துச் சொல்லப்பட்டவைகளின் தன்மை அறிந்து பொருள் கொள்ள வேண்டும் என்பர் புலவர் பெருமக்கள்.

**தொகுப்புரை :**

பெயராய், வினையாய் அவற்றின் முதனிலையாய்த் தோன்றி இசை, குறிப்பு, பண்பு உணர்த்தும் சொற்களுக்கு உரிமையுடையனவாய் வரும் உரிச்சொல் இலக்கணமும், அதன் வகைகளும், செய்யுளில் இடம் கொண்டு அவை பொருள் வழங்கும் முறைகளும் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

**தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு**

| | | | |
|---|---|---|---|
| 1 | - | 8.1 | ஐப் பார்க்க |
| 2 | - | 8.2 | " |
| 3 | - | 8.2.1 | " |
| 4 | - | 8.2.2 | " |
| 5 | - | 8.2.4 | " |
| 6 | - | 8.2.5, 8.2.7 | " |
| 7 | - | 8.2.8 | " |
| 8 | - | 8.2.10 | " |
| 9 | - | 8.2.11.1, 8.2.16 | " |

| | | | |
|---|---|---|---|
| 10 | - | 8.2.12 | ஐப் பார்க்க |
| 11 | - | 8.2.13 | " |
| 12 | - | 8.2.14 | " |
| 13 | - | 8.2.17, 8.2.17.1 | " |
| 14 | - | 8.2.18 | " |
| 15 | - | 8.2.19 | " |
| 16 | - | 8.2.20 | " |
| 17 | - | 8.2.21 | " |
| 18 | - | 8.2.23 | " |
| 19 | - | 8.3 | " |
| 20 | - | 8.3.1 | " |
| 21 | - | 8.3.2 | " |
| 22 | - | 8.3.3.1 | " |
| 23, 25 | - | 8.3.4 | " |
| 24 | - | 8.3.4.1 | " |
| 26 | - | 8.4.1 | " |
| 27 | - | 8.4.2 | " |
| 28 | - | 8.4.3 | " |
| 29 | - | 8.4.4 | " |
| 30 | - | 8.4.5 | " |
| 31 | - | 8.4.6 | " |
| 32 | - | 8.4.7 | " |
| 33,34,35 | - | 8.4.8 | " |
| 36 | - | 8.4.10 | " |
| 37 | - | 8.4.11 | " |
| 38,39 | - | 8.4.12 | " |
| 40,41 | - | 8.4.13 | " |
| 42 | - | 8.4.14 | " |
| 43 | - | 8.4.15 | " |
| 44 | - | 8.4.16 | " |
| 45 | - | 8.4.17 | " |

தன் மதிப்பீட்டு வினாக்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| தன் மதிப்பீட்டு வினாக்கள் | 46,47 | - | 8.4.18 | ஐப் பார்க்க |
| | 48 | - | 8.5.1 | " |
| | 49 | - | 8.5.5 | " |
| | 50 | - | 8.5.6 | " |

**பயிற்சி வினாக்கள்**

**ஒரு பக்க வினாக்கள்**

1. மிகுதி என்னும் பொருள் உணர்த்தும் உரிச்சொற்களை வரிசைப்படுத்தி விளக்குக.
2. தட, கய, நளி என்னும் உரிச்சொற்கள் உணர்த்தும் பொருட்கள் யாவை?
3. நோயின் பொருளில் வரும் உரிச்சொற்கள் எவை?
4. அரவப் பொருளில் வரும் உரிச்சொற்களை விளக்குக.
5. கடி எனும் உரிச்சொல் உணர்த்தும் பொருள்களை வரிசைப்படுத்துக.
6. சீர்த்தி, மாலை என்னும் உரிச்சொற்களின் பொருள்களை வரிசைப்படுத்துக.
7. சாயல், வம்பு மாதர் என்னும் உரிச்சொற்களின் பொருள்களை வரிசைப்படுத்துக.
8. உயா, உசா, வயா என்னும் உரிச்சொற்களின் பொருள்களை வரிசைப்படுத்துக.
9. ஐ, வை, எறுழ் என்னும் உரிச்சொற்களின் பொருள்களை வரிசைப்படுத்துக.
10. உரிச்சொல் பொருள் உணர்த்தும் முறையை விளக்குக.

**கட்டுரை வினாக்கள்**

1. ஒரு குணம் தழுவிய பல உரிச்சொற்கள் - கட்டுரைக்க
2. பல குணம் தழுவிய ஒரு உரிச்சொல் - கட்டுரைக்க
3. பயிலாதவற்றை பயின்றவை சார்த்தும் உரிச்சொற்கள் கட்டுரைக்க

## அலகு - 9

## செய்யுள் ஈட்டச் சொற்களும், பொருள்கோளும்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

**அறிமுகம் :**

செய்யுள் ஈட்டச் சொற்களும், பொருள்கோளும் என்னும் இப்பகுதியில் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் கிளவியாக்கம் முதல் உரியியல் ஈறாக விளக்கப்பட்டன போக மொழியைப் பற்றி விளக்க வேண்டிய செய்யுள் ஈட்டச் சொற்கள், செய்யுளில் பொருள் கொள்ளும் முறைகள், தொகை நிலைத் தொடர் போன்றவை விளக்கப்படுகின்றன.

**நோக்கம் :**

செய்யுள் ஈட்டச் சொற்கள் மற்றும் சொற்களை செய்யுளில் பொருள் கொள்ளும் முறைகள், ஆறு வகையான தொகைநிலைத் தொடர்கள், சொற்கள் செய்யுளில் விகாரப்படும் முறைகள் போன்றவற்றைக் குறித்து விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

**அமைப்பு :**

9.1 சொற்களின் வகைகள்

9.1.1 இயற்சொல்

9.1.2 திரிசொல்

9.1.3 திசைச்சொல்

9.1.4 வடசொல்

9.2 சொற்கள் செய்யுளில் அடையும் விகாரம்

9.3 பொருள்கோள் இலக்கணமும், வகையும்

9.3.1 நிரல் - நிறைப் பொருள்கோள்

9.3.2 சுண்ணப்பொருள்கோள்

9.3.3 அடிமறிமாற்றுப் பொருள்கோள்

9.3.3.1 அடிமறி மேலுமொரு விளக்கம்

9.3.4 மொழிமாற்றுப் பொருள்கோள்

9.4 தொகைச்சொல் வகை

9.4.1 சொல் அடுக்கு

9.5 தொகை மொழிகள்

9.5.1 வேற்றுமைத் தொகை

9.5.2 உவமத் தொகை

9.5.3 வினைத் தொகை

9.5.4 பண்புத் தொகை

9.5.5 உம்மைத் தொகை

ன் மதிப்பீட்டு வினாக்கள்

9.5.6 அன்மொழித் தொகை

9.5.6.1 தொகைமொழியில் பொருள் நிற்கும் இடம்

9.5.7 தொகை மொழியின் தன்மை

9.5.8 உயர்திணை உம்மைத் தொகை

9.6 இன்ன என்னும் குறிப்பு மொழி

9.7 இசை நிறை அடுக்கு

9.8 விரைவுப் பொருள் அடுக்கு

9.9 அசைநிலை அடுக்கு

9.9.1 வழக்கில்லா அசைநிலைகள்

9.10 வினைமுற்றின் இயல்பு

9.10.1 வினைமுற்று - சிறப்பு விதி

9.10.2 வினைமுற்று - முடிவு

தொகுப்புரை

செய்யுள் ஈட்டச் சொற்கள் மற்றும் செய்யுளில் பொருள் கொள்ளும் முறையான பொருள்கோள் மற்றும் அதன் வகைகள், தொகைநிலைத் தொடர் போன்றவை இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

**9.1 சொற்களின் வகை**

சொற்கள், பெயர், வினை, இடை, உரி என்று பிரிக்கப்பட்டிருந்தாலும் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்றுள்ள நான்குமே செய்யுளியற்றுதற்கு ஏற்ற சொற்களாகும் என்கிறார் தொல்காப்பியர்.

*"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று*
*அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே"* *397*

**9.1.1 இயற்சொல்**

1. செய்யுள் ஈட்டச்சொற்களை வரிசைப்படுத்துக.

"அவற்றுள்
இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே"
என்கிறார் தொல்காப்பியர்.

செந்தமிழ் நிலத்தில் வழங்கி வரும் சொற்களின் வழக்கொடு பொருந்தித் தம் பொருளியல்பு மாறாமல் வழங்கிவரும் சொல் இயற்சொல் ஆகும்.

சான்று : நிலம், நீர், காற்று, மழை, மக்கள்

### 9.1.2 திரிசொல்

*"ஒருபொருள் குறித்த வேறு சொல் ஆகியும்*
*வேறு பொருள் குறித்த ஒரு சொல் ஆகியும்*
*இருபாற்று என்ப திரிசொல் கிளவி"* 399

என்கிறார் தொல்காப்பியர்.

ஒரு பொருளை உணர்த்த வரும் பல சொல்லும், பல பொருள் உணர்த்த வரும் ஒரு சொல்லும் என இரண்டு தன்மைகளுடையது திரிசொல்லாகும்.

சான்று :

'விலங்கல் வெற்பு விண்டு எனவும்'

'எகினம் உந்தி' எனவும் வரப்பெறும்.

### 9.1.3 திசைச்சொல்

*"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்*
*தம் குறிப்பினவே திசைச்சொல் கிளவி"*
*400*

என்கிறார் தொல்காப்பியர்.

செந்தமிழ் மொழி வழங்கிவரும் நிலத்துடன் சேர்ந்த பன்னிரண்டு நிலப்பகுதிகளிலும் தாம் குறித்த பொருள் விளங்க நிற்கும் சொல் திசைச்சொல்லாம்.

சான்று :

ஒளிநாடு, தென்பாண்டி நாடு, கருங்குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலாடு, அருவா நாடு, அருவா வடதலை நாடு, பொங்கர் நாடு என்னும் பன்னிரு நிலப்பகுதிகள் என்று உரையாசிரியர்கள் கூறுவது, தொல்காப்பியர் காலத்து நிலப்பகுதிகளின் பெயர்கள் ஆகும்.

### 9.1.4 வடசொல்

*"வடசொல் கிளவி வடஎழுத்து ஒரீஇ*
*எழுத்தொடு புணர்ந்த சொல் ஆகும்மே"* 401

என்கிறார் தொல்காப்பியர்.

வடமொழிச்சொல் என்பது வடமொழிக்கே உரிய சிறப்பெழுத்தினின்று வேறுபட்டு, வடமொழி, தென்மொழி என்னும் இரண்டிற்கும் பொதுவான வடிவிலமைந்து வழங்கி வரும் சொல்லாகும்.

சான்று : வாரி குங்குமம் மனு

மேலும்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

2. நிலம், நீர், காற்று என்னும் சொற்களைச் செய்யுள் ஈட்டச் சொற்களுள் எதில் அடக்கலாம்.

3. திரிசொல் என்றால் என்ன?

4. தொல்காப்பியர் கூறும் பன்னிரண்டு நிலங்கள் எவை?

5. வடசொல் என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

*"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்"* 402

என்கிறார் தொல்காப்பியர்.

வடமொழி, தென்மொழி என்னும் இரண்டிற்கும் பொதுவாக அமையாமல், வடமொழி எழுத்தாலேயே அமைந்தசொல், சிறிது வேறுபட்டு வழக்கில் வந்தாலும் அவை பொருத்தமுடையனவாக இருந்தால் கற்றறி புலவர் விளக்கமாட்டார்.

சான்று : தசக்கிரீடன்

## 9.2 சொற்கள் - விகாரம்

செய்யுள் இயற்றும் போது, செய்யுள் ஓசைநயம் இலக்கணம் கருதி, மெல்லெழுத்துக்களை வல்லோசை பெற வரச் செய்ய வேண்டும் பொழுது வல்லெழுத்தாக்கியும் அதே போல், வல்லெழுத்துக்களை மெல்லெழுத்தாக ஓசை குன்றி வரச்செய்தும், குறைக்க வேண்டிய இடத்தில் குறைத்தும், விரித்துரைக்க வேண்டுமிடத்தும் விரித்தும் மிகுதியாக இருக்குமிடத்துத் தொகுத்தும், குற்றெழுத்துக்களை நீட்ட வேண்டிய இடங்களில் நீட்டியும், நெட்டெழுத்துக்களை குறுக்க வேண்டிய இடங்களில் குறுக்கியும் செய்யுளியற்றும் புலவன் மேற்கொள்ளும் இந்த ஆறும் விகாரம் எனப்படும்.

6. விகாரம் என்றால் என்ன?

இதனையே

*"அந்நாற் சொல்லும் தொடுக்கும் காலை*
*வலிக்கும் வழி வலித்தலும் மெலிக்கும் வழி மெலித்தலும்*
*விரிக்கும் வழி விரித்தலும் தொகுக்கும் வழி தொகுத்தலும்*
*நீட்டும் வழி நீட்டலும் குறுக்கும் வழி குறுக்கலும்*
*நாட்டல் வலிய என்மனார் புலவர்"* 403

என்கிறார் தொல்காப்பியர்.

7. விரித்தல் விகாரம் என்றால் என்ன?

சான்று :

குறுக்கை இரும்புலி (வலித்தல்)

சுடுமண் பாவை (மெலித்தல்)

தண்ணந் துறைவன் (விரித்தல்)

மழவர் ஓட்டிய (தொகுத்தல்)

பாசிலை (நீட்டல்)

அழுந்துபடு விழுப்புண் (குறுக்கல்)

## 9.3 பொருள்கோள் இலக்கணமும், வகையும்

செய்யுளில் சொற்கள் சேர்ந்து இணைந்து பொருள் கொள்ளும் முறை பொருள்கோள் ஆகும். அவை நிரல்நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என நான்கு வகைப்படும்.

*"நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று*
*அவை நான்கு என்ப மொழி புணர் இயல்பே"* *404*

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 9.3.1 நிரல் - நிறைப் பொருள்கோள்

*"அவற்றுள்*
*நிரல் நிறை தானே*
*வினையினும் பெயரினும் நினையத் தோன்றி*
*சொல்வேறு நிலைஇப் பொருள் வேறு நிலையல்* *405*

என்கிறார் தொல்காப்பியர்.

8. பொருள் கோள் என்றால் என்ன?

சொற்கள் புணரும் முறை நான்கினுள் நிரல்நிறை வினைச்சொல், பெயர்ச்சொல் அல்லது அவ்விரு சொற்களிலும் ஆராய்ந்து பார்த்தால் சொல்வேறாய் நிற்கப் பொருள் வேறாய் நிற்பதாம்.

9. பொருள் கோள் எத்தனை வகைப்படும்.?

சான்று :

'மாசு போகவும் காய்ப்பசி நீங்கவும் - கடிபுனல் மூழ்கி அடிசில் கை தொட்டு' இதில் வினைவேறு சொல் வேறாய் நிற்றலின் நிரல் - நிறையானது 'மாசு போகப் புனல் மூழ்கிப் பசி நீங்க அடிசில் கை தொட்டு' என்பது மாசு போகவும், காய்பசி நீங்கவும், கடினுல் மூழ்கி அடிசில் கைதொட்டு என வந்தது.

### 9.3.2 சுண்ணப்பொருள்கோள்

*"சுண்ணம் தானே*
*பட்டாங்க அமைந்த ஈரடி எண்சீர்*
*ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல்"* *406*

சுண்ணம் ஆவது இயல்பாக அமைந்த இரண்டு அடிகளில் எட்டுச் சீர்களையும், தனித்தனியே, பொருத்தும் இடமறிந்து, இடம்பெறச் செய்து பொருள் தரும் வகையில் கூட்டிச் செய்தலாகும்.

10. சுண்ணப் பொருள்கோள் என்றால் என்ன?

சான்று :

"சுரை ஆழி அம்மி மிதப்ப வரை அனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலை என்ப
கானக நாடன் சுனை"

சுரை மிதப்ப, அம்மி ஆழ, யானைக்கு நிலை, முயலுக்கு நீத்து எனத் துணிந்து கூட்ட இயற்றல் ஆனது.

### 9.3.3 அடிமறிமாற்றுப் பொருள்கோள்

அடிமறியாவது செய்யுளில் சீர்கள் இயலாக இருக்கும் இடம் நிற்க, செய்யுளடிகள் தத்தம் நிலையில் மாறி ஒன்றின் இடத்தில் மற்றொன்று போய்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

நிற்பதாகும் என்பதை தொல்காப்பியர் பின்வருமாறு விளக்குகிறார்.

*"அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து*
*சீர்நிலை திரியாது தடு மாறும்மே"* 407

சான்று :

"மாறாக் காதலர் மலை மறந்தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்தோள் வளை நெகிழும்மே
கூறாய் தோழி யான் வாழுமாறே"

இதில் சீர்கள் பொருந்தி நிற்க, அடிகள் நிலைமாறி நிற்க அடிமறி ஆனது.

#### 9.3.3.1 'அடிமறி' - மேலுமொரு விளக்கம்

*"பொருள் தெரி மருங்கின்*
*ஈற்றடி இருசீர் எருத்துவயின் திரியும்*
*தோற்றமும் வரையார் 'அடிமறி' யான"* 408

'அடிமறி' இதன் உண்மைப் பொருளறிய முற்பட்டால், அடிமறிச் செய்யுளின் இறுதியில் வரும் அடியின் கடைசிச் சீர், இரண்டாம் அடியில் திரிந்து நின்றாலும் அது விலக்கத் தக்கதல்ல. முன் சூத்திரத்தில் சீர் நிலை திரியாது என்று கூறப்பட்டது. இந்தச் சூத்திரத்தில் அப்படிச் சீர்திரிதலும் வழுவல்ல என்பது விளக்கப்படுகிறது.

### 9.3.4 மொழிமாற்று பொருள்கோள்

தொல்காப்பியர்,

*மொழிமாற்று இயற்கை*
*சொல்நிலை மாற்றிப்பொருள் எதிர் இயைய*
*முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்"* 409

என்கிறார்.

11. மொழி மாற்று பொருள்கோள் விளக்குக.

செய்யுளில் பொருள் எதிர்வந்து பொருந்தச் சொல் வருமிடங்களை மாற்றி முன்னும் பின்னும் பொருள் புரியச் சேர்ப்பது என்பதாம்,

சான்று :

"ஆரிய மன்னர் பறையின் எழுந்து இயம்பும்
பாரி பறம்பில் மேல் தண்ணுமை - காரி
விறன் முள்ளூர் வேங்கை வீதானாணும் தோளான்
நிறன் உள்ளூர் உள்ளது அலர்"

இதில் பாரி பறம்பின் மேல் தண்ணுமை, தான் நாணும் தோளான்

என்றும், விறன் முள்ளூர் வேங்கை என்னும் உள்ளூர் உள்ளதாகிய அலர், ஆரிய மன்னர் பறையின் எழுந்து இயம்பும் என்றும் முன்னும் பின்னும் மாற்றி மொழியினும் பொருள் பொருந்தி வரச் சொல்லல் 'மொழி மாற்று' ஆகும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## 9.4 தொகைச் சொல்வகை

உறவை உணர்த்தி வரும் பெயர் பகுதி, விகுதி எனப் பிரித்துப் பொருள் கொள்ள இயலாதன இதனையே தொல்காப்பியர்,

*"த,ந,நு,எ எனும் அவை முதலாகிய*
*கிளை நுதல் பெயரும் பிரிப்பப் பிரியா"* 410

என்கிறார்.

த,ந,நு,எ என்னும் எழுத்துக்களை முதலாகக் கொண்டு உறவு குறித்து வரும் பெயர்கள் பகுதி, விகுதி எனப் பிரித்துப் பொருள் கொள்ள இயலாதன.

சான்று : தமன் நமன் நுமன் எம்மான்

12. பகுதி, விகுதி எனப் பிரிக்க இயலா உறவு குறித்து வரும் பெயர்கள் எவை?

### 9.4.1 சொல் அடுக்கு

சொல் அடுக்கு என்பது இசை நிறைத்தல், அசை நிலையாய நிற்றல், பொருள் வேறுபாட்டுடன் சேர்தல் என்று மூன்று வகையினதாகும் என்பதை பின்வரும் நூற்பா வழி விளக்குகிறார்.

*"இசை நிறை நிலை பொருளொடு புணர்தல் என்று*
*அவை மூன்று என்ப ஒருசொல் அடுக்கே"* 411

சான்று :

'ஏஏஏ யம்பன் மொழிந்தனன்" (இசைநிறை)

'மற்றோ - மற்றோ' (அசைநிலை)

'உண்டு உண்டு' (பொருளொடு புணர்தல்)

13. சொல் அடுக்கு எத்தனை வகைப்படும்?

## 9.5 தொகை மொழிகள்

சொல்லோடு சொல் சேர்ந்து வரும் சொற்றொடர் தொடர்ச்சி தொகை மொழியாகும். இது வேற்றுமைத் தொகை, உவமத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை என அறு ஆகும் என்பதை தொல்காப்பியர் பின்வருமாறு விளக்குகிறார்.

*"வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே*
*வினையின் தொகையே பண்பின் தொகையே*
*உம்மைத் தொகையே அன்மொழித் தொகையே என்று,*
*அவ்ஆறு என்ப தொகை மொழி நிலையே"* 412

14. தொகை மொழி என்றால் என்ன?

15. தொகை மொழி எத்தனை வகைப்படும்

### 9.5.2.1 வேற்றுமைத் தொகை

தன் மதிப்பீட்டு வினாக்கள்

16. 'குன்றக் கூகை' - இதில் மறைந்துள்ள வேற்றுமை உருபு எது?

17. வினைத் தொகை என்றால் என்ன?

18. சதுரப் பலகை - இச்சொல்லை எந்தவகையான பண்புத் தொகையில் அடக்கலாம்?

"அவற்றுள்
*வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல்"* 413

தொகை மொழி ஆறினுள், வேற்றுமைத் தொகை, விரிந்து பொருள் கூற வேண்டிய இடத்து, விரியாது தொக்கி நின்று பொருள் உணர்த்தும் இயல்பினதாகும்.

சான்று : 1. நிலங்கடந்தான் 2. தலை வணங்கினான்
3. சாத்தன் மகன் 4. ஊர் நீங்கினான்
5. சாத்தன் கை 6. குன்றக் கூகை

### 9.5.2 உவமத் தொகை

தொல்காப்பியர்,

*"உவமத் தொகையே உவம இயல்"* 414

என்கிறார்.

உவமத் தொகை, உவம உருபுத் தொடர்ப்பொருள் போலப் பொருளுணர்த்துவதாம்.

சான்று :

'பவழவாய்' பவழம் போன்று சிவந்த வாய் என்று விரிந்து பொருள் தரும். வாயின் சிவப்புக்குப் பவழம் உவமையானது.

### 9.5.3 வினைத்தொகை

தொல்காப்பியர்,

*"வினையின் தொகுதி காலத்து இயலும்"* 415

என்கிறார்

வினைத்தொகை காலத்தை இடமாகக் கொள்ளும் இயல்புடையது.

சான்று : 'ஆடரங்கு' ஆடும் இடத்தை (அரங்கத்தைக்) குறித்தது.

### 9.5.4 பண்புத் தொகை

வண்ணம், வடிவு, அளவு, சுவை ஆகியவையும், அவை போன்ற மற்றவற்றின் குணத்தையும் கூறி, இதற்கு இது என்று ஒன்றைச் சிறப்பாகக் கூறும். இரண்டு சொல்லும் ஒரு பொருள் மேல் வரும் தன்மை உடைய எல்லாத் தொகைச் சொல்லும், பண்புத் தொகை ஆகும் இதனையே தொல்காப்பியர்,

*"வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று*
*அன்ன பிறவும் அதன் குணம் நுதலி*
*இன்னது இதுஎன வரூஉம் இயற்கை*
*என்ன கிளவியும் பண்பின் தொகையே"* 410

என்கிறார்.

சான்று

1. செந்தாமரை - (வண்ணப் பண்புத் தொகை)
2. சதுரப்பலகை - (வடிவுப் பண்புத் தொகை)
3. நெடுங்கழி - (அளவுப் பண்புத் தொகை)
4. தேன்பாகு - (சுவைப் பண்புத் தொகை)

### 9.5.5 உம்மைத் தொகை

தொல்காப்பியர்,

*இருபெயர் பலபெயர் அளவின் பெயரே*
*எண்ணியற் பெயரே நிறைப் பெயர்க் கிளவி*
*எண்ணின் பெயரொடு அவ் அறு கிளவியும்*
*கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே"* 417

என்கிறார்.

இரண்டு பெயர்கள், இரண்டுக்கு மேற்பட்ட பல பெயர்கள் முகத்தல் அளவைப் பெயர்கள், ஒன்று, இரண்டு என எண்ணும் எண்ணலளவைப் பெயர்கள், நிறுத்தல் அளவைப் பெயர்கள், எண்ணாகிய இயல்புப் பொருளுணர்த்தும் பெயர்கள் என உம்மைத் தொகை ஆறுவகையாகும்.

சான்று :

1. உவாப் பதினான்கு (இருபெயர்)
2. புலிவிற் கெண்டை (இரண்டுக்கு மேற்பட்ட பலபெயர்)
3. நாழி ஆழாக்கு (முகத்தலளவை)
4. ஒன்றே கால் (எண்ணலளவை)
5. தொடி அரை (நிறுத்தலளவை)
6. பன்னிரண்டு (எண்ணியல்)

### 9.5.6 அன்மொழித் தொகை

தொல்காப்பியர்

*"பண்பு தொக வரூஉம் கிளவியானும்*
*உம்மை தொக்க பெயர் வயினானும்*
*வேற்றுமை தொக்க பெயர் வயி னானும்*
*ஈற்று நின்று இயலும் அன்மொழித் தொகையே"* 418

என்கிறார்.

பண்புதொக வரும் சொல்லிலும், உம்மைத் தொக்க வரும்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

19. முகத் தலளவை பெயருக்குச் சான்று தருக,

20. உம்மைத் தொக்க வந்த அன்மொழிக்குச் சான்று தருக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

பெயரிடத்தும், வேற்றுமைத் தொக்க வரும் பெயரிடத்தும் முடிவில் வரும் அன்மொழித் தொகை.

சான்று

1. கருங்குழல் - பண்புத்தொகை பற்றி வந்த அன்மொழித் தொகை

2. உயிர்மெய் - (உயிரும் மெய்யும்) உம்மைத்தொகை பற்றிவந்த அன்மொழித் தொகை

3. பொற்றொடி - வேற்றுமை தொக்க வந்த அன்மொழித் தொகை

### 9.5.6.1 தொகைமொழியில், பொருள் நிற்கும் இடம்

தொல்காப்பியர்,

*அவைதாம்*
*முன்மொழி நிலையலும், பின்மொழி நிலையலும்*
*இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்*
*அம்மொழி நிலையாது அல்மொழி நிலையலும்*
*அந்நான்கு என்ப பொருள்நிலை மரபே"* 419

என்கிறார்.

தொகைகள் முன் மொழியில் பொருள் சிறந்து நிற்றலும், பின்மொழியில் பொருள் சிறத்தலும், முன் பின என இரு மொழிகளிலும் சிறத்தலும் இந்த இரண்டுமல்லாத வேறு ஒருமொழிமேல் (அல்மொழி) பொருள் சிறந்து நிற்றலும் என நான்கு வகையாகும்.

சான்று :

வேங்கைப் பூ (முன்மொழி நிலையல்)

அலைகடல் (பின்மொழி நிலையல்)

உவாப் பதினான்கு (இருமொழி நிலையல்)

வெள்ளாடை (அல்மொழி)

21. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய விளக்குக.

### 9.5.7 தொகை மொழியின் தன்மை

ஒரு சொல் தன்மை உடையதாக நடக்கும் இயல்பினது. அதாவது இரு சொற்களால் ஆன தொகை ஒரு சொல்லாய் இயங்குவது. இது ஒரு சொல்லின் முன்மொழி பெயராயின் பெயர்ச்சொல் நடையாகவும் முன்மொழி வினையாயின் வினைச்சொல் நடையாகவும் இயங்கும். இதனையே தொல்காப்பியர்

*"எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய"* 420

என்கிறார்.

சான்று : யானைக்கோடு

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 9.5.8 உயர்திணை உம்மைத்தொகை

உயர்திணையில் வரும் உம்மைத்தொகை, பலர் பாலுக்கு உரிய ஈறு பெற்று வரும். இதனையே தொல்காப்பியர்.

*"உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே*
*பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர்"* 421

என்கிறார்.

22 உயர் திணைக்குரிய உம்மைத்தொகை எந்த பாலுக்குரிய ஈறு பெறும்?

சான்று : கபில பரண நக்கீரர், கபிலரும் பரணரும் நக்கீரரும்

### 9.6 இன்ன என்னும் குறிப்பு மொழி

தொல்காப்பியர்,

*"வாரா மரபின வரக் கூறுதலும்*
*என்னா மரபின எனக் கூறுதலும்*
*அன்னவை எல்லாம் அவற்று அவற்று இயல்பால்*
*இன்ன என்னும் குறிப்புரை ஆகும்"* 422

என்கிறார்.

இயங்கும் இயல்பில்லாதவற்றை, இயங்குவனவாகக் கூறுதலும், கூறா இயல்புடையவற்றைக் கூறுவனவாகக் குறித்தலும் ஆகிய அத்தன்மை உடையனவற்றை எல்லாம், அந்தந்தப் பொருளின் இயல்பால், இத்தன்மை உடையன எனச்சுட்டுவது குறிப்புமொழி ஆகும்.

சான்று :

'அறநெறி ஈண்டு வந்து கிடந்தது' வந்தது என்ன என்பதைச் சொல்லால் விளக்காது, குறிப்பால் உணர்த்தி நின்றது.

### 9.7 இசை நிறை அடுக்கு

தொல்காப்பியர்,

*"இசைப்படு பொருளே நான்கு வரம்பு ஆகும்"* 423

என்கிறார்.

இசை நிறைத்து வரும்போது, ஒரு சொல்லடுக்கு நான்குமுறை வரும். இதற்குக் குறைவாகவும் வரும் என்றாலும், நான்குக்கு மேல் வராது. இசைப்படுபொருள் என்றது செய்யுளைக் குறித்தது.

23. இசை நிறைத்து வரும்போது ஒரு சொல்லடுக்கு எத்தனை முறை வரும்?

சான்று : ஆடுகோ, ஆடுகோ, ஆடுகோ, ஆடுகோ

### 9.8 விரைவுப் பொருள் அடுக்கு

விரைவுப்பொருள் குறிக்க அடுக்கி வரும் ஒரு சொல்லடுக்கு

தன் மதிப்பீட்டு வினாக்கள்

மூன்றுமுறை வரும் இதனையே தொல்காப்பியர்.

*"விரை சொல் அடுக்கே மூன்று வரம்பு ஆகும்"* 424

என்கிறார்.

சான்று : தீத்தீத்தீ

### 9.9 அசைநிலை அடுக்கு

24. விரைவுப் பொருள் குறிக்க ஒரு சொல்லடுக்கு எத்தனை முறை வரும்?

தொல்காப்பியர்

*"கண்டீர் என்றா கொண்டீர் என்றா*
*சென்றது என்றா போயிற்று என்றா*
*அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி*
*நின்றவழி அசைக்கும் கிளவி என்ப"* 425

என்றார்.

கண்டீர் என்றும், கொண்டீர் என்றும் சென்றது எனவும், போயிற்று எனவும் வரும் வினைச்சொற்கள் நான்கும், வினாவொடு பொருந்தி வரும்போது, அது அசைநிலை அடுக்கு ஆகும்.

சான்று : கண்டீரே கண்டீரே

#### 9.9.1 கேட்டை முதலியன (வழக்கில்லா அசைநிலைகள்)

கேட்டை, நின்றை, காத்தை, கண்டை என்னும் இந்த நான்கு சொல்லும் முன்னிலைப் பொருளில் வராத மற்ற இடங்களிலெல்லாம் அசைநிலையே ஆகும்.

25. கேட்டை, நின்றை, கண்டை எவ்வகைச் சொற்கள்?

கேட்டை, நின்றை, காத்தை, கண்டை என்பன இன்றைய வழக்கில் இல்லாத சொற்கள்.

*"கேட்டை என்றா நின்றை என்றா*
*காத்தை என்றா கண்டை என்றா*
*அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி*
*முன்னுறக் கிளந்த இயல்பு ஆகும்மே"* 426

### 9.10 வினைமுற்றின் இயல்பு

வினைமுற்றுச் சொல் என்பது, இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலத்தும் தன்மை முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடத்தும், உயர்திணை, அஃறிணை, பொதுத்திணை என்னும் மூன்று பொருள்களிலும் வினையாலும், குறிப்பாலும் என இரண்டாக வரும் ஆறுவகைச் சொல் என்பர் (பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என ஆறுவகை)

சான்று : சென்றனன் கரியன்

சென்றது கரிது

சென்றனை கரியை என மூன்று திணையில்

இறந்தகாலம் காட்டி வந்தன.

### 9.10.1 வினைமுற்று வேறுவிதி

*"எவ்வயின் வினையும் அவ்இயல் நிலையும்"* 428

மூன்று இடத்தும் வினையாலும், குறிப்பாலும் என இரண்டாக வருமென்று, முன் சூத்திரத்தில் சொல்லப்பட்ட விதிக்கு அடங்காமல் வினைமுற்றுச்சொல் பிற இடங்களிலும், நிலை பெறல் உண்டு.

சான்று : யார், எவன், இல்லை என்பன காலமும், இடமும் உணர்த்துதலில்லை.

### 9.10.2 அதற்கு முடிவு

*"அவைதாம்*
*தம் தம் கிளவி அடுக்குந வரினும்*
*எத் திறத்தானும் பெயர் முடிபினவே"* 429

வினைமுற்றுச் சொற்கள் தாம், சொற்கள் பல அடுக்கி வந்தாலும் (அடுக்குந வரினும்) அவை தம்முடன் இயையாது, முடிக்கும் பெயர் முன்னும் பின்னுமாக எப்படி வந்தாலும் (எத்திறத்தானும்) பெயரைக் கொண்டே முடியும்.

சான்று : நல்லறிவுடையன் சான்றோன் மகன் சாத்தன்

என அடுக்கி வரும்.

### தொகுப்புரை :

செய்யுள் ஈட்டச் சொற்கள் மற்றும் செய்யுளில் பொருள் கொள்ளும் முறைகள், ஆறுவகையான தொகை நிலைத் தொடர்கள், சொற்கள் செய்யுளில் விகாரப்படும் முறைகள் போன்றவை அனைத்தும் விளக்கப்பட்டுள்ளன.

### தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| 1 | - | 9.1 | ஐப் பார்க்க |
| 2 | - | 9.1.1 | " |
| 3 | - | 9.1.2 | " |
| 4 | - | 9.1.3 | " |
| 5 | - | 9.1.4 | " |
| 6,7 | - | 9.2 | " |
| 8,9 | - | 9.3 | " |

தன் மதிப்பீட்டு வினாக்கள்

26. வினை முற்றின் இயல்பு யாது?

| | | | |
|---|---|---|---|
| தன் மதிப்பீட்டு வினாக்கள் | 10 - | 9.3.2 | ஐப் பார்க்க |
| | 11 - | 9.3.4 | " |
| | 12 - | 9.4 | " |
| | 13 - | 9.4.1 | " |
| | 14,15 - | 9.5 | " |
| | 16 - | 9.5.1 | " |
| | 17 - | 9.5.3 | " |
| | 18 - | 9.5.4 | " |
| | 19 - | 9.5.5 | " |
| | 20 - | 9.5.6 | " |
| | 21 - | 9.5.7 | " |
| | 22 - | 9.5.8 | " |
| | 23 - | 9.7 | " |
| | 24 - | 9.8 | " |
| | 25 - | 9.9.1 | " |
| | 26 - | 9.10 | " |

**பயிற்சி வினாக்கள்**

**ஒரு பக்க வினாக்கள்**

1. செய்யுள் ஈட்டச் சொற்களைச் சான்று தந்து விளக்குக.

2. விகாரம் என்றால் என்ன? அதன் வகைகளை விளக்குக.

3. அடிமறி மாற்று பொருள்கோள் என்றால் என்ன? விளக்குக.

**கட்டுரை வினாக்கள்**

1. பொருள்கோள் என்றால் என்ன? அதன் வகைகளைச் சான்றுடன் விளக்குக.

2. தொகைநிலைத் தொடர் என்றால் என்ன? அதன் வகைகளைச் சான்றுடன் விளக்குக.

# அலகு - 10

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## எச்சச் சொற்களும், மரபுச் சொற்களும்

### அறிமுகம்

பொருள் முடிவுறாமல் நிற்கும் எச்சச் சொற்களின் இலக்கணம் மற்றும் அதன் வகைகள் மற்றும் சில மரபுச் சொற்களும், கிளவியாக்கம் முதல் உரியியல் வரை சொல் பற்றி விளக்கப்பட்டுள்ள செய்திகளைத் தவிர்த்து சொல்லப்படாத பகுதிகளும் விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

எச்சச் சொற்களின் இலக்கணம், அதன் வகைகள் மற்றும் முந்தைய இயலின் சொற்கள் பற்றி விளக்கப்படாத சொல் மரபுகளை விளக்குவதே இப்பகுதியின் நோக்கமாகும்.

### பாட அமைப்பு

10.1 எச்சச் சொற்களின் வகை

10.1.1 பிரிநிலை எச்சம்

10.1.2 வினை எச்சம்

10.1.3 பெயரெச்சம்

10.1.4 ஒழியிசை எச்சம்

10.1.5 எதிர்மறை எச்சம்

10.1.6 உம்மை எச்சம்

10.1.6.1 உம்மை எச்சம் - இன்னுமொரு விளக்கம்

10.1.7 'என' என்னும் எச்சம்

10.1.8 மற்றைய மூன்று எச்சங்கள்

10.1.8.1 குறிப்பெச்சம்

10.1.8.2 சொல் எச்சம்

10.2 இடர்க்கர்ச் சொல்

10.3 மரபு

10.4 ஈ, தா, கொடு என்னும் சொற்கள்

10.4.1 'ஈ' எனும் சொல்

10.4.2 'தா' எனும் சொல்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

10.4.3 கொடு எனும் சொல்

10.4.3.1 கொடு - இன்னுமொரு விளக்கம்

10.5 பெயர் மரபு

10.6 செய்யாய் எனும் சொல்

10.7 ஈ,ஏ என்னும் முன்னிலை ஈறுகள்

10.8 முதற்குறை

10.9 இடைச்சொல், உரிச்சொல், வினையெச்சம் - வேறுபாடு

10.10 தொடர்மொழிகள், புதிய சொற்கள்

10.11 குறிப்பால் உணரும் சொற்கள்

10.12 இருசொல் ஒருபொருள்

10.13 பன்மைக்கு ஆகும் ஒருமைப்பெயர்

10.14 முன்னிலை - பன்மை முடிவு ஆற்றுப்படையில்

10.15 தொகுப்புரை

பொருள் நிறைவுறாமல் இருக்கும் எச்சச் சொற்கள் மற்றும் அதன் வகைகள் மட்டுமின்றி இதுவரைக் கூறப்படாத சில சொல் மரபுகள் விளக்கப்பட்டுள்ளன.

**10.1 எச்சச் சொற்களின் வகை**

1. எச்சம் என்றால் என்ன?

பொருள் முடிவுறாமல் நிற்கும் சொற்கள், எச்சச் சொற்கள் எனப்படும்.

*"பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை*
*எதிர்மறை உம்மை எனவே சொல்லே*
*குறிப்பே இசையே ஆஎர் ஐந்தும்*
*நெறிப்படத் தோன்றும் எஞ்சு பொருட்கிளவி"* 430

2 எச்சம் எத்தனை வகைப்படும்?

இவை பிரிநிலை, வினையெச்சம், பெயரெச்சம், ஒழியிசை, எதிர்மறை, உம்மை, என, சொல், குறிப்பு, இசை, என்ற பத்துமாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

**10.1.1 பிரிநிலை எச்சம்**

*"அவற்றுள்*
*பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின"* 431

3. பிரிநிலை எச்சம் என்றால் என்ன?

பிரிநிலை எச்சம், பிரிக்கப்பட்ட பொருளுணர்த்தும் சொல் கொண்டு முடியும். பிரிவினை எச்சம் 'ஏ' காரப் பிரிவினை, 'ஓ' காரப் பிரிவினை என இரண்டாகும்.

சான்று :

'தானே கொண்டான்' - பிறர் கொண்டிலர் என்னும் பொருளுணர்த்திய

பிரிநிலை எச்சம்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 10.1.2 வினை எச்சம்

வினையெச்சச் சொல்லுக்குத் தெரிநிலை வினையும், குறிப்பு வினையுமே முடிவாக நிற்கும். அவ்விடத்தில் குறிப்பு வினை ஆக்கப் பொருள் தரவரும்.

*"வினைஎஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்*
*நினையத் தோன்றிய முடிவு ஆகும்மே*
*ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே"* 432

சான்று :

1. மருந்துண்டு நல்லன் ஆயினான், நோய் தீர்ந்து நலமானது ஆக்கம்
2. உழுது வந்தான் - இதில் உழவு ஆக்கம் உழுது வருதல்

உழுது வந்தான் என்னும் வினையெச்சம், வினைப்பெயரோடு முடிந்து, நிலையத் தோன்றலுக்கு எடுத்துக்காட்டானது.

4. 'உழுது வந்தான்' எவ்வகை எச்சம்?

### 10.1.3 பெயரெச்சம்

*"பெயர் எஞ்சு கிளவி பெயரொடு முடிமே"* 433

பெயரெச்சம் பெயர் கொண்டு முடியும். (வினையெச்சமாக நிற்க அதனை நிறைவு செய்ய பெயரைக்கொண்டு முடியும்)

சான்று : உண்ட சாத்தன் உண்ணும் சாத்தன்

5. பெயர் எஞ்சு கிளவி எதனைக் கொண்டு முடியும்?

### 10.1.4 ஒழியிசை எச்சம்

*"ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின"* 434

மன், தில், ஓ என்னும் இந்த மூன்று ஒழியிசை எச்சமும் ஒழியிசை கொண்டு முடியும்.

சான்று : கூரியதோர் வாள் மன் - கூர்மையற்ற வாள்
வருகதில் அம்ம வெம்சேரி சேர - வந்தால் இன்னது செய்வன்
கொளலோ கொண்டான் - கொண்டுய்யப் போம்வழி அறிந்தவன்

6. ஒழியிசை கொண்டு முடியும் மூன்று இடைச் சொற்கள் எவை?

### 10.1.5 எதிர்மறை எச்சம்

எதிர்மறைப் பொருளில் வரும், 'ஏ' கார எதிர்மறை எச்சம், 'ஓ'கார எதிர்மறை எச்சம், 'உம்' எதிர்மறை எச்சம் என்னும் மூன்று எதிர்மறை எச்சங்களும் எதிர்மறையிலேயே முடிவனவாம்.

*"எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின"* 435

சான்று :

யானே கொள்வேன் - யான் கொள்ளேன்

தன் மதிப்பீட்டு வினாக்கள்

யானோ கள்வன் - யான் கள்வனில்லை

வரலும் உரியன் - வராதும் இருப்பேன்

என எதிர்மறைப் பொருள்தர நின்றன.

### 10.1.6 உம்மை எச்சம்

ஒன்றன் வினை முடிவு மற்றொன்றுக்கும் பொருந்தி வருவது உம்மை எச்சம் ஆகும்.

*"உம்மை எச்சம் இரு வீற்றானும்*
*தன்வினை ஒன்றிய முடி பாகும்மே"* 436

உம்மை எச்சம், இரு வீற்றானும், பெறப்படும் பொருளாலும், முடிவாலும், இரண்டிடத்தும் தன்வினை உம்மையோடு தொடர்ந்த சொல்லுக்குப் பொருந்த முடியும்.

7. எதிர் மறையில் முடியும் எச்சங்கள் யாவை?

சான்று :

கந்தனும் வந்தான். கடம்பனும் வந்தான் என்பதில் இரண்டும் ஒரு வினை கொண்டன.

'கந்தன் வந்தான், கடம்பன் உண்டான்' என்பதில் வினை ஒன்றாது வேறானது.

### 10.1.6.1 உம்மை எச்சம் - இன்னுமொரு விளக்கம்

*"தன்மேல் செஞ்சொல் வரூஉம் காலை*
*நிகழும் காலமொடு வாராக் காலமும்*
*இறந்த காலமொடு வாராக் காலமும்*
*மயங்குதல் வரையார் முறை நிலையான"* 437

8. உம்மை எச்சம் என்றால் என்ன?

உம்மை எச்சத்தின் முன், எச்சச்சொல் உம்மை அல்லாத வேறு சொல்லாக வரும்போது நிகழ்காலத்தோடு எதிர்காலமும், இறந்த காலத்தோடு எதிர்காலமும் மயங்க வருவதைக் குற்றமெனக் கொண்டு நீக்க மாட்டார்கள் புலவர் பெருமக்கள்.

சான்று :

கூழுண்ணா நின்றான், சோறு முண்பான் எனவும் கூழுண்டான் சோறுமுண்பான் எனவும் மயங்கி வரும்.

### 10.1.7 'என' என்னும் எச்சம்

*" 'என' என் எச்சம் வினையொடு முடிமே"* 438

என என்னும் எச்சம் வினைச்சொல் கொண்டு முடியும்.

சான்ற : கார் எனக் கருத்தது.

### 10.1.8 மற்றைய மூன்று எச்சங்கள்

*"எஞ்சிய மூன்று மேல் வந்து முடிக்கும்*
*எஞ்சு பொருட் கிளவி இலஎன மொழிப"* 434

மீதமுள்ள சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசை எச்சம் என்னும் மூன்றும் தம்மேல் வந்து தம்மை முடிக்கும் எச்சச்சொல்லை ஏற்பதில்லை என்று கூறுவர் புலவர் பெருமக்கள். பிறசொல் ஏற்காது தாம் எச்சமாய் நிற்கும்.

#### 10.1.8.1 குறிப்பெச்சம் - இசையெச்சம்

*"அவைதாம்*
*தம் தம் குறிப்பின் எச்சம் செப்பும்"* 440

சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசை எச்சம் ஆகிய மூன்றும், சொல்லுபவர் குறிப்பால் எஞ்சி நின்ற பொருளை உணர்த்தும்.

சான்று :

'இளையதாக முள்மரம் கொல்க' எனும் குறளில் பகைவரை ஆரம்பத்திலேயே அழித்துவிட வேண்டும் என்னும் குறிப்புணுர்த்தியதால் குறிப்பு எச்சம்

'அகர முதல எழுத்தெல்லாம்' எனும் குறள் அதுபோல உலகு ஆதிபகவன் முதற்று எனும் எஞ்சிய பொருளைச் சுட்டியதால் இசை எச்சம்.

#### 10.1.8.2 சொல் எச்சம்

சொல் எச்சம் என்பது, ஒரு சொல்லின் முன்னும், பின்னும் சொல் மட்டும் எஞ்சி வரும் எச்சமாம். சொல் அளவு அல்லது என்றதால் தொடராய் எஞ்சுவது இல்லையாம்.

*"சொல் என எச்சம் முன்னும் பின்னும்*
*சொல் அளவு அல்லது எஞ்சுதல் இன்றே"*
441

சான்று : 'பிறவிப் பெருங்கடல் நீதுவர்' எனும் குறளில் இறைவனடி

சேர்ந்தார், பிறவிப் பெருங்கடல் நீந்துவார் என ஒரு சொல் வருவித்துக் கொள்வதால் இது சொல்லெச்சம்.

### 10.2 சில மரபுகள் (இடக்கர்ச் சொல்)

பலர் கூடியுள்ள சபை, இங்கே கூறக்கூடாத சொல்லை மாற்றி, நேர்பொருளை மறைத்து வேறுவிதமாகக் கூறும் சொல் இடக்கர்ச் சொல் ஆகும்.

*"அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்"* 442

தன் மதிப்பீட்டு வினாக்கள்

9. என எச்சம் எதனைக் கொண்டு முடியும்?

10. மற்றைய மூன்று எச்சங்கள் என்று கூறப்படுபவை எவை?

11. சொல் எச்சம் என்றால் என்ன?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

12. இடர்க்கர் சொல் என்றால் என்ன?

13. மரபு என்றால் என்ன?

14. ஈ,தா,கொடு என்னும் மூன்று சொற்கள் உணர்த்தும் பொருள் என்ன?

சான்று :

கால்மேல் நீர் பெய்து வருக. இது உடல் சுத்தி செய்து வருக என்பதைக் கூற வந்தது.

### 10.3 மரபு

அவையில் கூறப்படுபவற்றை மறைத்து மாற்றிக் கூறும்போது நெடுநாள் வழக்கில் உள்ளவற்றை மறைக்காது வழக்கின்படியே கூறுதல் வேண்டும். இதுவே மரபுச்சொல் ஆகும்.

*"மறைக்கும் காலை மரீஇயது ஒராஅல்"*
443

சான்று : ஆட்டுக்குட்டி யானைக்கன்று

ஆட்டுக்கன்று, யானைக்குட்டி எனல் மரபுவழு.

### 10.4 ஈ,தா, கொடு என்னும் சொற்கள்

ஈ, தா, கொடு என்றுள்ள இம்மூன்று சொற்களும், இல்லாமையால் ஒருவன் இருப்பவனிடம் சென்று இரந்து கேட்கக் கூறுவனவாம்.

*"ஈ தா கொடு எனக் கிளக்கும் மூன்றும்*
*இரவின் கிளவி ஆகு இடன் உடைய"* 444

சான்று : சோறு 'ஈ' சோறு 'கொடு' ஆடை 'தா'

#### 10.4.1 ஈ எனும் சொல்

'ஈ' என்னும் சொல், மிகத் தாழ்ந்த நிலையில் உள்ள ஒருவன் தன்னிலும் உயர்ந்தவனிடம் கேட்டுப் பெறக் கூறுகிற சொல் ஆகும்.

*"அவற்றுள்*
*'ஈ' என் கிளவி இழிந்தோன் கூற்றே"* 445

#### 10.4.2 தா எனும் சொல்

*"தா என் கிளவி ஒப்போன் கூற்றே"* 446

'தா' என்னும் சொல் தனக்குச் சமமானவனிடம் சென்று கேட்கக் கூறும் சொல் ஆகும்.

#### 10.4.3 'கொடு' எனும் சொல்

கொடு என்னும் சொல் தன்னிலும் தாழ்ந்த ஒருவனிடம் சென்று, அவனிலும் உயர்ந்தவன் உதவக் கேட்கும் சொல்லாம்.

##### 10.4.3.1 கொடு - இன்னுமொரு விளக்கம்

*" 'கொடு' என் கிளவி படர்க்கை ஆயினும்*

*தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பில்*
*தன்னிடத்து இயலும் என்மனார் புலவர்"* 448

'கொடு' என்னும் சொல் முன்னின்று கேட்பதால், இது படர்க்கை இடத்துக்கு உரியதாயினும், தன்னை வேறொருவனாகக் கருதிக் கேட்கும் இடத்து தன்மை இடத்தும் வரும் என்பர் புலவர் பெருமக்கள்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

### 10.5 பெயர் மரபு

*"பெயர்நிலைக் கிளவியின் ஆஅகுநவும்*
*திசைநிலைக் கிளவியின் ஆஅகுநவும்*
*தொல்நெறி மொழிவயின் ஆஅகுநவும்*
*மெய்நிலை மயங்கின் ஆஅகுநவும்*
*மந்திரப் பொருள்வயின் ஆஅகுநவும்*
*அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே"* 449

ஒருவருக்கோ அல்லது ஒன்றிற்கோ பெயர் சுட்டிச் சொல்லும் முறையில் குறியீடுகளாகி வருகின்றனவும், திசைச்சொல், சொல்லும் முறை மாறுபட்டு வருவனவும், நீண்ட நெடுங்காலமாக வழங்கி வரும் பழமொழிகள் போன்றவற்றில் திரிந்து பொருள் மயக்கமாகச் செய்யுளிடத்து மாறுபட்டு வருவனவும், மந்திரச் சொற்களுடன் வேறு சொற்கள் கலந்து வருவனவும் ஆகிய இசை எல்லாமே மரபுவழி, வழக்கில் வழங்கிவரும் தன்மை உடையனவே அல்லாமல் இசை இலக்கண வரம்புக்கு உட்பட்டு வரவேண்டிய கட்டாயம் இல்லையாகும்.

### 10.6 செய்யாய் எனும் சொல்

செய்யாய் என்னும் வாய்பாட்டின் முன்னிலை வினைமுற்றுச் சொல் ஆய் என்று வரும் இதன் இறுதி கெட்டு 'செய்' என்று வருமிடங்களும் உண்டு.

*"செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்*
*செய் என்கிளவி ஆகு இடம் உடைத்தே"* 450

சான்று : உண்ணாய் - உண் நடவாய் - நட

'ஆய்' என்னும் ஈறு கெட இவ்வாறு வரும்.

### 10.7 ஈ ஏ என்னும் முன்னிலை ஈறுகள்

*"முன்னிலை முன்னர் 'ஈ'யும் 'ஏ'யும்*
*அந்நிலை மரபின் மெய்ஊர்ந்து வருமே"* 451

முன்னிலை வினைச்சொல் முன்வரும் ஈ,ஏ இரண்டும் அம்முன்னிலைச் சொல்லோடு பொருந்தும் மெய் ஏற்று வரும்.

சான்று : 'சென்றீ பெரும் நிற்றகைக்குநர் யாரோ'
'அபடிலோலை தொட்டனை நின்மே'

15. முன்னிலை வினைமுற்றுச் சொல் சான்று தருக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

16. முதற்குறை என்றால் என்ன?

17. இடைச் சொல் எவ்வகைச் சொல்?

### 10.8 முதற் குறை

குறைவாகச் சொல்ல வேண்டிய இடத்துச் சொற்களைக் குறைக்கும் இடமறிந்து குறைக்க வேண்டும். குறைக்கப்பட்டாலும் அச்சொற்கள் பொருள் குன்றாமல் நிறைவுடைய பெயரியல்பு உடையவையாகும்.

சான்று : தாமரை, மரையிதழ் எனக் குறைந்தது.

### 10.9 இடைச்சொல், உரிச்சொல், வினையெச்சம் - வேறுபாடு

இடைச்சொற்கள் என்பவை எல்லாம் வேறுபடுத்திக் காட்டும் சொற்களாகும். தாம் சார்ந்து நின்ற மற்ற சொற்களிடம் வேறுபாடு தோன்றச் செய்யும் என்பது குறிப்பு.

*"இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே"* 455

உரிச்சொற்களிலும் வேறுபாடு தோன்றச் செய்வதற்கு உரியன உள்ளன. அதைப்போல வினை எச்சச் சொல்லும் வேறுபடும்.

### 10.10 தொடர் மொழிகள், புதிய சொற்கள்

*"உரை இடத்து இயலும் உடனிலை அறிதல்"*
*458*

உரை இடத்தில் வழக்கத்தில் மாறுபட்ட சொற்கள் உடன் நின்று பொருளுணர்த்தினும் விலக்காது கொள்ள அறிதல் வேண்டும். இதற்கிது சிறிது பெரிது என வருமிடத்து சிறிது பெரிது என மாறுபட்ட சொற்கள் உடனின்று பொருள் தந்தன.

*"கடிசொல் இல்லை காலத்துப் படினே"* 452

கால வேறுபாட்டிற்கு ஏற்ப ஒரு மொழியில் புதிய புதிய சொற்கள் தோன்றி வழங்கிவரும் இவற்றை, இச்சொற்கள் பழமையானவை. அல்ல என்று நீக்குதல் கூடாது.

### 10.11 குறிப்பால் உணரும் சொற்கள்

இப்பொருள் இத்தன்மையது என்று சொல்லும் போது, சொற்களால் அல்லாமல், சொற்களால் அல்லாமல், சொல்லுபவனின் குறிப்பால் பொருளறியும் சொற்களும் உள்ளன.

*"முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே*
*இன்ன என்னும் சொல் முறையான"* 459

சான்று :

'குழை கொண்டு கோழி எறியும் வாழ்க்கையர்' இதில் தங்கத்தாலான காதுக் குழையணி கொண்டு கோழி மீது வீசும் செல்வ வாழ்க்கை வளம், குறிப்பால் உணர்த்தலானது.

### 10.12 இருசொல் ஒரு பொருள்

ஒரே பொருள் குறித்து இருசொல் வேறுபாடு இன்றி தொடர்ந்து வருமாயின் அவற்றை விலக்கக் கூடாது.

சான்று :

நிவந்தோங்கு பெருமலை நிவத்தல், ஓங்குதல் இரண்டும் ஒருபொருள் குறித்த பிரியாது நின்ற இருசொல்

### 10.13 பன்மைக்கு ஆகும் ஒருமைப்பெயர்

*"ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி*
*பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே"* 461

ஒருமை குறிக்கும் பெயர்ச்சொல் பன்மைக்கும் ஆகிவரும் இடமும் உண்டு.

சான்று :

'ஏவ இளையர் தாய வயிறு கரிப்ப என்பதில் தாய் என்று ஒருமையில் வந்த பெயர், இளையர் என்றதால் தாயர் எனப் பன்மைப் பொருள் தந்தது.

### 10.14 முன்னிலை - பன்மை முடிபு ஆற்றுப் படையில்

முன்னலைப் பொருளுணர்த்தி வரும் ஒருமைச்சொல், பன்மையில் முடிந்தாலும், அம் முடிவு நீக்கத்தக்கதல்ல. இத்தகைய முடிவுகள் ஆற்றுப்படைநூல் செய்யுளமைப்பில் வரும்.

*"முன்னிலை சுட்டிய ஒருமைக்கிளவி*
*பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே*
*ஆற்றுப்படை மருங்கில் போற்றல் வேண்டும்"* 462

சான்று :

'கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ' என முன்னிலை ஒருமை சுட்டித் தொடங்கிய மலைபடுகடாம் பாடல், 'இரும்பே ரொக்கலொடு பதமிகப் பெறுகுவீர்' எனப் பன்மையில் முடிந்துள்ளது.

### 10.15 புறனடை (நூல் வழக்கின் முதன்மை)

*"செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்*
*மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்*
*பல்றே செய்தியின் நூல்நெறி பிழையாது*
*சொல் வரைந்தறியப் பிரிந்தனர் காட்டல்"* 463

செய்யுளிலும், வழக்கிலும் உள்ளவற்றை இவ்வதிகாரத்தில் பொருள் விளங்கச் சொல்லியவைகளையும், பழமையான பல்வேறு நூல்களால் கூறியுள்ள குறிப்புக்களையும் செய்திகளையும் தவறின்றி விதிப்படி பொருளுணரும் விதத்தை அறிய வேண்டும்.

தன் மதிப்பீட்டு வினாக்கள்

18. குறிப்பால் பொருள் உணர்த்தும் சொல்லுக்குச் சான்று தருக.

19. ஒரே பொருள் குறிக்கும் இருசொல் அருகாமையில் வர இயலுமா?

20. பன்மைக்கு ஆகும் ஒருமைப் பெயருக்குச் சான்று தருக.

21. ஆற்றுப் படை செய்யுளமைப்ட எத்தகைய முடிவு கொண்டது?

தன் மதிப்பீட்டு வினாக்கள்

## தொகுப்புரை

கிளவியாக்கம் முதல் உரியியல் வரை சொல் பற்றி விளக்கப்பட்டுள்ள செய்திகளைத் தவிர்த்து சொல்லப்படாத பகுதிகள் இப்பகுதியில் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. எச்சச்சொற்களின் இலக்கணம், அதன் வகைகள் மற்றும் முந்தைய இயலில் சொற்கள் பற்றி விளக்கப்படாத சொல் மரபுகள் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

## தன்மதிப்பீட்டு வினாவிற்கான விடைக் குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| 1,2 | - | 10.1 | ஐப் பார்க்க |
| 3 | - | 10.1.1 | " |
| 4 | - | 10.1.2 | " |
| 5 | - | 10.1.3 | " |
| 6 | - | 10.1.4 | " |
| 7 | - | 10.1.5 | " |
| 8 | - | 10.1.6 | " |
| 9 | - | 10.1.7 | " |
| 10 | - | 10.1.8 | " |
| 11 | - | 10.1.8 | " |
| 12 | - | 10.2 | " |
| 13 | - | 10.3 | " |
| 14 | - | 10.4 | " |
| 15 | - | 10.6 | " |
| 16 | - | 10.8 | " |
| 17 | - | 10.9 | " |
| 18 | - | 10.11 | " |
| 19 | - | 10.12 | " |
| 20 | - | 10.13 | " |
| 21 | - | 10.14 | " |

## பயிற்சி வினாக்கள்

### ஒரு பக்க வினாக்கள்

1. உம்மை எச்சம் என்றால் என்ன? விளக்குக

2. ஈ,தா,கொடு என்னும் சொற்க்ள் உணர்த்தும் பொருளைத் தெளிவுபடுத்துக

3. ஈ,ஏ முன்னிலை ஈறுகளாகும் விதத்தினை விளக்குக

4. வேற்றுமைப் பொருளில் வரும் சொற்கள் மற்றும் அவை மொழியில் அமையும் விதத்தினை விளக்குக.

5. குறிப்பால் பொருள் உணர்த்தும் சொற்களை விளக்குக.

**கட்டுரை வினா**

1. எச்சம் என்றால் என்ன? அதன் வகைகளை விளக்குக.

தன் மதிப்பீட்டு வினாக்கள்